# கம்பரின் உவமை விளக்கம்

[ அகர வரிசையில் ]



ஆசிரியர் :
தெ. துரைசாமி, M.A.
தமிழ்ப் பேராசிரியர்,
தேசியக் கல்லூரி, திருச்சிராப்பள்ளி - 620 001.

அருளகம்
19, வைத்தியலிங்கம் பிள்ளை குடியிருப்பு,
கிராப்பட்டி, திருச்சிராப்பள்ளி - 620 012.

முதற்பதிப்பு – மார்ச்சு — 1980.



**விலை ரூ. 9-00.**

## படைப்பு

வணிகத்திற்கு நல்லிலக்கணமாகவும் இலக்கியமாகவும் திகழ்ந்து மறைந்த என்னுடைய மாமா உயர்திரு ரும. கு. விசுவநாத பிள்ளை அவர்களுக்கும், அவர்களின் மனைவியாரும் என்னுடைய அருமை அத்தையுமான காலஞ்சென்ற சீதை அம்மாள் அவர்களுக்கும் இந்நூலைப் பணிவன்போடு நன்றி உணர்வுடன் படைக்கின்றேன்.

விஜய் பிரிண்டர்ஸ் & பப்ளிஷர்ஸ்,
உறையூர், திருச்சி - 620 003.

பேராசிரியர் இரா. இராதாகிருஷ்ணன், எம்.ஏ.,
தேசியக்கல்லூரி, திருச்சி அவர்களின்

# அணிந்துரை

---

கரையில்லாக் கல்வியைச் சில நாளில் யாரே முற்றக் கற்றூர்? சில பேருக்குச் சிறு கல்வி கூடப் பேராணவத்தை விளைத்து விடப் பார்க்கிறோம். செல்வத்தோடு, செல்வச் செருக்குப்போம். பதவியோடு, பதவிச் செருக்குப் போம். ஆனால், கல்விச் செருக்குப் போகாது. ஒரு பிறவியில் கற்ற கல்வி எழுமைக்கும் வரும். உடன் செருக்கும் நிலைத்துவிடும். அழுத்தமான கல்விப் பெருமை கொண்ட இந் நூலாசிரியர் அன்பர். தெ. துரைசாமி செருக்கற்ற பண்பாளர். அவர் பண்பின் திறத்தை அவருடன் பழகி உணர்ந்து உரைக்கிறேன். அவர் கல்வியின் ஆழத்தை இந்நூலுள் நீங்கள் காணலாம்.

கம்பனோடு கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாக உற வாடி வருபவன் நான். இது செருக்கில்லை. கவிச் சக்கரவர்த்தி கம்பன் திருக்கோவில் கருவறைக் காப்பாளருள் ஒருவன் என்ற பெருமிதம். கம்பன் பண்ணைக்கு ஒருவன் எனப் போந்த ஏவல் கூவல் செய்யும் பணியாளனின் அடிமைப் பெருமிதம் கம்பனைப் பற்றி என்ன சொல்ல!

தமிழ் மொழியின் இனிமையை எல்லாம் ஒரு சேர வெள் ளமாக ஓட விட்டவன் கம்பன். அவனோடு பிரயாணம் செய் பவர்கள் எல்லோரும் தமிழின் துறைகள் அனைத்திலும் நின்று நீராடிக் களிக்கலாம். அவன் கவி, ஒப்பற்ற ஒரு ''சான் றோன் கவி''.

ஏனைய காப்பியங்களைக் கற்கும் போது காப்பிய ஆசிரி யர்களின் கவிச்சிறப்பும், அறிவுத் திறமும் உள்ளத்தைக் கொள்ளை கொள்கின்றன. அக் காப்பிய ஆசிரியர்களே நம்

உள்ளத்தை நிறைக்கிறார்கள். ஆனால், கம்பராமாயணத்தைக் கற்றாலோ, கம்பன் கரைந்துவிடப் பாத்திரங்களே முன்னிற் கின்றன. நூலாசிரியர்களிடையே கம்பன் ''தனித்வம்'' உடையவன். தன்னையே தமிழுக்குக் கொடுத்துவிட்ட தனி முதல்வன் கம்பன். இராமகாதையிலே கரைந்து தன்னை இழந்த கம்பனைக் கற்போர் கம்பனில் கரைந்து தம்மை இழப் பர். உண்மையாகக் கம்பனைக் கற்றுணர்ந்தோர் அகந்தைக் களை அகலப் பணிவுடன் அடக்கம் அரும்பப் பண்பு பூத்து ஒழுக்கம் பழுக்கச் சாந்தத்தில் கனிவர். ''போகம் கனி ஒன்று'' துய்ப்பர்.

அன்பர் துரைசாமி கம்பநாடகம் என்று இராம காதையை நாடகமாக்கிய போது கம்பனை ஒருமுறை கற்றார். இராமதூதன் என்று அனுமனை நூலுள் கொணர்ந்த போது அடுத்த முறையாகக் கம்பனைக் கற்றுணர்ந்தார். இப்போது கம்பனில் உவமைகளை எல்லாம் கண்டு முறையாகத் தொகுத்த போது மூன்றாம் முறையாகக் கம்பனைக் கற்று ணர்ந்து தெளிந்துள்ளார். இயல்பிலேயே வாழ்வில் நன் னடை வாய்க்கப் பெற்ற அன்பர் துரைசாமி இப்போது நடை ஏற்றம் எய்திச் சிகரத்தில் உள்ளார். கம்பனின் காப்பிய உள்ளீடான விச்வரூபத்தைத் தரிசிக்க விரும்பும் தமிழர்க்கு அன்பர் துரைசாமியின் இந்நூல் படிகட்டி வழிகாட்டும்.

உள்ளி, உள்ள எல்லாம் உவந்து ஈவோரை வள்ளியோர் என்பான் கம்பன். மழை அவ்வாறு வழங்கும் வள்ளலாம். கம்பனைப் பத்தனாக்கிப் பித்தனாக்கினானே காப்பியத் தலைவன் இராமன், அவன் ஒரு வள்ளல். நினைந்து, நினைந்து ஒன்றித் துப் பாத்திரங்களோடு ஊறித் தன்னிடம் பொருந்திய கல் விச் செல்வத்தை முழுதுமாகத் தன்னை மறந்து கொடுத்

தானே கம்பன் அவன் ஒரு வள்ளல். கம்ப வள்ளல் தந்ததை எண்ணி, எண்ணித் தொகுத்தும், வகுத்தும் தமிழுலகுக்கு வழங்கியுள்ள அன்பர் துரைசாமி ஒரு வள்ளல்.

'' உதவி, செயப்பட்டார் சால்பின் வரைத்து ''—ஆகவே தமிழுலகம் இந்த நூலை ஏற்று, ஏற்றவாறு பயன் கொள்ளு மாக.

நூலும், நூலாசிரியரும் உயர்ந்தோர்க்கு உதவிய உதவி யொப்பவே வளர்க.

10—3—80<br>திருச்சி.

இங்ஙனம்,<br>இரா. இராதாகிருஷ்ணன்

# என்னுரை

---

கம்பராமாயணம் விரும்பிப் படிப்போர்க்கு தெள்ளமுதமெனச் சுவையூட்டும் ஒரு நன்னூலாம். கம்பரின் இராமாயணத்தில் உள்ள கதை நிகழ்ச்சிகளை நாடக வடிவில் கொணர்ந்து **கம்பநாடகம்** என்னும் பெயரில் வெளியிட்டேன். அடுத்து **இராமதூதனைப்** பற்றிய நூலொன்றினை எழுதி வெளியிட்டது அண்மைச் செய்தியாகும். இந்நூலில் உள்ள உவமைகள் வேறுபட்ட கருத்துக்களை விளக்குவன. வந்த உவமைகள் மீள வாராவண்ணம் தொகுக்கப்பட்டுள்ளன. கம்பராமாயணத்திலுள்ள உவமைகளைத் தொகுக்க வேண்டுமென்ற என் ஆர்வத்திற்கு வடிவு கொடுக்குமாறு என்னைத் தூண்டியவர் என்னுடன் பணியாற்றும் பேராசிரியர் புலவர் ம இலக்குமிநாராயணன், M.A., B.T என்றால் மிகையில்லை. கம்பரின் உவமை விளக்கம் என்னும் இந்நூல் அகரவரிசையுடன் மிகச் சிறப்பாக வெளிவருவதற்கு அவர் எடுத்துக்கொண்ட முயற்சியினை எவ்வாறு பாராட்ட வல்லேன்? இந்நூலைப் படித்து ஆலோசனைகள் பல கூறி நெறிப்படுத்திய பேராசிரியர். வித்துவான் வி. நாகராசன், M. A. B. O L அவர்களுக்கு என் நன்றியினை உரித்தாக்குகிறேன்.

தமிழ் மக்கள் வாழும் இடங்களில் எல்லாம் நாளும் தம் சொல்லாற்றலினால் கம்பராமாயணத்தைப் பரப்பிவரும் தேசியக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் இரா. இராதாகிருஷ்ணன், M.A. அவர்கள் இந்நூலுக்கு அணிந்துரை நல்கியிருப்பது நான் செய்த தவப்பேறெனலாம். அவருக்கு என் நன்றியினை இருகரம் கூப்பித் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந் நூலின் முகப்பு அட்டையினைத் தம் கைவண்ணத் தால் வண்ண ஓவியமாகத் தீட்டி அழகூட்டியுள்ள பல்கலை வல்லுநர் கோமாஸ் அவர்களுக்கு என் உளங்கனிந்த நன்றி உரித்தாகுக.

திருச்சி, உறையூரில் நூல்களை நல்லமுறையில் பதிப் பித்து வரும் விஜய் அச்சகத்தின் உரிமையாளர் உயர்திரு மானுவேல் இராஜகுமார் B.A., B.Ed. அவர்கள் என்னுடைய இராமதூதனைப் போல இந்த நூலும் சிறப்பாக வரவேண்டு மென்று தனிக்கவனம் செலுத்தி வெளிவருமாறு செய்துள் ளமைக்கு என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அகரவரிசையில் உவமைகள், உவமைப் பொருள்கள்' படலங்கள் ஆகியவற்றுடன் வெளிவரும் இவ்வாராய்ச்சி நூலுக்குத் தமிழகம் பேராதரவு நல்கும் என்று எண்ணு கிறேன்.

தெ. துரைசாமி.



# ஆசிரியர் பற்றிய குறிப்புகள்

## (*BIBLIOGRAPHICAL DATA*)

| | | | |
|---|---|---|---|
| 1 | நூலின் பெயர் | ... | கம்பரின் உவமை விளக்கம். (அகர வரிசையில்) |
| 2 | ஆசிரியர் | ... | தெ. துரைசாமி |
| 3 | பிறந்த தேதி | ... | 4—3 - 1933 |
| 4 | மொழி | ... | தமிழ் |
| 5 | பதிப்பு | ... | முதற்பதிப்பு |
| 6 | வெளியிட்ட தேதி | ... | மார்ச்சு 1980 |
| 7 | பதிப்புரிமை | ... | தெ. துரைசாமி M.A., அருளகம் 19, வைத்தியலிங்கம் பிள்ளை குடியிருப்பு, கிராப்பட்டி, திருச்சிராப்பள்ளி-620012. |
| 8 | பயன்படுத்திய தாள் | ... | 10·9 தாள் (சேஷாயி மில்ஸ்) |
| 9 | நூலின் அளவு | ... | 1/8 கிரௌன் சைஸ் |
| 10 | அச்சு வகை | ... | 10 பாயிண்ட் |
| 11 | பக்கங்களின் அளவு | ... | 200 |
| 12 | அச்சிட்ட படிகள் | ... | 1100 (ஆயிரத்து நூறு) |
| 13 | அச்சிட்டவர் | ... | திரு. மானுவல் இராஜகுமார், B A. B.Ed., விஜய்பிரிண்டர்ஸ் & பப்ளிஷர்ஸ், உறையூர், திருச்சிராப்பள்ளி. |
| 14 | கட்டு அமைப்பு | ... | சாதா பைண்டிங் |
| 15 | விலை | ... | ரூபாய் 9-00 |
| 16 | வெளியிட்டவர் | ... | தெ. துரைசாமி, M. A., 'அருளகம்' 19, வைத்தியலிங்கம் பிள்ளை குடியிருப்பு, கிராப்பட்டி, திருச்சிராப்பள்ளி - 620012. |
| 17 | பொருள் | ... | திறனாய்வு |

# கம்பரின் உவமை விளக்கம்



## உவமையாராய்ச்சி

"கல்வி சிறந்த தமிழ்நாடு புகழ்க் கம்பன் பிறந்த தமிழ் நாடு" என்று பைந்தமிழ்ப் புலவர் பாரதியார், கற்ருேர்க்குத் தான் வரம்பாகிய கவிச்சக்கரவர்த்தி கம்பரை நாவாரப் போற்றுகிருர். 'கம்பநாடன் கவிதை போல் கற்ருேர்க்கு இதயம் களியாதே' என்னும் புகழ்மொழி கம்பராமாயணத்தில் தோய்ந்து நின்றதால் பிறந்ததன்ருே !

1 "தமிழெனு மளப்பருஞ் சலதி தந்தவன்"
2 "என்றுமுள தென்றமி ழியம்பியிசை கொண்டான்"
3 "தென்சொற் கடந்தான் வடசொற்கலைக் கெல்லை
தேர்ந்தான்"

என்னும் இப்புகழ் மொழிகள் மூன்றனுள் கம்பர் முதலிரண்டால் அகத்திய முனிவனையும், எஞ்சிய ஒன்ருல் இராமபிரானையும் போற்றுவர். இவை கம்பர் பிரானுர்க்கு முற்றிலும் பொருந்தும் என்பதில் ஐயமில்லை.

உலகப் பெருங் கவிஞர்களில் ஒருவராகச் சான்ருேர் இவரைப் போற்றுவர். 'கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவி பாடும்' என்பதால் இவருடைய ஆற்றல் வேறுவிதமாக விளங்கக் காணலாம்.

---

1. பால — தாடகை — 34.
2. ஆரணி — அகத்திய — 47
3. அயோ — நகர் — 141

கம்பராமாயணம்

மாநிலம் போற்றும் இதிகாசங்களான இராமாயணம், பாரதம் என்னும் இரண்டும் இரு கண்களெனக் கூறத்தகுவன. இவற்றின் தோற்றம், அறியமுடியாத தொன்மை உடையது. சங்க இலக்கியங்கள் இவ்விரு நூற்கதை நிகழ்ச்சிகளை அங்கொன்றும் இங்கொன்றும் ஆகக் குறிப்பிடுகின்றன. இவற்றுள் இராமாயணத்தின் பெருமையினைக் கம்பராமாயணம் கொண்டு உவமை என்னும் ஒரு நோக்கில் காண்பதே இந் நூலின் கருத்தாம்.

கம்பராமாயணத்திற்குப் பல பதிப்புக்கள் உள்ளன. அவற்றுள் உயர்திரு. வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியாரின் கம்பராமாயணப் பதிப்புக்களை அடிப்படையாகக் கொண்டே இந்நூலில் உவமைகள் தொகுக்கப்பட்டு, அகர வரிசைப் படுத்தப்பட்டுள்ளன. பதிப்புக்களைப் பற்றிய விவரங்களைக் கீழே காணலாம்.

1948 ஆம் ஆண்டு — யுத்தகாண்டம் - இரண்டுபகுதிகள்.

1957 ஆம் ஆண்டு — பால, ஆரணிய, கிட்கிந்தா, சுந்தர காண்டங்கள்.

1958 ஆம் ஆண்டு — அயோத்தியா காண்டம்.

ஆறு காண்டங்களில் 10565 பாடல்களும், 115 படலங்களும் அடங்கும். இருசீரால் அமைந்த வஞ்சித்துறைப் பாடல்கள் ஏழும், முச்சீரால் அமைந்த வஞ்சி விருத்தப் பாடல்கள் இருநூற்று இருபத்திரண்டும், நாற்சீரால் அமைந்த கலிவிருத்தப் பாடல்கள் ஐயாயிரத்து நூற்று எழுபத்தைந்தும், ஐஞ்சீரால் அமைந்த கலித்துறைப் பாடல்கள் ஆயிரத்து எழுநூற்றைந்தும், அறுசீர், எழுசீர், எண்சீர் ஆசிரிய விருத்தங்களால் முறையே அமைந்த மூவாயிரத்து இருநூற்றுத்தொண்ணூறும், நூற்று அறுபதும், ஆறும் ஆக இவற்றை வகைப் படுத்தி விரித்தும் கூறலாம். "அறம் வெல்லும், பாவந்

தோற்கும்' என்னும் உண்மையை மையக் கருத்தாகக் கொண்டு விளங்குவது கம்பராமாயணம்.

## கவிஞனும் காப்பியமும்

ஒரு காப்பியம் சிறந்து விளங்க வேண்டுமென்றால் சிறந்த கதை இன்றியமையாதது. அதனைச் சிறந்த முறையில் சொல்லவல்ல புலவன் வேண்டும். அவனும் பல்கலை வல்லுநனாயின் பொன்மலர் நாற்றம் பெற்றாற் போலாகும். கவிஞரைப் பற்றி, [5]'செவ்விய மதுரஞ் சேர்ந்தநற் பொருளிற் சீரியகூரிய தீஞ்சொல், வவ்விய கவிஞர்' என்று கம்பர் கூறியுள்ளார்.

காப்பிய இலக்கணங்கள் கட்டுக் குலையாமல் நிறைந்திருத்தல் வேண்டும். காப்பியப் புலவன் என்பவன் தன்னோடு தன் கவித்திறத்தால் பிறரை ஈர்த்துச் செல்லும் ஆற்றல் உடையவன் ஆவான்.

[6]'இரைத்துவந் தமிழ்தின் மொய்க்கு மீயினம்' என்னுமாறு கம்பரின் பாவமுதினை மாந்தி ஆன்றோர் களிப்புறுவர்.

'பாவின் சுவைக்கடல் உண்டெழுந்து கம்பன்
பாரிற் பொழிந்த தீம்பாற்கடலை
நாவின் இனிக்கப் பருகுவமே அதன் நன்னயம்
முற்றும் தெளிகுவமே'

என்று கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை கணித்துக் கூறுகிறார்.

## உவமையின் இயல்பு

கம்பராமாயணத்திற்குச் சுவையூட்டுவனவற்றுள் உவமையும் ஒன்றாகும். ஒருபொருளை நன்குணர, அதனைப் பிறவற்றோடும், பிறவற்றை அதனோடும், இணைத்து ஒப்பீட்டு

---

4. சுந்தர — ஊர்தேடு - 95.
5. பால — நகர - 1
6. பால — உலா - 5

முறையில் ஆய்வர். இவ்வாறு தாம் ஆய்ந்து உணர்ந்த வற்றை உரைக்கும் ஆற்றலுடையோர் சிறந்த கவிஞராவர். 'புலி போலப் பாய்ந்தான்', 'புலி வீரனைப் போலப் பாய்ந் தது'. இவ்வாறு இருவகையிலும் உவமித்து அழகு சேர்ப்பர். காணாத பொருளைக் கொண்டு காணும் பொருளையும், காணும் பொருளால் காணாத பொருளையும் உவமிப்பர்.

'அருந்ததி யனையாள் நங்கை', 'ஆப்போலும் ஆமா' என்னும் எடுத்துக்காட்டுகளைக் கூறலாம்.

அன்றாட வாழ்க்கையில் எளிய மக்கள்கூட உவமை கலந்து உரையாடுவர். காட்டாக ஓர் உரையாடலை நோக்கு வோம். 'தோசையைத் திருப்பிப் போடலாம், இட்லியைத் திருப்பமுடியுமா?' என்று ஒரு பெண் தன்னை யாராலும் வெல்ல முடியாது என்பதை எவ்வளவு அழகாகப் புலப் படுத்துகிறாள்! கவிஞர் தம் நுண்மாண் நுழைபுலத்தால், ஏற்ற உவமைகளால் காப்பியத்திற்குச் சுவையூட்டுவதில் வியப்பில்லையே!

தொல்காப்பினர் உவமையியலில் உவமையின் இயல்பு பாகுபாட்டினை,

"வினைபயன் மெய்யுரு என்ற நான்கே
வகைபெற வந்த உவமைத் தோற்றம்"

என்னும் நூற்பாவில் கூறியுள்ளார். உவமைகள் ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்களில் கலந்துவரும் என்றும், உயர்ந்த பொருளின்மேல் வருமென்றும், சிறப்பு, நலன், காதல், வலி, ஆகிய நான்கு தன்மைகளையும் இருப்பிடமாகக் கொண்டு வரு மென்றும், உவமை பொருந்துமிடத்துத் தாழ்ந்த பொரு ளோடும் கூடிவருமென்றும் விளக்குவார். மேலும் உவமை யும் பொருளும் ஒத்திருத்தல் வேண்டுமென்றும், உவமிக்கும் பொருளை உவமையாகக் கூறலாமென்றும் உரைத்துள்ளார்.

தண்டியலங்கார ஆசிரியர் இருபத்து நான்கு வகை உவமைகளைக் குறிப்பிட்டுள்ளார். அப்பைய தீட்சதர்,

சித்திர மீமாம்ஸை என்னும் நியாய சாத்திர நூலில் உவமையினை,

> ''உவமை என்னும் தவலரும் கூத்தி
> பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து
> காப்பிய அரங்கில் கவினுறத் தோன்றி
> யாப்பறி புலவர் இதயம்
> நீப்பறு மகிழ்ச்சி பூப்ப நடிக்குமே''

என்று அழகோவியமாகத் தீட்டிக் காட்டுவார். எனவே, சொல்லவந்த புலவர்க்கும், நூலில் ஆர்வம் கொள்வோர்க்கும், உவமை பல்சுவை இன்பத்தை அளிக்கும் என்பது போதரும்.

இராமாயணம் என்னும் காப்பிய மாளிகையினைப் பல்லாற்றானும் புனைந்து அழகுபடுத்தும் கவிஞர், உவமை மூலம் தனிச் சிறப்பு ஏற்படப் பெரிதும் நாட்டம் செலுத்தியுள்ளார் என்பது கண்கூடு. அவருடைய உவமையாற்றலை அளவிடுவது கடலைக் கையால் முகந்து குடிப்பது போலாகும். எனினும் 7' ஆசை பற்றி யறைய லுற்றேன்'' என்னும் கவிஞர் மொழியினைத் துணையாகக் கொண்டு யான் துய்த்த உவமைகளை ஈண்டுக் குறிப்பிட விழைகிறேன்.

இயற்கை

எதனையும் கூர்ந்து நோக்கும் திறன் பெரும் புலவர்க்கே உரியது. காப்பியத்திற்குப் பின்னணியாக இயற்கையினை உவமைகள் வாயிலாக நம் கண் முன்னால் கம்பர் கொணரும் அழகினை நோக்குவோம்.

வயலும் வயல் சார்ந்த மருத நிலத்தில் உள்ள பொய்கையில் அவர் கண்ட காட்சியினை நாமும் அவ்வாறே காண்கிறோம். மருதநிலமென்னும் அரசு கொலு வீற்றிருக்கும் அழகினைக் கவிஞர் எவ்வளவு அழகாகப் புனைந்துள்ளார் !

---

7 தற்சிறப்பு-4

[8] தடாகத்தில் உள்ள தாமரைகள் அரங்கில் உள்ள விளக்குகளாம்! ஆண்டு ஆடும் மயில்கள் விறலியராம்! முழங்கும் இடியொலி முழவொலியாம்! பரவிச் செல்லும் அலைகள் திரையினை நிகர்க்கின்றனவாம்! வண்டுகள் யாழிசைக்கக் குவளைகள் ஆவலுடன் காண்கின்றனவாம்! என்னே கவிஞரின் உவமைத்திறன் கூடிய கற்பனைத்திறன்!

கவிஞரின் பார்வையில் காட்டாற்று வெள்ளம் எவ்வாறு பாய்ந்து ஓடியது?

[9] மதயானையின் ஓட்டம் போல் காட்டாறு கரை புரண்டு ஓடியது.

[10] தம்மிடம் சிக்கியவரின் பொருட்களை எல்லாம் கவர்ந்து விடும் பொருட் பெண்டிர் போன்று மலையிலிருந்து பாய்ந்து வரும் வெள்ளநீர் எல்லாப் பொருட்களையும் தன்னோடு ஈர்த்துச் சென்றதாம்.

[11] பொருட்களைச் சுமந்து செல்லும் வணிகமக்களைப் போன்று வெள்ளநீர் கிடைத்தவற்றை எல்லாம் அள்ளிக் கொண்டு ஓடியது.

[12] வேந்தன் புகழென வெள்ளம் பரந்து பாய்ந்தது.

[13] உறையினுள் மறையும் வாள்போல வானில் மின்னல் மறைந்தது.

[14] செருக்களத்து வாட்கள் போலத் தடாகத்தில் வாளைமீன்கள் துள்ளின.

[15] மழைத் துளிகள் அம்புகள்போல் சொரிவன.

---

8 பால — நாட்டு - 4
9 பால — ஆற்று - 16
10 பால — ஆற்று - 6
11 பால — ஆற்று - 7
12 பால — ஆற்று - 5
13 கிட்கி — கார் - 106
14 கிட்கி — பம்பை - 21
15 கிட்கி — கார் - 16

16 நிலவொளி பரத்தல் கள்ளின் வெள்ளம் செல்வது போலாகும்.

17 அந்தகாரம் அருள் நீங்கிய நெஞ்சைவிடக் கரியது.

18 உருத்திரனின் நெற்றிக்கண் போன்று ஆதவன் எழுந்தான்.

19 வெண்கொற்றக் குடைகள் போன்று விண்ணில் அன்னப் பறவைகள் கூட்டமாகப் பறந்து சென்றன.

இவ்வாறு இயற்கைக் காட்சிகளைப் படம் பிடித்தாற் போன்று கவிஞர் உவமைகள் ன் வாயிலாக விளக்கும்பொழுது மகிழ்ச்சி அடைகிறோம்.

### ஒரு பொருள் - பல உவமைகள்

ஒரு பொருளை விளக்கப் பல உவமைகளை எடுத்தாண்டுள்ளார். 20கோதாவரியாறு, சடாயு பறித்தெறிந்த இராவணனின் இரத்தின மணிமாலை போன்றுள்ளது என்றும், 21இராவணனால் கவர்ந்து சென்ற சீதையின் கூந்தலின் இருந்து நழுவி விழுந்த மாலை போன்றது என்றும் காப்பிய நிகழ்ச்சிப் பொருள்களைக் கொண்டே விளக்கிய கவிஞர், 22சான்றோர் கவியெனச் சென்றதாகவும் உவமித்துள்ளார்.

### உவமையில் உருவம்

காப்பிய மாந்தர்களைக் கவிஞர் உவமை வாயிலாக அறிமுகப்படுத்தும்பொழுது அவர்களை நேரில் கண்டாற்போன்ற உணர்வடைகிறோம். அவர்களில் சிலரைக் காண்போம். கவிஞர் காப்பிய நாயகன் இராமபிரானை இறையாக எண்ணி

---

16 பால — உண்டா - 1
17 ஆரணி — மாரி - 139
18 பால — மிதிலை - 150
19 பால — எழுச்சி - 12
20 கிட்கி — ஆறு - 29
21 கிட்கி — ஆறு - 27
22. ஆரணி — சூர்ப்-1

வழிபட்ட இடங்கள் எண்ணில. அறத்தின் நாயகனைக் கவிக் கூற்ருகத் தாமே போற்றுவார். பிற பாத்திரங்கள் இராம பிரானின் எழிலில் ஈடுபட்டுப் போற்றியதையும் புலப்படுத்து வார். இன்னிறத்தன் இவ்வண்ணத்தன் என்று எழுதிக் காட்டவொண்ணு ஒருவனை எவ்வாறு எடுத்தியம்புவது?

23 "காவி யுங்கருங் குவளையு நெய்தலுங் காயாம்

பூவை யும்பொரு வானவன் புலம்பினன் தளர்வான்"

இங்கே கூறிய பல மலர்கள் போன்று இராமபிரானின் திருமேனி நிறத்தால் ஒத்திருந்தது. முன்னரே பல உவமை களை மொழிந்தும் அவனுடைய நிறத்தினை முற்றும் விளக்க உவமை இல்லையே என்பதைக் கூறிய கவிஞரின் வாக்கினைக் காண்போம்.

24"மையோமர கதமோ மறி கடலோ மழை முகிலோ

ஐயோவிவன் வடிவென்பதொ ரழியாவழ குடையான்"

அவனுடைய கைகளும், கால்களும், திருமுகமும் செந் நிறம் பெற்று ஏனைய கரிய நிறத்தோடு தோன்றுவதை வீடணன் கண்டு மகிழ்வதாகக் கம்பர் குறிப்பிட்டுள்ளார்.

25"கார்க் கடல் கமலம் பூத்த தெனப் பொலி வானைக் கண்டான்"

26"இருட், கனியும் போல்பவன்"

என்று கம்பர் உரைத்த உவமைகளின் மூலம் நாமும் இராமபிரானை அகக் கண்களால் கண்டு இன்புறுகிறேம்.

---

23 கிட்கி—கார் - 51 24 அயோ—கங்கை-1
25 யுத்த—வீடண-132 26 பால—மிதிலே-139

27 "இரக்கமென் ெறுருபொரு ளிலாத நெஞ்சினர்
அரக்கரென் றுளர்சில ரறத்தி னீங்கிஞர்"

என்று அரக்கரால் நேர்ந்த துன்பத்தினை முனிவர்கள் இராமபிரானிடம் கூறி வருந்தினர். நல்லவர்க்குத் தொல்லை இழைக்கும் அரக்கரின் நெஞ்சினை நஞ்சினும் கொடியதாகக் கம்பர் கூறுவர்.

28 "ஆல காலந் திரண்டன்ன வாக்கையர்"
என்னும் இவ்வுமையால் அரக்கரின் நிறமும், கொடுஞ் செயலும் ஒருங்கே தோன்றும்.

கரிய நிறம் கொண்டு விளங்கிய குகன் தாயினும் நல்லவனாக இராமனுக்குத் தோன்றினன். அவனைக் கவிஞர்

29 "அல் செறிந்தன்ன நிறத்தினன்" என்றுரைப்பர்.

இலக்குவனைச் 30 செம்மலை என்றும், சிதையை 31 ஓவியப் பாவை என்றும் உவமிப்பர்.

அன்பு

இராமனுக்கும் அவனைச் சார்ந்தோர்க்கும் இடையே நிலவிய அன்பின் பிணைப்பினைச் சில பாடல்களில் உள்ள உவமைகளால் அறியலாம்.

32 பாற்கடல் அமிழ்தம் உண்ணவந்த தேவர் போன்று இராமனின் முடிசூட்டு விழாவினைக் காணவந்த அரசர் தோன்றினர்.

---

27 ஆரணி—அகத்தி-12 28 ஆரணி — கரன் - 11
29 அயோ —கங் - 29 30 ஆரணி-சடாயுகாண் -15
31 பால—மிதிலை-39 32 அயோ—கைகே - 67

[33]''இரைத்துவந் தமிழ்தின் மொய்க்கு மீயினம்'' போல மகளிர் இராமனின் திருமேனியழகினைக் காண விரைந் தனர்.

[34] பள்ளத்தில் பாயும் வெள்ளமென வந்தனராம்.

[35] காட்டிற்குச் சென்ற இராமனை அழைத்துவரப் புறப் படுவீர் என்னும் சொற் கேட்ட மக்கள் சந்திரனைக் கண்ட கடல் போல உவகையில் திளைத்தனர்.

குருவிடம் கற்றுவரும் தயரதன் சிறுவர்களைக் [36]காரின் வரவு கண்டு களிக்கும் பயிர்போல அயோத்தி மக்கள் கண்டு களிப்படைந்தனர்.

வருகை

காப்பியத்தில் சிலருடைய வருகையினை உவமை கொண்டு அறிவிப்பதைக் காண்போம்.

[37]'பொன்னின் மலை வருகின்ற போல்' பரசுராமனும், [38]'நஞ்சு வெற்புருவு பெற்றிடை நடந்ததென' விரா தனும்,

[39] 'நீணெடுங் காலொடுஞ் சென்ற' கும்பகர்ணனும்,

[40] 'தாயை மூன்னிய கன்றனையான்', (தேவி முன்னால் சென்ற) அனுமனும்,

இராமனை நாடிவந்த [41]'' நஞ்சமென வஞ்சமகளான '' சூர்ப்பணகையும், இந்திரசித்தின் சிறப்பினை அறிந்து,

---

33 பால-உலா - 5
34 பால-உலா - 4
35 அயோ-ஆறு - 24
36 பால-திருவவ - 131
37 பால-பரசு - 7
38 ஆரணி-விராதன் - 7
39 யுத்த-கும்ப - 72
40 சுந்த-சூளா - 11
41 ஆரணி-சூர்ப் - 31

42 தழலின்மேல் மிதிக்கின்றுள் போல் வந்த மண்டோதரியும், சீதையின் முன்னர் முதியவர் கோலத்தில் சென்ற,

43 'பூப்பொதி யவிழ்ந்தன நடைய'ளை இராவணனும் ஈண்டு குறிப்பிடத் தக்கவராவர்.

அடுக்கி வரும் உவமைகள்

ஒரே பாடலில் மூன்று உவமைகளின் மூலம் சீதையின் மகிழ்ச்சியினைப் புலப்படுத்துவார். இராமனின் அடையாள மோதிரத்தினை அனுமன் காட்டக் கண்ட சீதையின் உள்ளம் துன்பம் நீங்கி, இன்புற்றது.

44 "இழந்த மணி புற்றர வெதிர்ந்ததெனவாளுள்"

45 "குழந்தையை யுயிர்த்தமல டிக்குவமை கொண்டாள்"

46 " பழந்தன மிழந்தன படைத்தவரை யொத்தாள் "

கம்பர் இன்னெரு பாடலில் மாலை உவமையாகப் பல உவமைகளைக் கூறியுள்ளார்.

47 " நவ்வி நோக்கிய ரிதழ்நிகர் குமுதத்தி னருந்தேன்
வவ்வி மாந்தரிற் களிமயக் குறுவன மகரம் "

மானின் விழி போன்ற மாதரின் அதரபானத்தை ஒத்த செவ்வாம்பல் மதுவை உண்டு, கட்குடித்தாற்போல முதலைகள் மயங்கின.

இனி உவமைக் குவியலெனச் சொல்லத்தகும் இரண்டு பாடல்களை நோக்குவோம்.

---

42 யுத்த-இராவ-சோக-45
43 ஆரணி-சடாயுஉயிர்-22
44 சுந்தர - உருக் - 65
45 சுந்தர - உருக் - 65
46 சுந்த - உருக் - 65
47 கிட்கி - பம்பை - 16

[48]"அயில்விழிக் குமுதச் செவ்வாய்ச் சிலைநுத லன்னப் போக்கின்
மயிலியற் கொடித்தே ரல்குன் மணிநகைத் திணிவேய் மென்றோள்
குயின்மொழிக் கலசக் கொங்கை மின்னிடைக் குமிழோர் மூக்கின்
புயலியற் கூந்தன் மாதர் குழாத்தொடுந் தாரை போனாள்"

இப்பாடலில் மகளிரின் அவயவங்களை விளக்க எத்துணை உவமைகள் வந்துள்ளன!

சீதையின் உறுப்பழகினை வெளிப்படுத்தும் பாடலாக ஒன்றைக் காண்போம்.

[49]"மஞ்சொக்கு மளகவோதி மழையொக்கும் வடித்த கூந்தல்
பஞ்சொக்கு மடிகள் செய்ய பவளத்தின் விரல்களைய
அஞ்சொற்க ளமுதி னள்ளிக் கொண்டவள் வதன மைதீர்
கஞ்சத்தி னளவிற் றேனுங் கடலினும் பெரிய கண்கள்"

இவ்வாறு பல உவமைகளைக் கூறியும் தேவியின் அழகினை முற்றும் உணர்த்த முடியவில்லையே என்னும் கவிஞரின் ஏக்கம் பிறிதொரு பாடலின் மூலம் குறிப்பாகத் தென் படுகிறது. [50] சீதையின் செவிகளை வர்ணிக்க வந்தவிடத்து உவமிக்கத்தக்க பொருளில்லை என்பதை, உலகிலுள்ள பொருள்கட் கெல்லாம் உவமையாகச் சொல்லக் கூடியதற்கு உவமை உண்டோ என்ற வினாவின் மூலம் விளக்கினார்.

---

48 கிட்கி - கிட்கி - 77 49 ஆரணி - மாரீ - 70
50 கிட்கி-நாட-53

ஆற்ருமை

ஒரு பொருளைச் சிறப்பாகப் படைக்க வேண்டுமென்ருல், அதற்கு முன பல முயற்சிகளை எடுத்துக் கொண்டு இருக்க வேண்டும். 51 பிரமன் சீதையின் இன்சொற்களைப் படைக்க வேண்டி, வேய்ங்குழல், யாழ், குழல், கிளி, நாகணவாய்ப் பறவை ஆகியவற்றைப் படைக்கும் ஆற்றலில் தேர்ச்சி பெற்றவனுயினுனும்! இவற்ருேடு நிகரான பிற பொருள் களையும் படைத்துத் தேவியினது இன்சொற்களை நன்ருகப் பொருந்துமாறு செய்தான். எனினும் ஏற்றபொருளை இனியேனும் படைப்பானு என்று கம்பர் வினவியது சிந்தனை யைத் தூண்டுவதாய் அமைந்துள்ளது. இராமனின்,

52 நீண்டு குழன்று நெய்த்திருண்டு நெறிந்து செறிந்து
நெடுநீலம்

பூண்டு புரிந்து சரிந்துகடை சுருண்டு புகையு நறும்
பூவும்

வேண்டு மல்ல வெனத்தெய்வ வெறியே கமழு
நறுங் குஞ்சி''

காடேகியபின் திரண்ட சடையாய் விட்டது. எனவே அதனுடைய தன்மைகள் மேகத்திற்குச் சிறிதுமில்லை யாதலால் அம்மேகம் கூந்தலுக்கு உவமையாகாது என்ருர்.

இவ்வாறு உவமையாவதற்குரிய தன்மையினைப் பெருத பொருள்களை எவ்வாறு உவமையாகக் கொள்வது? இக்கூற் றினையொட்டி ஆசிரியர் பலவாருகக் கூறியதைக் காண்போம். மரபாக வரும் உபமானத்தைக் காட்டிலும் உபமேயம் சிறந்து விளங்குவதாகக் குறிப்பிட்டுள்ளார்.

---

51 கிட்கி-நாட-62 52 சுந்த-உருக்-57

686



உவமையினும் விஞ்சும் பொருள்

[53]மகளிரின் சாயலைப் பெறும் மயில்கள்.

[54]அதரபானம் போன்று சுவைக்கும் பொய்கை நீர்

[55]"கடைசியர் முகமென மலர்வன கமலம்"

[56]"கரும்பை யுஞ்சுவை கைப்பித்த சொல்லியர்"

[57]மகளிரின் கூந்தலைப் போலச் சோலையில் திரியும் மேகங்கள்

[58]"விழியின், கயல்புடை பெயர்வன"

சிறப்புவமைகள்

கம்பர், சில பொருள்களை உவமைகளாகக் காட்டுவதில் பெரும் நாட்டங் கொண்டுள்ளார் என்பதனை அவற்றை அவர் பலமுறை எடுத்து மொழிவதில் இருந்து அறிய முடிகிறது. பசுவும் கன்றும், உயிரும் உடலும், அங்கை நெல்லிக்கனி, மத்துறுதயிர், ஆற்றலுடைய நெருப்பு என்னுமிவற்றை இவ்வரிசையில் இணைக்கலாம்.

பசு—கன்று

[59]அந்திப் பொழுதில் திரும்பும் தாய்ப்பசுவைக் காணும் கன்றினைப் போலக் கைகேயினைக் கண்ட இராமன் உணர்வு வயப்பட்டான்.

இராமன் முடிசூடவும், தயரதன் காடேகவும் அமைந்த சூழ்நிலையினை அறிந்த அமைச்சர் [60]'இரண்டு கன்றினுக் கிரங்குமோ ராவென' இருந்தார்.

[61]இராமனையும் இலக்குவனையும் பிரியும் சுமித்திரை

53 பால - நாட்டு - 42 54 கிட்கி - பம்பை - 12
55 பால - நாட்டு - 43 56 சுந்த — ஊர் - 197
57 பால - நாட்டு - 42 58 பால - நாட்டு - 42
59 அயோ - கைகே - 104 60 அயோ - மந்திர - 34
61 அயோ - நகர் - 153

இரண்டு கன்றுகளைப் பிரியும் தாய்ப்பசு போல மனம் கலங்கினாள்.

62பேரருளார், தம்மைச் சார்ந்தோர் இடருறுவாராயின் கன்றினைக் கண்டு கசிந்து பால் சுரக்கும் தாய்ப்பசு போல மனம் கசிந்துருகி இடர் களைவர்.

63இராமனைக் காணும் மகளிர், தன்னை நோக்கிக் குதித்து வரும் கன்றைக் காணும் தாய்ப்பசு போலாயினர்.

64இராமனைத் தோளில் தாங்கிய மாருதி ஈன்ற கன்றினைத் தாங்கிய தாயினை ஒத்தான்.

உயிர்–உடம்பு

65 உடம்பு உயிரைத் தொடர்வது போலத் திருமண நாளில் சிதை இராமனுடன் தீயை வலமாகச் சுற்றி வந்தாள்.

66 உடம்புகள் தோறும் உயிர் சென்று புகுதல்போல வெள்ளத்தின் போக்கு அமைந்திருந்தது.

67 'வேந்தனைத் தருது மீண்டு' என்னும் சொல், உயிரில்லாத் யாக்கைக்கு உயிர் வந்தாற்போல அயோத்தி மக்கட்கு மகிழ்வூட்டிற்று

98" உயிரெலா முறைவதோ ருடம்பு மாயினன்"

69உயிர்நீங்கியவுடன் உடல் வீழ்வது போலத் தயரதன விழுந்த இடத்தில் கோசலை விழுந்தாள்.

70 உடலை விட்டுச் சென்ற உயிர் மீள வந்து உடலைக்

---

| | | | |
|---|---|---|---|
| 62 | யுத்த - வேலே - 49 | 63 | அயோ - கைகே - 94 |
| 64 | யுத்த - முதற் - 219 | 65 | பால - கடிமண - 91 |
| 66 | பால - ஆற்று - 20 | 67 | அயோ - ஆறு - 22 |
| 68 | பால - அரசி - 10 | 69 | அயோ - நகர் - 30 |
| 70 | ஆரணி-சடாயு உயிர் - 158 | | |

காணாது நின்றாற் போலப் பர்ணசாலைக்குத் திரும்பிய இராமன் அவண் சீதையைக் காணாமல் அல்லலுற்றான்.

[71] 'உள்ளுறை யுயிரிலா வுடலு மொக்குமே' — மன்ன னில்லாத நாடு.

[72] எழுபது வெள்ள வானர யாக்கைக்கு ஓருயிர் வந்தாற் போலச் சுக்கிரீவன் இராவணனின் மகுட மணியினைப் பறித்து மீண்டான்.

அங்கை நெல்லிக்கனி

[73] 'தான் கூறுவது இறையென்னும் உண்மைப் பொருள். அதனைக் கையிலுள்ள நெல்லிக்கனி போன்று விளங்கக் காண லாம்' என்று பிரகலாதன் இரணியனிடம் கூறினான்.

[74] சம்பாதி கூற்றினால் சீதையைப் பற்றிய செய்தியினை அங்கை நெல்லிக் கனியின் தன்மைபோல அறிந்ததாக வானர வீரர்கள் உரைத்தனர்.

[75] கையிலுள்ள மோதிரத்தையும், இராமன் கூறிய மொழிகளையும் கொண்டு தன்னை இராம தூதன் எனக் கையி லுள்ள நெல்லிக்கனி போலச் சீதை ஐயுறாது அறிந்திடல் வேண்டுமென அனுமன் வேண்டினன்.

[76] ஓரரசன் உலகத்தினைக் கையுறு நெல்லிக்கனியெனத் தன்வசப்படுத்தினன்.

மத்துறு தயிர்

[77] "தாழிப் படுதயி ரொத்தார் மாருதி தனிமத் தென்பதோர் தகையானன்"

---

71 அயோ - ஆறு - 7　　72 யுத்த - மகுட - 33
73 யுத்த - இரணி - 58　　74 கிட்கி - மயேந் - 1
75 சுந்தர - உருக் - 25　　76 பால - குலமுறை - 10
77 சுந்தர - அக்க - 30

இது அனுமனின் போராற்றலை விளக்கும் பாடல். அக்க குமாரனோடு உடற்றிய போரில் அனுமன் தனியனாகத் தனி மத்தாக நின்று அரக்கர் கடலைக் கடைந்து சிதறியோடச் செய்தான். தாழியில் உள்ள தயிர் மத்தினால் கடையப்படும் பொழுது கட்டுக் குலைந்து சிதறுவது போல அரக்கர் போர்க் களத்தில் அனுமனை எதிர்க்க முடியாமல் அழிந்து ஒழிந்தனர்.

இவ்வுவமை கொண்டு பல கருத்துக்களையும் ஆசிரியர் விளக்குவார்.

78 இலக்குவன் நாகபாசத்தினால் தாக்குண்டதை அறிந்த விடணன் மனம் மத்துறு தயிரெனக் கலங்கியது.

79 தேவியைப் பிரிந்ததால் ஒரு நிலை நில்லாத உயிரோடு இராமன் துன்பம் அடைந்ததற்கும் இவ்வுவமையினையே கவிஞர் கூறினார்.

நெருப்பு

80 எரிகின்ற நெருப்பில் காய்ச்சிய இரும்பினைச் செவியில் செருகியது போன்ற இராவணனின் கொடு மொழிகளை மாரீசன் கேட்டுத் துயருற்றான்.

81 புற்காட்டினை அழிக்கும் நெருப்புப் போல அனுமன் அரக்கரை அழித்தான்.

82 "எரியிடை வீழ்ந்த விட்டி லல்லரோ" — சிதை நெருப்பு; அரக்கர் விட்டில்.

"83 தீவினையில் உழல்பவர் மதுவருந்துதல், நெருப்பினை நெய் கொண்டு அணைப்பது போன்று வீண் முயற்சியோடு

78 யுத்த-நாக-208 79 சுந்தர-சூளா-69
80 ஆரணிய-மாரீ—176 81 சுந்தர-அக்க-26
82 யுத்த-மாயா சனக-86 83 கிட்கி-கிட்கி-91

துன்பப் பெருக்கத்திற்கும் ஏதுவாகும்' எனச் சுக்கிரீவன் தன் செயலுக்குக் கழிவிரக்கங் கொண்டான்.

[84] ''மன்னர் என்போர் எரியெனற் குரியார்''

[85] இராமனைப் பிரியும் முனிவர் எரியுறு மெழுகானுர்

நெருப்பு ஒன்றே பல பொருட்களுக்கு உவமையானதைக் கண்டோம்.

கவிஞர்

சிறந்த கவிஞரை ஆசிரியர் உவமைகள் மூலம் பாராட்டியுள்ளார்.

[86]''இரத மீட்டுருங் கவிஞரைப் பொருவின தேனீ ''

[87]''கவிஞர் நாவருஞ், சொல்லெனத் தொலைவில் தூணி''

[88]கற்பக மரம் போன்றவர் கவிஞர்; அவர்தம் சொற்பொருள் போலப் பொய்கை நீரும் ஆழமுடன் தெளிவும் பெற்றுள்ளது.

[89]'புவியினுக்கு அணியாய்' என்னும் பாடலில் சான்றோர் கவியினைக் கோதாவரியாற்றுடன் உவமித்துக் கூறும் அழகே அழகு.

சடையப்ப வள்ளல்

தன்னை ஆதரித்த சடையப்ப வள்ளலைக் கம்பர் நன்றி உணர்வோடு உவமை வாயிலாகக் காப்பியத்தில் இடம்பெறச் செய்துள்ளார்.

---

84 கிட்கி-வாலி - 137
85 அயோ-கங்கை- 65
86 கிட்கி - கார் - 38
87 யுத்த - முதற் - 249
88 கிட்கி - பம்பை 5
89 ஆரணி - சூர்ப் -1

90'சடையன் வெண்ணெயிற், றஞ்சமென் றோர்களைத் தாங்கும் தன்மை போல்' குரங்குகள் கடலில் அணை கட்ட எறிந்த மலைகளை நளன் தாங்கினன்.

91கருடன் வருகையால், இலக்குவனையும் வானரர்களையும் சடையப்பவள்ளல் வாழும் பிணித்திருந்த நாகபாசம், திருவெண்ணெய் நல்லூரை அடைந்த சான்றோரின் பசியென அகன்றது.

92"வெண்ணெய்ச் சடையன்றன் புகழ்போ லெங்கும்
பரந்துளதால்" (நிலவு)

வள்ளல்

உள்ளதை உவந்தளிக்கும் அறவுணர்வுடைய வள்ளலைக் கவிஞர் பலவாறாக உவமித்துப் போற்றியுள்ளார்.

93இரப்பவர்க்குக் கரவாமல் உவந்தளிக்கும் வள்ளலிடம் செல்லும் இரவலர் போல, இலக்குவன் தன்னிடம் போர் புரிய எதிர்ப்பட்ட அரக்கர்க்கு அவர் மனம் சலிக்கும் வண்ணம் அம்பு மழையால் சிறப்பித்தானும்!

94"வள்ளி யோரின் வழங்கின மேகமே"

கைம்மாறு கருதாத் தன்மையினைச் சுட்டும் உவமை இது.

உலோபியர்

உலோபியரை ஆசிரியர் கடிந்துரைத்த விதத்தினை அறிவோம்.

95"ஈகலான் பொருள், காத்தவன் புகழெனத் தேயுங்
கற்பினள்" (சூர்ப்பணகை),

---

90 யுத்த - சேது - 9
91 யுத்த - நாக - 263
92 பால - மிதிலை - 73
93 யுத்த - முதற் - 147
94 பால - ஆற்று - 4
95 ஆரணி - சூர்ப் - 26

[96]"ஈத்துணு, முச்சிறு வாழ்க்கையின் மூண்டுளோரென"

நெருப்பு மலையால் அச்சு முறிந்த தேரை இழுத்துச் செல்ல முடியாது குதிரைகள் வருந்தின.

[97]"உலர்ந்த வன்க ணுலோபர் கடைத்தலை புலர்ந்து நிற்கும் புரிசிலர் போல" நீர் நிறைந்த குளத்தின் மடை திறந்து நீரினைப் பாய்ச்சுவார் இன்மையால் பயிர்கள் வாடின.

[98]''உலோப மொன்றுமே, அளப்பருங் குணங்களை
யழிக்கும்''

தாடகை மருத நிலத்தை அழித்துப் பாலை நிலமாக மாற்றியதற்கு இவ்வுவமையினை எடுத்தாண்டுள்ளார்.

நாடு - மொழி

கம்பரின் நாட்டுப் பற்றினைக் [99]'காவிரி நாடன்ன கழனி நாடு' என்பதாலும், அவர்தம் மொழிப் பற்றினைத் '[100]தமிழ் நிகர் நறவம்' என்பதாலும் அறியலாம.

பரத்தையர்

[101]'வருமுலை விலைக்கென மதித்தனர் வழங்கும்,
தெரிவையர்''

பொருட்பெண்டிர் மனம்போன்று அனுமன் செருக்களத்தில் தடையின்றிச் சென்று வென்ருனும்.

பாகர்க்கு அடங்காத களிறுகள் நீர்நிலையிலிருந்து வெளியேருது கிடந்தன. அவை [102]'விலைமாதர் கலையல்குற், புக்கவரை யொத்து' விளங்கின.

---

96 யுத்த - படைத்தலைவர் - 45
97 அயோ - பள்ளி - 26
98 பால - தாடகை - 42
99 அயோ - குக - 1
100 கிட்கி - பிலம் - 37
101 சுந்தர - சம்புமாலி - 35
102 பால - வரை - 26

இருதிணை

தம்முள் மாறுபட்ட இருதிணைப் பொருட்களை உவமையால் இணைத்துப் பேசி ஒற்றுமை உணர்வை ஊட்ட முயல்வார். முதலில் அஃறிணைப் பொருட்களை உயர்திணைப் பொருட்களோடு உவமித்துள்ளதைக் காண்போம்.

அஃறிணை - உயர்திணை :

103"கடிய மாசுணங் கற்றறிந் தவரென வடங்கி"
கொடிய மலைப்பாம்புகள் கற்றறிந்தவர்போல் அடங்கி,
முனிவர்கள் ஏறிச் செல்லும் படிகள் எனக் கிடந்தன.

104"செல்லிடத் தல்லதொன் றுரைத்தல் செய்கலா நல்லறி
வாளரி னவிந்த நாவெலாம்" (தவளை)

105"தனித் தாங்குவான், விழுதலும் புகல் வேற்றிட மின்மையால்
அழுத ரற்றுங் கிளையென வானவால்"

கடலில் அணைகட்ட, வானவீரர் ஆலமரத்தைப் பறித்துக் கடலில் எறிந்தனர். அதிலுள்ள பறவைகள், காக்கும் குடும்பத் தலைவன் இறந்ததால் புகலிடம் இழந்த சுற்றத்தார் போல் அவலநிலை யுற்றன.

106"தீயவரொ டொன்றிய திறத்தது நலத்தோர்,
ஆயவரை யந்நிலை யறிந்தனர் துறந்தாங்கு"

மணலில் படுத்திருந்த குதிரைகள் தம்மீது படிந்திருந்த மணலை உதறி எழுந்து சென்றன. இது தீயவரைவிட்டு விலகிச் செல்லும் நல்லோர் செயல் போன்றது என்றார்.

107 அகழியில் தம்முள் மாறுபட்டுப் போரிடும் முதலைகள் செருக்களத்து அரக்கரை ஒத்தன.

---

*103 அயோ - சித்திர - 35*
*104 கிட்கி - கார் - 114*
*105 யுத்த - சேது - 55*
*106 பால - வரை - 20*
*107 பால - நகர - 18*

உயர்திணை—அஃறிணை

இனி, உயர்திணைக்கு அஃறிணைப் பொருளை உவமித்தற்கு ஓர் எடுத்துக் காட்டினைப் பார்ப்போம்.

[108]மகவைச் சுமந்து செல்லும் மந்தியினைப்போலப் போர்க்களத்தில் வீழ்ந்து கிடக்கும் இலக்குவனை அனுமன் சுமந்து சென்றான்.

அஃறிணை—அஃறிணை

[109]மலர்களில் மொய்க்கும் வண்டுகள் போலப் பலாச் சுளையில் ஈயினம் மொய்த்தன என்று அஃறிணைப் பொருளுக்கு அஃறிணைப் பொருளையே உவமையாகவும் கம்பர் காட்டுவார்.

இல்பொருளுவமை

இல்லாத ஒன்றை இருப்பதுபோலக் காட்டும் இல்பொருளுவமைகள் இடம் பெற்ற சிலவிடங்களை நோக்குவோம். வலிய கையும், காலும், கண்ணும் என்னும் இவற்றோடுகூடிய தாமரைக்காடு பூத்த காளமேகத்தினை இராமன் ஒத்திருந்தான் என்பதைக் [110]'கமலத்தின் காடுபூத்த காளமா மேக மொத்தான்' என்று கூறுவர்.

[111]இராவணன் கால்களில் சூர்ப்பணகை விழுந்தது குன்றினடியில் மேகம் வந்து படிந்தது போலாகும்.

சூரியனை இருள் சூழ்ந்தது போல இராமனைக் கரிய அரக்கர் சூழ்ந்தனர் என்றார்.

[112]"அருடி ரண்ட வருக்கன்றன் மேல்வழங்கு
இருடி ரண்டுவந் திண்டிய தென்ன"

---

108 யுத்த - முதற் - 213
109 கிட்கி - ஆறு - 45
110 யுத்த- இலங்-காண் -28
111 ஆரணி - மாரி - 45
112 ஆரணி - கரன்வதை-28

பாத்திரம்

காப்பியத்தின் பிற்பகுதியில் வரும் பாத்திரத்தின் இயல் பினை உவமையாகக் கொண்டு முன்னர் இடம்பெறும் பாத்தி ரத்தினைக் கம்பர் விளக்கிக் காப்பியத்தினை முன்னும் பின்னும் ஊகித்து அறிய வைக்கும் திறம் போற்றற்பாலது.

கூனியென்ற பாத்திரம் இல்லையெனில் இராமா யணமே இல்லை என்பர். [113]இராவணனின் முற்பிறப்பு வினை ஒருருவம் எடுத்தாற்போல் கொடுமனக் கூனி தோன்றினு ளாம். இதனுல் இராவணனைப் பற்றியும் அவனுடைய அழி வைப் பற்றியும் குறிப்பாக உணரலாம்.

நிகழ்ச்சி

இதேபோல முன்னர் நடந்த நிகழ்ச்சியினைப் பின்னர் நடக்கும் நிகழ்ச்சிக்கு உவமித்துள்ளார். இந்திரசித்து எறிந்த நாகபாசம், இராவணனைப் பிணித்த வாலியின் வால்போல் அனுமனின் தோள்களைச் சூழ்ந்து பிணித்தது.

[114]''ஏல்புடைப் பாசமேனு ளிராவணன் புயத்தை வாலி
வால்பிணித் தென்னச் சுற்றிப் பிணித்தது வயிரத்
தோளை''

உறுப்புக்கள்

[115]இராவணனின் பத்துத் தலைகள்—பனம்பழங்களின் கொத்து.

[116]சூர்ப்பணகையின் அறுபட்ட மூக்கு—துளைபட்ட நுங்கு.

[117]சடாயுவின் மூக்கு—இந்திரனுடைய ஐராவதத்தி னைச் செலுத்தும் அங்குசம்.

[118]அயோமுகியின் வாய்—கடலும் வற்ற முகக்கும் அகப்பை.

---

113 அயோத்தி-மந்தரை-39
114 யுத்த-நாக-191
115 ஆரணி-சடாயுஉயிர்-106
116 ஆரணி-கரன்-8
117 ஆரணி-சடாயுகாண்-6
118 ஆரணி-அயோமுகி-45

[119]மாலியவானின் யாக்கை—வளைந்த வில் என்று உவமித்த கவிஞரின் நுண்ணிய நோக்கினை எவ்வாறு புகழ்வோம்?

உணர்வுகள்

இன்பம் பற்றிய உணர்வினைக் குறிப்பாக முன்னரே கண்டோம். இனித் துன்பம் பற்றி ஒரு சிறிது காண்போம்.

துன்பம்

இடியோசை கேட்ட நாகம்போல வானரின் ஆர்ப்பொலி கேட்ட அரக்கர் நடுங்கினர் என்பதை [120]'அசனி கேட்ட வளையுறை யரவ மொத்தார்' என்று விளக்கினர்.

[121]'அனலில் வீழ்ந்த கொடி' போன்று செருக்களத்தில் உயிரொடுங்கிக் கிடக்கும் இராமனைக் கண்டு சீதை துடித்தனள்.

[122]'இன்னுயிர், பொன்றும் போதுற்ற துற்றது
போலுமே'

இது காடேகும் இராமனை எண்ணிக் கோசலை அடைந்த துயரைக் குறிக்கும்.

[123]'கரிய செம்மல் ஒருவனைத் தந்திதி' என்னும் கௌசிகன் கூறிய மொழி, கண்ணில்லாதவன் பெற்று இழந்தாற் போன்ற துயரத்தைத் தயரதனுக்குத் தந்தது.

[124]'' அஞ்சினே னஞ்சி னேனச் சீதையென் றமிழ்திற்
றோய்த்த
நஞ்சினு லிலங்கை வேந்த னுளையித் தகைய னன்றோ

அமிழ்தில் தோய்த்த நஞ்சு போன்ற சீதையினல் இராவணன் அழிவானே என்று மண்டோதரி புலம்பினள்.

[125]'திட்டியின் விடமன்ன கற்பின் செல்வி'யை இராமனிடம் சேர்க்கவில்லையென்ருல் நேரப்போவது அழிவே என்ருன் கும்பகர்ணன்.

---

119 யுத்த - கும்ப - 12
120 யுத்த - நாக - 284
121 யுத்த - சீதைகளம் - 8
122 அயோ - நகர் - 12
123 பால - கையடை - 11
124 யுத்த - இராவ - சோக —53
125 யுத்த - கும்ப - 80

அசோக வனத்தில் இராமனைப் பிரிந்த வருத்தத்தால் ஒளியிழந்து தோன்றிய சிதைக்குத்தான் எத்தனை உவமைகள் கூறியுள்ளார்?

126 'தேசுண்ட திங்கள்'; 127 'மாசுண்ட மணி'; 128 'வெயிலிடைத் தந்த விளக்கு'; 129 புகை படிந்த ஓவியம் போன்றவை உவமைகளாயின.

130 இராவணனைக் கண்ட சீதை புலியைக் கண்ட மான் போலானாள்.

131 வேடனின் அம்பால் வீழும் மான் போல, மண்டோதரி இந்திரசித்தின் உடலில் மயங்கி விழுந்தனள்.

விரகதாபமும் ஒருவகைத் துன்பம்தானே! சிதையின் நிலையினை 132 'வாளரா நுங்கிய மதியம்' என்றார்.

133 நோயின் மீது நோய் தொடர்வதுபோல முற்பெயல் மாரியை அடுத்துப் பிற்பெயல் மாரி வந்து சிதையைப் பிரிந்திருக்கும் இராமனை நலிவுறச் செய்தது.

134 காமவுணர்வால் நலிவுற்ற இராவணனுக்குச், சாளரம் வழியாக வந்த தென்றல் வாழ்மனையில் பாம்பு வந்தாற் போன்ற துன்பத்தை மிகுவித்ததாம்.

வீரம்

இராமாயணமே ஒரு பெரும் போர்க்காவியம் எனலாம். வீரர்களின் போர்த் திறனைப் பல நிலைகளில் பலவாறாக உவமித்துள்ளார்.

---

126 சுந்தர - காட்சி - 68
127 சுந்தர - காட்சி - 58
128 சுந்தர - காட்சி - 4
129 சுந்தர - காட்சி - 11
130 சுந்தர - நிந்தனை - 21
131 யுத்த-இராவ-சோக-45
132 பால - மிதிலை — 47
133 கிட்கி - கார் - 70
134 ஆரணி - மாரி - 164

135" அருங்கடை யுகந்தனி லசனி மாமழை
கருங்கடல் கிளந் தெனக் கலந்து சூழவே "

குகன் அழைத்தவுடன் வீரர்கள் சூழ்ந்தமைக்கு இது எடுத்துக்காட்டாகும். கடலும் கடலும், மேருவும் மேருவும் மலைத்தாற் போன்று வாலியும் சுக்கிரீவனும் போருடற்றினர்.

136"மூங்கிற்காடு எரியுற்று லென அரக்கா சூழ்ந்தனர் "

137"குழம்பு, ஆக்கினர் கவிகடங் குழுவை"

138அரக்கரின் தோள் 'தேவரைத் தேய அரைத்த அம்மி' யாம்.

139'ஆலங்கண் டஞ்சி யோடு மமரர்' போலத் தன்னைக் கண்டு வானரர் அஞ்சியோடுவர் என்று கும்பகர்ணன் வீடண விடம் வீரவுரை ஆற்றினன்.

140அங்கதன், துணியை இரண்டாகக் கிழிப்பதுபோல மாபக்கனை அழித்தான்.

141" கலுழன். உலங்கின் மேலெழுந் தென்ன"
ஈண்டு, கருடன்—இராவணன்; கொசு—வானரர்.

142"குன்றிடைத் தொடுத்த பூங்கணை" போலாகும் இராமன் தன்மேல் எறியும் கணைகள் என்றுன் இராவணன்.

143" எலி யெலா மிப்படை யரவம் யானென"
பரதன் படை – எலி ; குகன் – நாகம்.

கருத்து

அரிய கருத்துக்களை உவமை வாயிலாக விளக்குவார். இன்பமும் துன்பமும் வண்டியின் உருளை போல மாறி மாறி வரும்.

144நஞ்சுண்டவர் சாவது போலப் பிறன் மனையை நயந்த இராவணனும் விரைவில் மடிவான்.

---

135 அயோ - குக - 11
136 சுந்தர - கிங்க - 23
137 யுத்த - அதிகா - 127
138 ஆரணி - கரன் - 74
139 யுத்த - கும்ப - 162
140 யுத்த-படைத்தலைவர்-78
141 சுந்தர - பஞ்ச - 2
142 ஆரணி - சடாயுஉயிர்-71
143 அயோ - குக - 10
144 ஆரணி - சடாயுஉயிர் - 97

145"கற்றவர் மான நோக்கிற் கவரிமா வனைய நீரார்"

146கல்வியும் ஞானமும் சேரின் தீவினை மாயும். அவ்வாறே இராமனும் சுக்கிரீவனும் நண்பர்களாய் இணைந்த பிறகு அரக்கரழிவு ஏற்படும்

147தாங்குதல் இல்லா மன்னன் நாட்டிலிருந்து இரிந்தோடும் மக்கள் போலப் போர்க்களத்தில் அரக்கர் மாயக் குதிரைகள் வெருண்டோடின.

148"பொய்யுறு பிறவி போலப் போக்கரும் பொங்கு கங்குல்"

வினைகள்

இனி வினையின் ஆற்றலைக் கவிஞர் வியந்துரைத்ததைக் காண்போம்.

149இருகரையிலும் இருப்போரை ஏற்றி இறக்கிச் செல்லும் நாவாய், இம்மை மறுமை என்னும் இரண்டிடத்தும் இருப்போரை ஏற்றி இறக்கி இருவினையெனச் சென்று வந்தது.

150இருவினைகளையும் ஒழித்த பெரியோரது அறிவுபோல அனுமன் போர்க்களத்தில் தடையின்றிச் சென்றான்.

151இறந்த ஒருயிரினம், வினையீட்டினால் மீளப் பிறந்தது போல அறுபட்ட இராவணன் தலை மீள முளைத்தது.

152வல்லவன் ஒருவன் முயற்சியுடன் எடுத்த செயல், அவனுடைய தீவினையால் பாழாவது போல, இராவணனின் சரமும் வலியொடுங்கியது.

153"கடக்க வொண்ணு வினையென வந்துநின்ற மான்"

---

145 அயோ - மந்திர - 91
146 கிட்கி - நட்பு - 22
147 யுத்த - பிரமா - 150
148 ஆரணி - அயோ - 3
149 அயோ - குக - 46
150 சுந்த - சம்பு - 35
151 யுதத-இராவ-வதை-152
152 யுத்த - இராவ-வதை -49
153 ஆரணி - மாரீ - 226

பிரை – பால்

[154]பிரையிடப்பட்ட பால் போலச் சூர்ப்பணகையின் அவலநிலை கண்ட இலங்கை மக்கள் உரை தடுமாறி ஓடினர்.

[155]சிறிய உருவங்கொண்டு அனுமன் இலங்கையினுள் நுழைந்தது, சிறந்த பாற்கடலில் துளி மோர் சிந்தியது போலாகும்.

பாற்கடல் மோரினுல் நிலைமாறுவதுபோல அனுமனுல் இலங்கை விகாரப்படப் போகிறது என்பது இவ்வுவமையால் குறிப்பாகப் போந்த பொருளாகும்.

இருள்

[156]இராவணன் இழைத்த தீவினையென்ன இருள் எங்கும் பரவியது.

பிறிதோர் இடத்தில் இருள் பரவியதற்குக் கவிஞர் காட்டும் உவமையால் அவர்தம் இறையுணர்வு புலப்படுகிறது.

[157]"வாழிய வேத நான்கு மனுமுதல் வந்த நூலும்
வேள்வியு மெய்யுந் தெய்வ வேதியர் விழைவு மஃதே
ஆழியங் கமலக் கையானுகிய பரம னென்னு
ஏழைய ருள்ள மென்ன விருண்டன திசைகளெல்
லாம்"

நான்மறைகளும், மனு முதலிய தெய்வ நூல்களும் வேள்வியும், மெய்யும், அந்தணரின் விழைவும் என்னுமிவை, கைகளில் சங்கு சக்கரங் கொண்ட பரம்பொருள் நாராயணனின் சொருபமே என்றுணராத அறிவற்றவரின் இருண்ட மனமெனத் திசைகள் இருளடைந்தனவாம்.

விரைவு

விரைவு பற்றி வந்த உவமைகள் வருமாறு :

---

154 ஆரணி - மாரீ - 35    156 சுந்த - ஊர் - 43
155 சுந்த - ஊர் - 96    157 யுத்த - நாக - 179

158 'ஆடி, உழுந்தோடுகாலம்'—அக்கால எல்லைக்குள் கடலிலிருந்து மைந்நாகமலை எழுந்தது.

159 'கந்துக மெனக்கடி தெழுந்தெதிர் கலந்தான்'

சுக்கிரீவன், எறியப்பட்ட பந்துபோல இராவணன் மேல் பாய்ந்து போர் புரிந்தான்.

160 'கதலியின் கனியினைக் கழியச், சேரும் சூசி' போல இராமபாணம் வாலியின் மார்பை ஊடுருவியது.

இகழ்ச்சி

161 "அவியை நாய் வேட்ட தென்ன"

அவிப்பொருள்—சீதை; நாய்—இராவணன்.

162 "சிங்கக் குருளைக்கிடு தீஞ்சுவை யூனைநாயின்
வெங்கட் சிறுகுட்டனை யூட்ட விரும்பினுளால்"

சிங்கத்தின் உணவினை நாய்க்கு இடுவதுபோன்றது இராமனுக்குரிய ஆட்சியினைக் கைகேயி, பரதனுக்கு அளிக்க விரும்புவது என்று இலக்குவன் இகழ்ந்துரைத்தான்.

163 " செருப்படியிற் பொடியொவ்வா மானிடர் "

இராவணனின் செருப்பினடியில் உள்ள துகளுக்கும் ஒவ்வாத மானிடர்.

புராணம்

புராணத்திலிருந்தும் சிலவற்றை உவமைகளாக ஆசிரியர் ஏற்றுக்கொண்டார்.

164, உலகு யெயிற் றிடைகொ ளேனமென லானுன் '

---

158 சுந்த - கடருவு - 51
159 யுத்த - மகுட - 23
160 கிட்கி - வாலி - 57
161 ஆரணி-சடாயு உயிர்-69
162 அயோ - நகர் - 117
163 ஆரணி - சூர்ப் - 188
164 கிட்கி - பிலம் - 69

உலகைப் பெயர்த்தெடுக்கும் வராகமூர்த்தி போலப் பிலத்தினை அனுமன் கைகளால் எடுத்துப் பிளந்து வெளியேறினான்.

[165]அனுமன் அசோக வனத்தை அழித்ததனை, உலகை எயிற்றிடை கொண்ட வராகமூர்த்தியின் செயலோடு உவமித்துள்ளார்.

[166]கரியினை உரித்துப் போர்த்திய சிவன்போல, அயோமுகியின் கைகளில், மார்பில் இலக்குவன் அடங்கித் தோன்றினன்.

[167]'மண்ணினை யளந்து நின்ற மாலெனக்' கும்பகர்ணன் துயில் நீங்கி எழுந்து நின்றான்.

[168]பாற்கடலில் எழுந்த நஞ்சு கண்டு அஞ்சிய தேவரையும், அசுரரையும் தேற்றிய சிவபெருமான் போல, இராமனையும் இலக்குவனையும் கண்டு அஞ்சிய வானரரை அனுமன் தேற்றினான்.

[169]திருமாலை எதிர்க்கப் பிரளய காலத்தில் சென்ற மதுகைடவர் போன்று அனுமனை எதிர்க்க அங்காரதாரை விரைந்தாள்.

அகத்துறை

இனி, அகத்துறைச் செய்திகள் உவமைகளாக வந்துள்ளன. அவற்றுள் சிலவற்றைக் காண்போம்.

170 "கொழுநர்வர, மணித்தே ரோடும் கண்டு
மனங் களிசிறப்ப வொளிசிறந்து
மெலிவகலும் கற்பினார்போல்"

வினை முடித்துத் தேர்மீது திரும்பும் கணவரைக் கண்டு முகமலரும் மனைவியரைப் போலச் சூரியன் வரவு கண்டு பொய்கைத் தாமரைகள் மலர்ந்தன.

---

165 கிட்கி - பொழில் - 8
166 ஆரணி - அயோ - 61
167 யுத்த - கும்ப - 57
168 கிட்கி - அனும - 5
169 சுந்தர - கடருவு - 76
170 பால-மிதிலை-152

171 "தேரி னன்னெடுந் திசைசெலச் செருக்கழிந்
தொடுங்கும்
கூரயிற்றருங் கண்ணெனக் குவிந்தன குவளை"

தேரேறிச் சென்ற தலைவரைப் பிரிந்த மகளிரின் பொலி விழந்த வேற்கண்களைப் போல், குவளை மலர்கள் குவிந்தன.

172 "நீடு நெஞ்சுறு நேயத்தா னெடிதுறப் பிரிந்து
வாடுகின்ற மருளுறு காதலின் மயங்கி"

பொய்கையில் நீரற்ற பொழுது பிரிந்த அன்னப் பறவைகள், நீர் வந்த காலத்து ஆசையுடன் வந்து துளைந்து விளையாடுதல், நீண்ட காலம் பிரிந்திருந்த தலைவன் வினை முடித்து மீண்டும் தலைவியுடன் மருவுதலைப் போன்றது என்றார்.

173 "தங்கணா யகனிற் றெய்வந் தான்பிறி தில்லென்
றுன்னும்
மங்கைமார் சிந்தை போலத் தூயது"

தங்கள் கணவரையே தெய்வமென்று எண்ணும் நங்கையரின் தூய சிந்தை போலச் சோலை தூய்மையுடையதுஎன்றார்.

ஒரு சொல் - இரு முறை

174 "நீரைக்கொடு நீரெதிர் நிற்கொணுமே"

நீரைக் கொண்டு நீரை எதிர்க்க முடியாதவாறு போல, அதிகாயனை, இலக்குவனைத் தவிரப் பிறரால் வெல்லமுடியாது எனறு இராமன் கூறினான்.

175 "மலர்மிசை மலர்பூத் தெனமலர்க் கையால்
வதனம் தாங்கி"

ஊடல் கொண்ட மகளிர் தம் கையொன்றினல், தம் முகத்தைத் தாங்குவது, செந்தாமரை மலர்மீது தாமரை மலர் பூத்தாற் போலத் தோன்றும்.

---

171 கிட்கி-கார்-36
172 கிட்கி-கார்-40
173 பால-வேள்வி-16
174 யுத்த-அதிகா-83
175 சுந்த-ஊர்-113

176 "மலையின்மேல் மலைவீழ்ந் தென்ன"

இராவணன் உடல்மீது, மலைமேல் மலை வீழ்வது போன்று வீழ்ந்தான்.

இருமலர்கள்

இருமலர்களைக் கொண்டும் உவமித்துள்ளார்.

177 "தாமரை நாப்பண், ஆம்பல் விரிந்தா லன்ன
சிரிப்பான்"

தாமரை மலரின் நடுவில் ஆம்பல் விரிந்தது போல அனுமன் சிரித்தான்.

178 "தாமரையின் மாமலரின் வாசக்
காவிரி நாண்மலர் முகிழ்த்தனைய கண்ணார்"

தாமரை மலரில் முகிழ்க்கும் காவி மலரெனப் பெண்கள் முகத்தில் கண்கள் விளங்கின.

அஃறிணை உயிரினங்கள்

அஃறிணை உயிரினங்கள் யானையிலிருந்து கொசு ஈறுகப் பல உவமைப் பொருள்களாக வந்துள்ளன. அவற்றை வகைப்படுத்திச் சான்று ஒன்றினால் காண்போம்.

விலங்குகளில் [179]சிங்கம், [180]யாளி, [181]யானை, [182]புலி, [183]குதிரை, [184]மான், [185]பசு-கன்று, [186]எருது, [187]முள்ளம் பன்றி, [188]ஆடு. [189]நாய், [190]முயல், [191]பூனை, [192]மந்தி, [193]எலி முதலியவை உவமைப் பொருள்களாயின.

176 யுத்த-இராவ-வதை-218
177 கிட்கி - மயே - 20
178 அயோ - தைல - 10
179 ஆரணி-அயோமுகி-49
180 ஆரணி-சடாயுஉயிர்-177
181 சுந்தர - உருக் - 47
182 சுந்தர - காட்சி - 4
183 யுத்த - நாக - 143
184 அயோ - மந்தரை - 88
185 அயோ - மந்திர - 60
186 அயோ - கைகேயி - 109
187 ஆரணி - விராத - 33
188 யுத்த-இலங்-கேள்-60
189 ஆரணி-சடாயுஉயிர்-69
190 ஆரணி-சடாயு உயிர்-57
191 தற்சிறப்பு - 4
192 யுத்த - முதற் - 213
193 அயோ - குக - 10

நீர்வாழ்வனவற்றுள் [194]முதலை, [195]மீன், [196]ஆமை, [197]ஞெண்டு, [198]தவளை முதலியன உவமைகளாயின.

ஊர்வனவற்றுள் [199]பாம்பும், [200]புழுவும் உவமிக்கப் பட்டுள்ளன.

பூச்சிகளில், [201]வண்டு, [202]ஈயினம், [203]விட்டில், [204]கொசு(உலங்கு) போன்றவையும் உவமைகளாய் வந்துள் ளன.

[205]கருடன், [206]பருந்து, [207]மயில், [208]கிளி, [209]அன்னம், [210]காக்கை, [211]கூகை, [212]அன்றில், [213]குருவி, [214]சக்கரவாகம், [215]தாய்ப் பறவை–பார்ப்பு முதலியன பறவைகளில் உவமைகளாயின.

தத்துவம்

216 "கோட லுரிபோல் ஆராயி னேதுமில்லையாதி"

வெண்காந்தள் கிழங்கை உரித்தால் உள்ளே ஒன்றும் இல்லாதவாறு, ஒன்றும் விளங்குவதற்கு அரியனாய் இராமன் உள்ளான் என்பது கருடனின் புகழ்மொழி.

[217]இராமபிரானின் திருவடித்துகள் பட்ட மாத்திரை யில் கல்லுருவில் நின்ற அகலிகை உயிர் பெற்றனள். எவ்வா றெனில் தத்துவ ஞானி இறைவன் திருவடியினை அடைந்து ஒளிமயமான உருவம் பெறுவது போலாகும் என்றார்.

---

194 யுத்த - நாக - 284
195 கிட்கி - நாட - 35
196 கிட்கி - மயே - 28
197 அயோ - கங்கை - 66
198 கிட்கி - சார் - 114
199 சுந்தர - ஊர் - 129
200 ஆரணி - கரன் - 125
201 பால - எழுச்சி - 49
202 பால - உலா - 5
203 யுத்த-மாயாசனக - 68
204 சுந்தர - பஞ்ச - 2
205 யுத்த - இந்திர - 2
206 பால - நாட்டு - 15
207 யுத்த-இலங்-காண்-46
208 ஆரணி-சடாயுஉயிர்-199
209 ஆரணி - விராத - 39
210 பால - கார்முக - 23
211 பால - கார்முக - 23
212 கிட்கி - பிலம் - 60
213 யுத்த - கும்ப - 183
214 கிட்கி - நாட - 43
215 யுத்த-மாயாசனக - 31
216 யுத்த - நாக - 261
217 பால - அகலிகை - 71

கவிச்சக்கரவர்த்தி, உவமையினைச் சிறந்த கருவியாகக் கொண்டு காப்பியத்தை நல்ல முறையில் உருவாக்கியுள்ளார் என்பதை இக் கட்டுரையில் ஆய்ந்து கூறியுள்ளேன் உலகத்தி லுள்ள பொருட்களை எல்லாம் உவமைகளாக எடுத்தாள முடியும் என்ற கருத்து ஆசிரியருக்கு உண்டு சீதையின் செவிக்கு உவமையாகக் கூறத்தக்க பொருளில்லை என்றார். உலகிலுள்ள பொருட்களெல்லாம் உவமையாகச் சொல்லக்கூடியதற்கு உவமை உண்டோ என்ற வினவினை அவர் எழுப்பியுள்ளார். கவிஞரின் உவமையாற்றலை இக்கட்டுரையில் விரிப்பின் அகலும். தொகுப்பின் எஞ்சும். எனவே கம்பராமாயணத் தில் அமைந்துள்ள உவமைகளை, அகர வரிசைப்படுத்திஅமைத் துள்ள இந்நூலில் கண்டு கொள்ளலாம்.



# உவமை அகரவரிசை.

1. '' அங்கொடிங் கிழித்தி யேற்று மமைதியி னமரர் வையத்து
இங்கொடங் கிழித்தி யேற்று மிருவினை யென்ன லான''

இரு கரையிலும் இருப்போரை ஏற்றி இறக்கிச் செல்லும் நாவாய் இம்மை மறுமை என்னும் இரண்டிடத்தும் இருப்போரை ஏற்றி இறக்கும் இருவினையெனத் தொழிற்பட்டது [அயோ. குக. 46 : 3-4]

2. '' அசனி கேட்ட வளையுறை யரவ மொத்தார் ''

வானரரின் ஆரவார வொலியினைக் கேட்ட அரக்கியர், இடியொலியினைக் கேட்ட வளையில் உறையும் பாம்பென ஒடுங்கி நடுங்கினர். [யுத்த. நாக. 284 : 4]

3. '' அசனி யேற்றினால், தவ்விய கிரியென ''

சடாயு இறந்ததை அனுமன் கூறக் கேட்ட சம்பாதி பேரிடியினால் நிலைகெட்டழிந்த மலைபோல வீழ்ந்தனன். [கிட்கி-சம்பா-33 : 1-2]

4. '' அசையு மாலமென ''

விராதன் எறிந்த சூலம் நஞ்செனவந்தது.
[ஆரணி - விராத - 27 : 2]

5. '' அஞ்சனக் குன்ற மன்ன அழகன் ''

கரிய மலைபோல் மேனியன் இராமன்.
[அயோ - தைல - 52 : 1]

6. '' அஞ்சன வண்ணன் ''

மை போலுங் கரியவன் இராமன்.
[அயோ - குக - 14 : 1]

7. '' அஞ்சிறை யறுபத மடைந்த கீடத்தைத்
தஞ்செனத் தன்மய மாக்கும் தன்மைபோல் ''

அடைக்கலமாகத் தான் கொண்ட புழுக்களைத் தன் வடிவமாக்கும் வண்டுபோல இராமன் அரக்கரை அழித்துத் தேவராக்கினான். [ஆரணி - கரன் - 125 : 1-2]

8. '' அஞ்சொலிள மஞ்ஞையென வன்னமென ''

அழகிய சொல்லுடைய மயில், அன்னம் போன் றவள் சூர்ப்பணகை [ஆரணி - சூர்ப்ப - 31 : 3]

9. '' அஞ்சொற்க ளமுதி னள்ளி ''

சீதையின் இனியமொழி அமிழ்தில் தோய்த்தது போன்றது. [ஆரணி - மாரீ - 70 : 3]

10. '' அடுபுலி துரந்த, ஆடுபட்டது ''

கொல்லும் புலியினுல் துரத்தப்பட்ட ஆடுகள் போல் அனுமனுல் துரத்தப்பட்ட அரக்கர் ஓடினர். [யுத்த - இலங் -கேள் - 60 : 3-4]

11. '' அடுபுலி நிரையென ''

அரக்கர் புலிக்கூட்டம் போன்றனர். [சுந்தர - கிங்க - 18 : 2]

12. '' அணங்குவாள் விடவரா வணுகு மெல்லையும்
குண ங்கெடா தொளிவிரி குளிர்வெண் டிங்கள்போல''

தன்னை விழுங்க இராகு என்னும் பாம்பு வரும் வேளையிலும் ஒளி குன்ருத தண்மதியம் போலச் செல்வமெல் லாம் நீங்கும் காலம் தோன்றிய போதும் வருந்தாமல் கைகேயி துயின்றனள். [அயோ - மந்தரை - 45 : 1-2]

13. '' அணுவெனச் சிறிய தாங்கொ ராக்கையும் உடைய
ஞனன் ''

மந்திர பலத்தால் இந்திரசித்து அணுவென்னும் படியான சிறிய உருவத்தைக் கொண்டனன். [யுத்த - நாக 185 : 4)

14. '' அண்டசன் மணிச்சயன மொப்பது ''

அண்டர் நாயகனுகிய திருமாலின் அழகிய இருக்கையான ஆதிசேடனை அகலத்தால் ஒத்தது இராமனின் தேர். [யுத்த - இராம -தேர் - 12 : 4]

15. ''அந்திவந் தடைந்த தாயைக் கண்டவான் கன்றி
னன்னுன் ''

அந்திப்பொழுதில் திரும்பி வரும் தாய்ப்பசுவைக் காணும் கன்றினைப்போல் கைகேயியினைக் கண்ட இராமன் விளங்கினன். [அயோ - கைகேயி - 104 : 4]

16. ''அப்பொழு தலர்ந்த செந்தா மரையினை வென்ற
தம்மா ''

மன்னர் உரைத்ததாகக் கூறிய கைகேயியின் மொழியினைச் செவிமடுத்த இராமனின் முகம் அப்பொழுது அலர்ந்த செந்தாமரை மலரை மலர்ச்சியால் வென்றது.
[அயோ - கைகே - 108 : 4]

17. ''அமிழ்தப் பாடல்''

அமிழ்தம் போன்ற இனிய பாடல்.
[கிட்கி - கார் - 33 : 3]

18. ''அமிழ்திற் ரேய்த்த நஞ்சு ''

அமிழ்தத்தில் தோய்த்த நஞ்சு போன்றவள் சிதை''. [யுத்த - இராவ - சோக - 53 : 3-4]

19. ''அமிழ்தினைச் சுவைசெய் தென்ன வழகினுக் கழகு
செய்தார் ''

அமிழ்தத்திற்குச் சுவையூட்ட முற்படுவது போல், அழகுடைய சிதைக்கு அணிகலன்களை அணிவித்தனர்.
[பால - கோல - 3 : 3]

20. ''அமிழ்துணக் குழுவுகின்ற வமரரி னரச வெள்ளம்''

இராமனின் முடிசூட்டு விழாவைக் காண வந்தோர் பாற்கடல் அமுதம் உண்ணவந்த தேவர் போன்றனர்.
[அயோ - கைகே - 67 : 4]

21. ''அமுதத்தின் சுவையாய் நின்ருன்''

உள்ளுவோர்க்கு அமுதம் போன்றவன் இராமன். [ஆரணி - சவரி - 7 : 4]

22. " அமுதென மாந்துவார் "

பாற்கடல் அமிழ்தை விரும்பி உண்பதுபோல் முனிவர் இராமனை நோக்கி மகிழ்ந்தனர்.

[அயோ - கங்கை - 12 : 4]

23. அம்மையினொ டிம்மையை யறிந்துநெறி செல்லுஞ் செம்மையவ ரென்ன "

மூவகை ஆசைகளையும் அறுத்து, யோக பலத்தால் தம்மை உணர்ந்து முத்திபெற விரையும் யோகியர் போலக் கயிற்றை அறுத்து ஓடிய குதிரைகள் பாகரின் திறமையால் தம்நிலை உணர்ந்து அடங்கி மீண்டன.

[பால - வரை - 21 : 3-4]

24. " அயில்தரும் கண்ணெனக் குவளை "

கூரிய் வேலாயுதம் போன்ற கண்களைப் போலக் குவளை மலர்கள். [கிட்கி - கார் - 36 : 2]

25. அரக்கரென் கடலிடை யாழ்கின் றொரொரு மரக்கலம் பெற்றென "

கடலிடை ஆழ்பவருக்குக் கிடைத்த மரக்கலம் போல அரக்கரால் நலிவுறும் முனிவருக்கு இராமன் அமைந்தனன். [ஆரணி - அகத்தி - 6 : 3-4]

26. " அரக்கர்தம் வடிவிற் செய்கையின், நெஞ்சினின் "

வஞ்சனை அரக்கரின் உடம்பு போலவும், தீச்செயல்கள் போலவும், மனம் போலவும் வானம் இருண்டது.

[கிட்கி - கார் - 4 : 3-4[

27. " அரச னொதுங்கத் தலையெடுத்த குறும்பு போன்ற தரக்காம்பல் "

நல்லரசன் நீங்கியபொழுது தலையெடுக்கும் குறுநில மன்னன்போல் சூரியன் மறைந்ததும் செவ்வாம்பல் மலர்ந்தது. [பால - மிதிலை - 75 : 4]

28. "அரவின் சுற்றம், பற்றிய கலுழன்"

கயிற்ருல் கட்டப்பட்ட அனுமன் நாகங்களால் பிடித்துச் சூழப்பட்ட கருடன் போலத் தோன்றினுன்.

[சுந்தர - பிணி - 134 : 3-4]

29. "அரவின் வாய்த்தீய வளைவான் ருெளைவா ளெயிற்றின்வழி
ஆனகடுவுக் கருமருந்தா வருந்து மமுதம் பெற்றுய்ந்து
போன பொழுதிற் புகுந்தவுயிர் பொறுத்தார்"

அரவு தீண்டியதால் ஏறிய விடம் மருந்தால் நீங்குவதுபோல இராமன் இலக்குவன் சீதை ஆகியோரைக் காணுது வருந்திய அயோத்தி மக்கள், தேர்ச்சுவடு அயோத்தி நோக்கிச் செல்வது கண்டு மகிழ்ச்சியுற்றனர்.

[அயோ - தைல - 83 : 1-3]

30. "அரவி ளுடும் புனிதன்"

செயலால் கண்ணனை ஒத்தது வெள்ளம்.

[பால - ஆற்று - 15 : 4]

31. "அரா இடியுறத் துவள்வது"

இடியோசை கேட்ட நாகம் துவள்வது போலச் சுமந்திரன் வருந்தினன். [அயோ - தைல - 26 : 2-3]

32. "அராவென முனிந்தான்"

அர்க்கர்படை அழிந்தமை கண்டு இராவணன் நாகமென வெகுண்டான். [யுத்த - முதற் - 239 : 4]

33. "அரிப்பெரும் பெயரவன் முதலி னேரணி
விரிப்பவு மொத்தன"

இந்திரன் போன்ற தேவரின் அணிகலன்களைப் போல மின்னும் மின்னல். [கிட்கி - கார் - 7 : 1-2]

34. "அரியி னேறு, தும்பியைத் தொலைத்தென்ன"

சிங்கம் யானையை அழிப்பதுபோல இராவணன் இராமனை அழித்துவிடுவதாகக் கூறினுன்.

[யுத்த - இராவ - வதை 9 : 1-2]

35. "அருக்கனி லொளி விடுமாட கக்கரி"

சூரியனைப் போல ஒளிவிடுகின்ற பொன்மய மான திரிகூடாசலம். [யுத்த - வருணனை - 47 : 1]

36. "அருக்கன் மாவுத யத்தின் றத்தமாம்
பருப்ப தத்தினை யெய்திய பண்பினுல்"

தடையின்றிச் செல்லும் இலக்குவன் கிழக்கி லிருந்து மேற்கு நோக்கிச் செல்லும் சூரியன் போன்றுன்
[கிட்கி - கிட்கி - 14 : 3-4]

37. "அருங்கடை யுகந்தனி லசனி மாமழை
கருங்கடல் கிளர்ந்தென"

ஊழி முடிவில் கருங்கடலும் மேகமும் மிக்கு எழுந்தாற்போலக் குகன படையினர் வந்து சூழ்ந்தனர்.
[அயோ - குக -11 : 3-4]

38. "அருடி ரண்ட வருக்கன்றன் மேல்வழங்கு
இருடி ரண்டுவந் தீண்டிய தென்னவே"

சூரியனைச் சூழும் இருள்போல இராமனைக் கரிய அரக்கர் சூழ்ந்தனர். [ஆரணி - கரன் - 28 : 3-4]

39. "அருடீர்ந்த நெஞ்சிற் கரிதென்பதவ் வந்தகாரம்"

அருள் நீங்கிய நெஞ்சைக் காட்டிலும் அந்தகாரம் கரியது [ஆரணி - மாரி – 139 : 4]

40. "அருந்ததி யனைய கற்பின்"

வசிட்டர் மனைவி அருந்ததி போன்ற கற்பினை யுடையாள் சீதை. [ஆரணி - சடாயு உயிர் - 212 : 1]

41. "அருவிநீ ரொழுகு கண்ணுள்"

சீதையின் கண்ணீர்ப் பெருக்கு, இழியும் அருவி போன்றது. [சுந்தர - உருக் - 37 : 3]

42. "அருவி பாயும் வரைபோற் குருதியாறு"

மலையினின்று இழியும் அருவிபோல், விராதன் உடலினின்று இரத்த வெள்ளம் இழிந்தது.
[ஆரணி - விராத - 34 : 3]

43. ''அரைத்த சாந்துகொ டப்பிய தெ ன்னவே''

பரதனின் இனியமொழி முனிவர்க்கு அரைத்த சந்தனத்தை அப்பியது போலத் தண்ணென்று இருந்தது.

[அயோ - திருவடி - 5 : 4]

44. "அலைமிசைக் கடலின்வீ ழன்னம்போல"

கடலின் மீது விழும் அன்னம் போல அரக்கியர் இராவணனின் உடல்மேல் விழுந்து புலம்பினர்.

[யுத்த - இராவ—வதை 232 : 3]

45. "அல்செறிந்தன்ன நிறத்தினன்''

குகன் இருள் செறிந்து போன்ற நிறத்தினன்.

[அயோ - கங்கை - 29 : 2]

46. "அல்லினைத் தழுவி நின்ற பகல்''

இரவினைத் தழுவி நின்ற பகல்போல, வயமத்தன் என்னும் அரக்கனை, இடபன் தோளால் பிணித்து அழித்தான்.

[யுத்த - அதிகா - 236 : 1]

47. ''அல்லையாண் டமைந்த மேனி யழகன்"

இராமன் இருளையொத்துப் பொருந்திய அழகனை கரிய திருமேனியான். [அயோ - குக - 42 : 1]

48. "அவிஞ்சையெனும், பொய்யை மெய்போல் நடிக்கின்ற யோகி''

அவித்தை என்கிற பொய்ப்பொருளை மெய்ப்பொருள் போலக் கொண்டு வெளிக்குக் காட்டி ஒழுகுகிற யோகி போல், ஆற்றலுடைய அனுமன் கயிற்றால் பிணிப்புண்ட நிலையில் அடங்கி நின்றான்.

[சுந்தர - பிணி - 122 : 3-4]

49. "அவியமு தானதந் நகரு ளார்க்கெலாம்"

வள்ளுவர் கூறிய சொல் மக்களுக்கு அவியுணவையும், அமிழ்தத்தையும் ஒத்திருந்தது.

[அயோ - மந்தரை - 26 : 4]

50. "அவியைநாய் வேட்ட தென்ன"

தன்னை உரியவளாகப் பெற விரும்பிய இராவணன், தேவர்களுக்கு அளிக்கும் அவியுணவை விரும்பிய நாய் போலாவான் என்றனள் சீதை.

[ஆரணி - சடாயு உயிர் - 69 : 4]

51. "அழுதழி கண்ணின னவல மீதென
எழுதிய படிவம்"

துன்பச் சித்திரம் போலப் பரதன் தோன்றினான். [அயோ - திருவடி - 49 : 2-3]

52. "அறந்தின் றனென"

மூத்தவனிருக்க இளையவன் ஆளுதல் அறத்தை அழிப்பதற்கு ஒக்கும். [அயோ - திருவடி - 101 : 4]

53. "அறிவிலா னறைந்த, பொய்யிற் போம்படி"

இந்திரசித்து எறிந்த கணைகளை இலக்குவன் கணைகள், அறிவில்லாதவன் கூறிய பொய்யைப்போலப் பயனிழக்கும்படிச் செய்தன. [யுத்த - பிரமா - 72 : 2-3]

54. "அற்காக்கை கூகையைக்கண் டஞ்சினவா மெனவகன்
றுள்"

சனகனுக்கு உதவியாகத் தேவர் தந்த படை கண்டு, முற்றுகையிட்ட அரசர், இரவில் கூகையைக் கண்டு அஞ்சிய காக்கைகள் போல ஒடி மறைந்தனர்.

[பால - கார்முக - 23 : 4]

55. "அனங்கவேள் செய்த, ஓவி யம்புகை யுண்டதே யொக்
கின்ற வுருவாள்"

மன்மதன் தீட்டிய ஓவியம் புகைபடிந்தாற் போன்று அழகிழந்த தோற்றத்தைச் சீதை அடைந்தாள்.

[சுந்தர - காட்சி- 11-4]

56. ''அனந்தன், ஆலஞ்சார்மிடற் றருங்கறை கிடந்தென''

ஆதிசேடனின் கழுத்திலுள்ள கறையினைப் போன்ற வடிவினையுடைய தோற்கட்டும், புட்டிலும் முறையே இராவணனுடைய முன்கையிலும் விரலிலும் அணியப்பட்டிருந்தன. [யுத்த - இராவ-தேர் - 9 : 1-2]

57. ''அனல்வீழ்ந்த, கொடி''

போர்க்களத்தில் இராமன் உயிரொடுங்கி விழுந்து கிடப்பதைக் கண்ட சீதை, நெருப்பில் வீழ்ந்த கொடி போல உடல் துவண்டனள்

[யுத்த - சீதை களம் - 8 : 1-2]

58. ''அன்றிலம் பேடை போல வாய்திறந் தரற்ற லுற்றாள்''

இராவணனால் பிணிக்கப்பட்ட மாயாசனகனைக் கண்ட சீதை, பெண் அன்றிலைப் போல வாய்விட்டு அரற்றினாள் [யுத்த - மாயா சனக - 36 : 4]

59. ''அன்றில் விழை போகம்''

தேவர் புணர்ச்சி, அன்றில் விரும்பும் போகம் போன்றது. [கிட்கி - பிலம் — 60 : 1]

60. ''அன்னக் குழாம் படர்ந் தென்ன''

அன்னக் குழாம் போலப் பெண்கள் இராவணனைத் தொடர்ந்து வந்தனர் [சுந்தர - நிந்தனை 3 : 4]

61. ''ஆடி, உழுந்தோடு காலம்''

மைநாகமலை கடலிலிருந்து, ஆடியில் உழுந்து உருளும் காலத்திற்குள் எழுந்தது.

[சுந்தர - கடறுவு - 51 : 1-2]

62. ''ஆணிப்ப சும்பொ னனையாள்''

சீதை மாற்றுயர்ந்த பொன்னன்னாள்.

[ஆரணி - சடாயு உயிர் - 157 : 4]

63. " ஆமுனை யிற்சிறு கூழென "

பசு மேய முனைந்தால் அழிவுறும் பயிர் போலக் குகன் போர் புரியின் பரதன் படையினர் அழிவர்.

[அயோ - குக – 23 : 4]

64. " ஆமை முதுகிற் றோன்று மந்தரம் "

மயேந்திர மலையில் நின்ற அனுமன், ஆமை முதுகில் தோன்றிய மந்தரமலை போல விளங்கினான்

[கிட்கி - மயே - 28 : 4]

65. " ஆம்பல் வாயு முகமு மலர்ந்திட "

ஆம்பல் மலரையொத்த வாயும் முகமும் மலர்ந்திடச் சீதை மகிழ்ச்சியில் திளைத்தனள்.

[யுத்த - மீட்சி - 21 : 1]

66 " ஆலங்கண் டஞ்சி யோடு மமரர் "

பாற்கடல் நஞ்சைக் கண்டு ஓடும் தேவர்போலத் தன்னைக் கண்டு குரங்கினம் ஓடியொழியும் என்று கும்பகர்ணன் விடணனிடம் கூறினான்.

[யுத்த - கும்ப - 162 : 1]

67. " ஆல காலந் திரண்டன்ன வாக்கையார் "

கரிய அரக்கர் செறிந்த நஞ்சனையர்.

[ஆரணி - கரன்- 11 : 4]

68. " ஆலமர் வித்தி னருங்குற ளானான் "

திருமாலின் வாமன வடிவம் ஆலமரத்தைத் தன்னுள் அடக்கிய ஆலவிதை போலாகும்.

[பால - வேள்வி - 21 ; 4]

69. " ஆலமு மொத்தனன் "

வாலி பாற்கடல் நஞ்செனத் தோன்றினான்.

[கிட்கி - வாலி - 12 : 4]

70. "ஆலமும் வித்துமொத் தடங்கு மாண்மையான்"

ஆலமரமும், அதனைத் தன்னுள் அடக்கிய வித்தும் ஒத்து, திருமால் தனது சூக்கும வடிவத்தில் அடங்கிய விபவத்தை உடையவன். யுத்த - இரணி - 74 : 4]

71. "ஆலமே யனைய மெய்ய ரகலிட மழிவு செய்யுங்
காலமே லெழுந்த மூரிக் கடலெனக் கடிது
செல்வார்"

நஞ்சையொத்த கரிய உடம்பை உடைய அரக்கர், ஊழிக் காலத்துக் கடலெனக் கிளர்ந்து எழுந்தனர்.
[சுந்தர - கிங்க - 3 : 3--4]

72. ஆலவிட மன்றிவர நின்றசிவ னன்னுன்"

பாற்கடலில் நஞ்சு எழ, அஞ்சாது நின்ற சிவன் போல, இராவணன்முன் சுக்கிரீவன் போர்புரிய நின்றனன்.
[யுத்த - மகுட - 7 : 4]

73. ஆலாலமுண் டவனேயென"

பாற்கடல் நஞ்சையுண்ட சிவனைப்போல், சில யானைகளை அனுமன் வாயிலிட்டு அதுக்கினன்.
[யுத்த - அதிகா - 162 : 3]

74. ஆலியின் மொக்கு ளன்ன வரக்கர்"

நீர்க்குமிழி போன்று எளிதில் அழியும் அரக்கர்.
[யுத்த - மாயா சீதை 7 : 3]

75. ஆவி நீத்த வுடலென"

வளஞ் செறித்த கோசல நாடு, திருமகள் நீங்கியதால் உயிரை நீத்த உடலெனப் பொலிவிழந்தது.
[அயோ - பள்ளிபடை 27 : 4]

76. "ஆவிவிரி பானுரையி னுடை"

பாலாவியென்ன வெண்ணிற ஆடை.
[அயோ - தைல - 10 : 3]

77. ''ஆழியங் கமலக் கையா னாகிய பரமனென்ன
ஏழைய ருள்ள மென்ன விருண்டன திசைக
ளெல்லாம்''

நான்கு வேதங்கள், மனு முதலிய நூல்கள், யாகங்கள், மெய், அந்தணர் விரும்பும பேறு என்னும இவை யெல்லாம் பரம்பொருளின் சொருபமே என்றுணராத அறிவீனரின் மனமபோல எல்லாத் திக்குகளும் இருண்டன.

[யுத்த - நாக - 179 : 3-4]

78. '' ஆழி வறக்க முகக்க வமைந்த
மூழை யெனப்பொலி மொய்பில வாயாள்''

அயோமுகி, கடலும் வற்றும்படி மொள்ளும் அகப்பை போன்ற பெரிய வாயினை உடையவள்.

[ஆரணி - அயோமுகி - 45 : 1-2]

79. '' ஆளி போன்றுளன்''

இராவணன் சிங்கத்தை ஒத்தனன்.

[யுத்த -வேலே - 17 : 1]

80. ஆறுகி யோடின கண்ணீர் ''

ஊரவர் கண்ணீர் ஆறெனப் பாய்ந்தது.

[அயோ - நகர் - 104 : 3]

81. '' ஆறுபுக மண்டும், பள்ளமெனும் தகையான் ''

பரதனின் நிறைந்த நற்குணங்கள், ஆறுபாயும் ஆழ்கடலைப் போன்றன. [பால-குலமுறை- 21 : 1-2]

82. '' ஆறுபோகிய வாறுபோ மாறு போன்றதுவே ''

ஓராறு சென்ற வழியில், வெள்ளத்தால் பெருக் கெடுத்த வேறொரு ஆறு சென்றது போலப் போர்க்கள யானை, காட்டு யானையின் பின் சென்றது. [பால-வரை - 5 : 4]

83. ''ஆனை யொத்தன ராளரி யொத்தன னனுமன்''

அரக்கர்கள் யானைகளையும், அனுமன் சிங்கத் தையும் ஒத்தனர். [சுந்த - கிங்க - 49 : 4]

84. '' இடங்கரின் வயப்போத் தன்ன ''

முதலை போன்ற வலிமையுடையவர் அரக்கர்.
[யுத்த - நாக - 284 : 2]

85. '' இடியே றுண்ட மால்வரை போன்மண் ணிடைவீழ்ந் தான் ''

இராமன் நீங்கத் தன்னுயிர் நீங்குமெனக் கூறிய தயரதன் பேரிடி விழுந்த மலைபோல மண்ணில் வீழ்ந்தான்.
[அயோ — கைகேயி - 35 : 4]

86. '' இடிவீழ்தலு முலைவுற்று, இரியல் போயின மயிற்பெருங் குலமென விரிந்தனர் ''

இடி வீழ்ந்ததும், மலையிலுள்ள மயில்கள் ஓடுவன போல, இராவணன் மேல் சுக்கிரீவன் வீழ்ந்ததும் அரம்பையர் இரிந்தோடினர். [யுத்த - மகுட - 6 : 3-4]

87. '' இடும்பை யெத்தனை யும்படுத் தெய்தினும்
குடும்பந் தாங்குங் குடிப்பிறந் தாரினே ''

துன்பம் தொடர்ந்துவந்து தாக்கினும் குடும்பத்தைக் காக்கின்ற உயர் குடியில் பிறந்தவர் போல, வானரங்களால் எறியப்பட்ட மலைகள் கடலில் வீழ்ந்து தூர்க்குமிடத்தும் கடல் கலங்கவில்லை. [யுத்த - சேது - 53 : 3-4]

88. '' இந்திரற் கிமையவர் குருவை யேய்ததன்
மந்திரக் கிழவர் ''

இந்திரனுக்குத் தேவகுரு பிரகஸ்பதி போலத் தயரதனுக்கு மந்திரக் கிழவர் துணை நின்றனர்.
[அயோ - மந்திர - 6 : 3]

89. '' இந்திர னூர்பிடி யென்னலு மானுள் ''

இலக்குவனைச் சுமந்து செல்லும் அயோமுகி, இந்திரன் ஊர்ந்து செல்லும் பெண்யானை போலத் தோன்றினள். [ஆரணி - அயோமுகி - 60 : 2]

90. "இந்திரன் சிறுகண் யானையின், தோட்டிபோற் றேய்ந்
தொளிர் துண்டத் தான்றனை"

சடாயுவின் மூக்கு, இந்திரனின் ஊர்தியான ஐராவதத்தின் அங்குசம் போன்றது.

[ஆரணி - சடாயு காண் - 6 : 3-4]

91. "இந்து விண்ணின் றிழிந்துள தாமென"

சந்திரன் விண்ணிலிருந்து மண்ணிற்கு இறங்கி வருவதுபோல அங்கதன் விண்ணிலிருந்து இறங்கி வந்து இராமன் திருவடியைச் சார்ந்தான்.

[யுத்த - அங்க - 42 :4]

92. "இந்துவொ டேகும், மேகம்."

இலக்குவனைக் கொண்டு சென்ற அயோமுகி சந்திரனோடு செல்லும் மேகம் போலத் தோன்றினாள்.

[ஆரணி - அயோ - 59 : 3-4]

93. "இயல்புடை பெயர்வன மயில்"

மகளிரின் சாயலைப் போன்று சாயல் பெற்று உலவுவன மயில்கள். [பால - நாட்டு - 42 : 1]

94. "இரண்டு கன்றினுக் கிரங்குமோ ரா வென விருந்தார்"

இராமன் முடிசூடுவதும், தயரதன் காடேகுவதும் அறிந்த அமைச்சர் இரண்டு கன்றுகளுக்கு இரங்கும் பசுப்போலாயினர். [அயோ - மந்திர - 34 : 4]

95. "இரண்டு கன்றொரீஇ, வெருவரு மாவினில்"

இரண்டு கன்றுகளைப் பிரியும் தாய்ப் பசுவினைப் போல இராமனையும் இலக்குவனையும் பிரியும் நிலையில் சுமித்திரை மனங்கலங்கினள். [அயோ - நகர் - 153 : 1-2]

96. "இரண்டு கிழித்துணையாய்ப், பிளந்தான்"

அங்கதன் மாபக்கனைத் துணியை இரண்டாகக்

கிழிப்பதுபோல, உடலைப் பிளந்து கொன்றான்.
[யுத்த - படைத்தலைவர் - 78 : 2-3]

97. "இரத மீட்டுறுங் கவிஞரைப் பொருவின தேனீ"

பாடலுக்குச் சுவை சேர்க்கும் கவிஞரெனத் தேனீக்கள் தேனைச் சேர்த்தன. [கிட்கி - கார் - 38 : 4]

98. "இரவலர்க் கீவதின்மையால் வெள்கிய மாந்தர்"

இரவலர்க்கு ஈயவியலாமையால் நாணமடையும் மாந்தர் போல நீரற்றதால் காளமேகங்கள் வெண்ணிறமடைந்தன. [கிட்கி - கார் - 104 : 3-4]

99. "இரவு கற்றன போன்றன விலக்குவன் பகழி"

கிடைத்த பொருளைப் பெற்றுச் செல்லும் இரவலர்போல இலக்குவன் பகழிகள் அரக்கரின் உடற் பகுதிகளைப் பெற்று வேறு பகைவரைக் காணாமல் வாளா திரிந்தன.
[யுத்த - கும்ப - 225 : 4]

100. "இரவு நண்பக லுமென லாயினர்"

இரவும் நண்பகலும் போல இராமனும் இராவணனும் தம்முள் மாறுபட்டுத் தோன்றினர்.
[யுத்த - இராவ-வதை - 25 : 1-2]

101. "இராமன்கை, அம்பி னுதவும்"

வானரப் படைத்தலைவர் இராமனுடைய அம்புபோலக் குறிதவறாமல் தாக்க வல்லவர்.
[சுந்தர - உருக் - 117 : 2-3]

102. "இருட்கனியும் போல்பவன்"

இராமன் இருள்மயமானதொரு கனி போன்றவன். [பால - மிதிலை - 139 : 3-4]

103. ''இருண்ட மேகத்தின், கொழுந்தென நின்றவக் குரிசில் வீரனை ''

கரிய மேகத்தின் கொழுந்து போல்பவன் இராமன். [ஆரணி - அகத்தி - 9 : 1-2]

104 ''இரும்புகண் டனைய நெஞ்சம் ''

வலிய மனம் இரும்பு போன்றது
[கிட்கி - நாட - 44 : 4]

105. ''இருவரை யொருங்கு காணும் யோகியு மென்ன லானுன் ''

சுகசாரணர் என்னும் இராவணனின் ஒற்றர்களை வானரப் படைக் கடலினின்று கண்டுணர்ந்த விடணனுக்குத் தனது யோக பலத்தால் ஜீவாத்மா பரமாத்மாக்களைக் காணும் யோகி உவமையாவான்.
[யுத்த - ஒற்று - 26 : 3-4]

106. ''இருவினை துடைத்தவ ரறிவென ''

இருவினைகளையும் ஒழித்த பெரியோரது அறிவு போல, அனுமன் போர்க்களத்தில் தடையின்றிச் சென்றான்.
[சுந்தர - சம்பு - 35 : 2]

107. '' இருளிடைச் சுடலையாடு மெண்புயத் தண்ணல் வண்ணச்
சுருளுடைச் சடையின் கற்றைச் சுற்றென ''

இரவு நேரத்தில் சுடுகாட்டில் ஆடும் சிவனின் விரிசடை போல, இரவில் இலக்குவனின் பகழிகள் சுடர்விட்டுச் சென்றன. [யுத்த - பிரமா - 148 : 3-4]

108. '' இருளிடை வைகினே மிரவி தோன்றினுய் ''

இராமன் முனிவரின் துன்ப இருளைப் போக்க வந்த பகலவன். [ஆரணி - அகத்தி - 16 ; 3]

109. ''இருளிடையதோர் விளக்கிற் ரேன்றினன்''

அரக்கரிடையே தோன்றும் இராமன் இருளிடை ஒளிவிடும் விளக்கெனல் ஆனன்.

[ஆரணி - கரன் - 114 : 4]

110. ''இருளிற்றிரி கோளரி''

இலக்குவன் இரவில் திரியும் சிங்கம் போன்றவன். [ஆரணி - அயோ - . 9 : 4]

111. ''இருளை நீக்கிய இந்துவிற் பொலிகின்ற விராமன்''

புறத்திருளை நீக்கும் சந்திரன் போல் துன்ப விருளைப் போக்க வல்லவன் இராமன்.

[ஆரணி - கரன் - 157 : 3]

112. ''இருள், பள்ளத்தி னன்றியே வெளியிற் பல்குமோ?

இருள் பள்ளத்திலனறி ஒளியுள்ள இடத்தில் மிக்குத் தோன்றுமோ? அதுபோலவே திருட்டுத்தனத்தினுல் விளைவன யாவும் ஒருவர் மனத்திலேதான் தங்கியிருக்கும்.

[யுத்த - வீடண - 91 : 3-4]

113. ''இரைத்துவந் தமிழ்தின் மொய்க்கு மீயின மென்ன லானர்''

ஆரவாரஞ் செய்துகொண்டே, அமிழ்தில் மொய்க்கும் ஈக்களைப்போல் மகளிர் இராமனின் அழகைக் காண வந்தனர். [பால - உலா - 5 : 4]

114. ''இழந்தமணி புற்றர வெதிர்ந்ததென லானள்''

இழந்த மணியினை மீளப் பெற்ற நாகமென மோதிரம் கண்ட சீதை மகிழ்ச்சியுற்றாள்.

[சுந்தர - உருக் - 65 : 1]

115. ''இளைஞர் சிந்தைபோல்''

ஆண்மயில், மகளிரைச் சாயலால் பெண்மயில்

எனக் கருதி அவர்பின் தொடர்ந்து செல்லும் ஆடவர் மன மெனச் சென்றது. [பால - நாட்டு - 52 : 1]

116. ''இறந்ததோ ருயிருடன் கருமத் தீட்டினுற் பிறந்துளது''

இறந்த ஒருயிரினம், விஃனயீட்டினுல் மீளப் பிறந்ததுபோல அறுபட்ட இராவணனின் தலை மீள முளைத்தது. [யுத்த - இராவ-வதை - 152 : 1-2]

117. ''இறுதியி னுயிர்தந் தீயு மருந்து''

மரண காலத்தில் பிரியுமுயிர் நீங்கவொட்டாமல் தடுக்கும் மருந்து போன்று இராமனின் மோதிரம் சீதைக்குத் துன்பத்தை நீக்கி இன்பத்தை நல்கியது.

[சுந்தர - திருவடி - 76 : 4]

118. ''இறுதி யெய்துநாட் கால்பொர மந்தர மிடையிட்டு அறுவ தாமென''

ஊழிக் காலத்தின் இறுதியில் வீசும் பெருங் காற்றுல் மந்தரமலை நடுவில் இறுவதுபோல, இராமன் கணையினுல் இராவணன் வில் இற்றுவிட்டது.

[யுத்த - முதற் - 241 : 3-4]

119. ''இன்றுணை பிரிந்திரிந்தின்ன லெய்திய அன்றிலம் பெடை'

துணையிழந்த அன்றிற் பேடைபோல, இராமனை எண்ணி இரங்கிச் சீதை வருந்திஞள்.

[ஆரணி - சடாயு உயிர் - 131 : 3-4]

120. ''இன்னகைச் சனகியைப் பிரிந்த வேந்தன்மேல் மன்மதன் மலர்க்கணை வழங்கினுன் என''

இராமன் மீது மன்மதன் மலர்க்கணைகள் தொடுத்ததுபோல், மேகங்கள் குன்றின்மீது தாரைகளைப் பொழிந்தன. [கிட்கி - கார் - 15 : 1-2]

121. '' இன்னல்செ யிராவண னிழைத்த தீமை ''

இராவணனின் முற்பிறப்பு வினை ஒருவம் எடுத்தாற் போல் கொடிய மனமுடைய கூனி தோன்றினுள்.

[அயோ - மந்தரை - 39 : 3]

122. '' இன்னுயி ரின்றி யேகு மியந்திரப்படிவ மொப்பான் ''

சீதையின் பிரிவினுல் தளர்ந்த இராமன், இன்னுயிரினின்றி ஏகும் இயந்திரப் படிவம் ஒப்பான்.

[சுந்தர - உருக் - 78 : 3]

123. '' இன்னுயிர், பொன்றும் போதுற்ற துற்றது போலுமே ''

இராமன் காட்டிற்குச் செல்கிறுன் என்பதை அறிந்த கோசலேயின் துயரம். உயிர் நீங்கும்போது அடையும் தயரத்தை ஒத்தது. [அயோ - நகர் - 12 : 3-4]

124. '' இன்னேக்கிய ரில்வழி யெய்திய நல்வி ருந்தும் ''

அருட்பார்வை உடைய மகளிர் இல்லாத இல்லத்திற்குள் செல்லாத விருந்தினர் போல, இராவணன் எறிந்த முத்தலே வேல், சடாயுவின் உடலேத் தொளேக்க முடியாமல் திரும்பியது. [ஆரணி - சடாயு உயிர் - 119 : 2]

125. '' ஈகலான் பொருள், காத்தவன் புகழெனத் தேயுங் கற்பினுள் ''

செல்வத்தை ஈயாது காத்த உலோபியின் புகழ் நாளும் தேய்வது போன்ற தேயும் கற்பினுள் சூர்ப்பணகை.

[ஆரணி - சூர்ப்ப - 26 : 3-4]

126. '' ஈசனே யொக்கும் ''

எய்துதற்கு அருமையுடையதால் மதில் ஈசனே ஒக்கும். [பால - நகர - 9: 4]

127. '' ஈசன் கண்ணி னெருப்பரு அனங்க னன்னுர் ''

சிவனின் நெற்றிக்கண் நெருப்பிற்கு இலக்காகி

எரிந்திடாத மன்மதன் போன்ற அழகை உடையவர்கள் ஆண்கள். [பால - மிதிலை - 20 : 2]

128. "ஈசன்மண் ணளந்த தேய்ப்ப விருங்கட லினிது தாவி"

பெருங்கடலைத் தாண்டிய அனுமன் மண்ணளந்த மாலெனத் தோன்றினன்.

[கிட்கி - மயே - 23 : 2]

129. "ஈட்டிய தவமும் பின்னா முயற்சியு மியைந்த தொத்தார்"

தவமும் முயற்சியும் இயைந்தபின் நற்செயல் கூடும். அவ்வாறே இராமனும் சுக்கிரீவனும் நண்பராய் இணைந்த பிறகு அரக்கரின் அழிவு ஏற்படும்

[கிட்கி - நட்பு - 22 : 2]

130. "ஈத்துண, முச்சிறு வாழ்க்கையின்முண்டு ளோரென"

வறுமைத் துன்பம் மேலிட ஈத்து உண்ணுமல் அல்லலுறும் வறுமையாளர்போல், நெருப்பு மலையால் அச்சு முறிந்த தேரில் பூட்டிய குதிரைகள் மேலே செல்ல இயலாமல் துன்புற்றன. [யுத்த - படைத்தலைவர் - 45 ; 3-4]

131. "ஈயொத்தன நிருதக்குல நறவொத்தன னிறைவன்"

இராமனைச் சூழ்ந்துள்ள அரக்கர், தேன்கூட்டை மொய்க்கும் தேனீக்கள் போன்றனர்.

[யுத்த - மூலபல - 111 : 4]

132. "உடம்புயி ரைத்தொடர் கின்றதை யொத்தாள்"

உடம்பு உயிரைத் தொடர்வதுபோலச் சீதை இராமனுடன் தீயை வலமாகச் சுற்றி வந்தாள்.

[பால - கடிமண - 91 : 4]

133 "உடம்புதோறு முயிரென வுலாய தன்றே"

உடம்புகள்தோறும் உயிர் சென்று புகுதல்

போல் வெள்ளம் புகுந்து சென்றது.

[பால - ஆற்று 20 : 4]

134 ''உடற்பொறை தொடர்ந்தநோய்''

உடற் சுமையைத் தொடர்ந்த நோய் போல அரக்கர் படையினை இலக்குவன் வெட்டி வீழ்த்தினன்.

[யுத்த-நிகும் - 52 : 2]

135. ''உடனுறை கடிய நோயனள்''

உடன்பிறந்தே கொல்லும் நோய் போன்றவள் சூர்ப்பணகை. [ஆரணி - சூர்ப்ப - 8 : 4]

136. ''உடுபதி வேலையி னுதயம் போன்றதே''

இராமனை அழைத்துவரச் சேனைகள் விரைக' என்னும் சொல் கேட்ட மக்கள் சந்திரனைக் கண்ட கடல் போல் பொங்கி எழுந்தனர், [அயோ - ஆறு - 24 : 4]

137. ''உடையாள்முயன் றொருகாரிய முறுதீவினை யுடற்ற
இடையூறுறச் சிதைந்தாங்கெனச் சரஞ்சிந்தின''

வல்லான் முயற்சியுடன் எடுத்த செயல் அவனுடைய தீவினையால் பாழாவது போல இராவணனின் சரமும் வலியொடுங்கியது

[யுத்த - இராவ-வதை - 49 : 1-2]

138 ''உணங்கு கொம்புக் குயிர்தரு நீரென''

இராமன் கூறிய செய்தியை அனுமன் சீதைக்குக் கூறியது வாடிய கொம்பு தழைத்தற்குப் பெய்யும் மழை நீரைப் போன்றது. [யுத்த - மீட்சி - 15 : 3]

139. ''உணர்வு தோன்றிய, பித்தரி னொருவகை பெயர்ந்து போயினன்''

சுக்கிரீவன் போன்றோர் கூறிய மொழிகளால் தளர்ந்த இராமன், பின்னர் தளர்ச்சி நீங்கி நல்லறிவு வரப்

பெற்ற பித்தர் போன்று நீங்கிச் சென்றான்.

[யுத்த - வீடண 33 : 3-4]

140. "உதயகிரி யெனுங் கடவுணுதல் கிழித்த விழியேபோ லுதயஞ் செய்தான்"

உதயகிரி என்னும் உருத்திரனின் நெற்றியிலிருந்து திறந்து தோன்றிய நெருப்புக்கண் போலச் சூரியன் தோன்றினான். [பால - மிதிலை - 150 : 4]

141. "உதயக் குன்றத்தோ டொத்ததி னுலாவுறு கதிர்ன்"

உதயகிரியில் உலாவும் சூரியனின் கதிர்போலக் குங்குமச் சேறணிந்த இராவணனின் தோள்களில் குண்டலங்கள் தோய்ந்தன. [யுத்த - இராவ-தேர் - 11 : 1]

142. "உதயஞ் செய்த தாதையு மனைய னானான்"

கிட்கிந்த மலையிலுள்ள சுக்கிரீவன், மலையில் தோன்றும் சூரியனை ஒத்தான். [கிட்கி - கிட்கி - 104:4]

143. "உதிரத்தின் செம்மை யாலு முதிக்கின்ற கதிரோனொத்தான்"

அம்பினால் தாக்குண்டு குருதியொழுகும் நிலையில் தோன்றும் அனுமன் எழுகின்ற செஞ்ஞாயிறு போல விளங்கினான். [யுத்த - நிகும் - 96 : 4]

144. "உம்பர் தோயு மராமரத் தூடுசெல்
அம்பு போன்றனன்"

மராமரத்தைத் துளைத்துச் சென்ற இராம பாணம் போல, மரங்களை விலக்கி இலக்குவன் விரைந்து சென்றான். [கிட்கி - கிட்கி - 12 : 2-3]

145. "உயர்ந்தவர்க் குதவிய வுதவி யொப்பவே"

உயர்ந்தவர்களுக்கு உதவிய உதவிபோல வாமனன் திரிவிக்கிரமனாக உயர்ந்து எழுந்தான்.

[பால - வேள்வி - 35 : 4]

146. "உயிரிரக்கும் கொடுங் கூற்றி னுளையச் சொன்னன்"

'கரிய செம்மல் ஒருவனைத் தந்திதி', என்று விசுவாமித்திரன் தயரதனை நோக்கி வினவியது உயிரைக் கூற்றுவன் இரந்தது போன்றது. [பால - கையடை - 10 : 4]

147. "உயிரில் யாக்கையைச், சொல்லெனு மமிழ்திற் றுளித்த தென்னவே"

'வேந்தனைத் தருது மீண்டு' என்னும் மொழி, உயிரில்லாத உடலுக்கு உயிர் வந்தாற் போல அயோத்தி மக்கட்கு மகிழ்வூட்டிற்று. [அயோ - ஆறு - 22 : 3-4]

148. "உயிரெலா முறைவதோ ருடம்பு மாயினன்"

உயிரெல்லாம் உறையும் உடம்பெனத் தயரதன் மக்களுக்கு விளங்கினன். [பால - அரசி - 10 : 4]

149. "உயிர், உடைந்த போதி னுடல்விழுந் தென்னவே"

உயிர் போனவுடன் விழும் உடல் போலத் தய ரதன் விழுந்த இடத்தில் கோசலை விழுந்தாள்.
[அயோ - நகர் - 30 : 3-4]

150. "உயிர்குறியா, நேடி வந்தது கண்டில தாமென நின்றான்"

உடலைவிட்டுச் சென்ற உயிர், மீள வந்து உடலைக் காணாது நின்றாற்போல, இராமன் பர்ணசாலையோடு சிதையையும் காணாது திகைத்து நின்றனன்.
[ஆரணி - சடாயு உயிர் - 158 : 3-4]

151. "உயிர்பிரிந், துடல்சென் றென்னவே"

இராமனை விட்டுப் பரதன் கேகய நாட்டிற்குப் புறப்பட்டது உயிரைவிட்டு உடல் தனியே சென்றதைப் போன்றது. [பால - பரசு - 48 : 4]

152. "உயிர் போகத்தான், தனியிருந்த வுடலன்ன"

அரக்கரோடு போர் உடற்றச் சென்ற இராமனைப் பிரிந்திருக்கும் சீதை, உயிர் போகத் தனித்து விடப்பட்ட உடல் போலானாள். [ஆரணி - கரன் - 187:3-4]

153. "உரகம் பூண்ட வுருவை பொருந்தினன்"

இலக்குவனைச் சுமந்து நின்ற அனுமன் குதிரையை ஒத்தனன். [யுத்த - நாக - 143 : 1]

154 "உரற்றின பறவையை யூறு கொண்டெழச்
சிற்றின பார்பபினில்"

தாய்ப் பறவையை வல்லூறு கொண்டு செல்லுவதைக் கண்ட குஞ்சுகள் பதறுவ போலச், சுக்கிரீவனைக் கும்பகர்ணன் தூக்கிச் சென்றபோது வானரர் பதைத்தனர். [யுத்த - கும்ப - 269 : 1-2]

155. "உருக்கிய செம்பன வுதிரக் கண்ணினன்"

செம்பின் உருக்குப் போன்ற செந்நிறக் கண்ணினன் கும்பகர்ணன். [யுத்த - கும்ப - 265 : 4]

156. "உருக்கிய செம்பி னுற்ற நீரென வுரைக்க லுற்றான்"

உருக்கிய செம்பில் வார்க்கப்பட்ட நீர் அதனுள்ளே கொதித்து அடங்குவது போல மாரீசன் உள்ளம் கொதித்து அடங்கினன். [ஆரணி - மாரீ - 201 : 4]

157. "உருக்கென உருகிய உதிரந் தோய்ந்தன
முருக்கெனச் சிவந்தன."

பொன்னுருக்குப் போல உருகிக் குருதி வழிந்தாற்போன்று பலாசம் பூவைப் போலத் திரிகூடாசலம் சிவந்து தோன்றியது. [யுத்த - வருண - 47 : 2-3]

158. "உருத்துல கெடுத்தகரு மாவினையு மொத்தான்"

உலகைப் பெயர்த்து எடுத்த வராகமூர்த்தி

போல, அனுமன் பிலத்தினைக் கைகளால் எடுத்துப் பிளந்து வெளியேறினன். [கிட்கி - பிலம் - 69 : 4]

159. "உருமிடித் துழிபுலைங் தொளிக்கு நாகமொத்து
இரியலுற்றன"

இடியொலி கேட்ட நாகங்கள் போன்று, இராவணனின் நாணொலி கேட்ட வானரர் நடுங்கினர்.
[யுத்த - முதற் - 124 : 1-2]

160. "உருமே றென வெய்தான்"

இராவணன் சுடர்வெங்கணையினை உருமேறு போல எய்தான். [யுத்த - இராவ-வதை - 46 : 4]

161. "உருளுறு சகட வாழ்க்கை"

இன்பமும் துன்பமும் மாறி மாறி வரும் வாழ்க்கை, சகடத்திற் பொருந்திய உருளை ஒக்கும்
[யுத்த - கும்ப - 139 : 4]

162. "உலக ளந்தவன் வளர்ந்தன னுமென வுயர்ந்தான்"

உலகளந்த திருமால் போல இராவணன் தேவர்கள் வியப்ப வளர்ந்து நின்றான்
[யுத்த - இராவ-தேர் - 27 : 4]

163. உலகு யெயிற் றிடைகொ ளேனமென லானன்"

அசோக வனத்தை அழித்த அனுமன், உலகை எயிற்றிடைக் கொண்ட வராகம் எனலானன்.
[சுந்தர - பொழில் - 8 : 3]

164. "உலர்ந்த வன்க ணுலோபர் கடைத்தலை
புலர்ந்து நிற்கும் பரிசிலர் போலவே"

உலோபியரின் வாயிலை அடைந்து பொருள் பெறாது வாடும் புலவர்கள் போல, நீர் நிறைந்த குளம் இருப்பினும் மடை திறந்து பாய்ச்சுவார் இன்மையால் பசிய பயிர்கள் வாடின. [அயோ - பள்ளி – 26 : 3-4]

165. '' உலோப மொன்றுமே, அளப்பருங் குணங்களை
யழிக்கும் ''

உலோப குணம் ஒன்று மட்டுமே ஏனைய குணங்களை அழிப்பதுபோலத் தாடகை மருத நிலத்தை அழித்துப் பாலை நிலமாக ஆக்கினாள். [பால - தாட - 42 : 1-2]

166. '' உலையிற்ப டிரும்பென வன்மை யொடுங்க ''

உலைக்களத்தில் சம்மட்டி தாக்குவதனால் நிலை மாறும் இரும்புபோலச், சுக்கிரீவனின் கைத்தாக்கலினால் கும்பனது மலைபோன்ற மார்பு பிளவுபட்டது.

[யுத்த - அதிகா - 246 : 3]

167. '' உலையுற வெந்த பொன்செய் கம்மியர் கூடமொப்பக்
குலையுறு பொறிகள் சிந்த வீசித்தோள் கொட்டி
யார்த்தான் ''

உலைக்களத்தில் கம்மியரின் சம்மட்டி தாக்கும் பொழுது எழும் தீச்சுடர்போலக் கும்பகர்ணன் மலை யொன்றை அனுமன் மீது சுடர் எழும்வண்ணம் எறிந்தான்.

[யுத்த - கும்ப - 198 : 3-4]

168. '' உவாமதிக் கீழுயர், காரு மொத்தனன் ''

முத்துக் குடைக்கீழ் நின்ற இராவணன் முழு நிலவின் கீழுள்ள மேகத்தை நிகர்த்தான்.

[யுத்த - முதற் - 98 : 3-4]

169. '' உவவுறு வந்து கூடுமுடுபதி யிரவி யொத்தார் ''

உவாவுற ஒன்றாக வந்து சேர்கின்ற சந்திர சூரியர்களை இராமனும் சுக்கிரீவனும் ஒத்தனர்.

[கிட்கி - நட்பு - 21 : 4]

170. '' உள்ளது மறுதுதவு வள்ளலையு மொத்த ''

வெள்ளம் வற்றிய காலையிலும் ஆறு ஊற்றென

நின்று உதவுவது போல, வறுமையுற்ற விடத்தும் வள்ளல் இரவலரைக் காணும்பொழுது தம்மிடம் உள்ளவற்றை உவந்து அளிப்பர். [பால - வரை - 23 : 4]

171. " உள்ளம் போற்செலுங் கழுகினுக் கரசனு மொத்தான் ',

மனம்போல் விரைந்து செல்லும் கழுகரசன் சடாயுபோல் இராவணன் முன் சுக்கிரீவன் பாய்ந்து வந்து நின்ருன். [யுத்த - மகுட - 5 : 4]

172. " உள்ளுறை யுயிரிலா வுடலு மொக்குமே "

மன்னனில்லாத நாடு உயிரில்லாத உடல் போன்றது. [அயோ - ஆறு - 7 : 4]

173. " உறையும் விண்ணக முடலொடு மெய்தின ரொத்தார் "

இராமனுக்கு ஆட்சி நல்குவது குறித்துத் தயர தன் கூறிய சொல்லைக் கேட்டவர், விண்ணகத்திற்கு உட லோடு அடைந்தவர் போன்ற நிலை பெற்றனர்.
[அயோ – மந்திர - 77 : 4]

17 -. " ஊச லாடு முளமொழிந் தோதுவான் "

அனுமனின் தடுமாறும் உள்ளம் ஊஞ்சலின் நிலையுற்றது. [சுந்தர - நிந்தனை - 22 : 4]

175. " ஊசல் புரிபவர் போல் "

ஒரு பெண் இராமனைத் தழுவ வேண்டுமென்று பலமுறை தேரின் பின் சென்று நாணத்தினுல் திரும்பி வந் தாள். அச்செயல் ஊசலாடுதலை ஒக்கும்.
[பால - உலா - 37 : 1]

176. " ஊச னின்று, ஆட்டவும் "

இராமன் குறித்த காலத்தில் வரவில்லையே என்

னும் கலக்கத்தினுல் பரதனுக்கு உயிர் போகவும், மீண்டும் வந்தால் காணலாமே என்னும் ஆசையினுல் உயிர் மீளவும் செய்து ஊசலாடுதல் நிலையுற்றது.

[யுத்த - மீட்சி - 213 : 3-4]

177. ''ஊடிய மடந்தையர் வதன மொத்தன''

ஊடல் கொண்ட பெண்களின் முகத்தை முதிர்ந்த செந்தாமரை மலர்கள் ஒத்தன.

[கிட்கி - கார் - 113 : 1]

178. ''ஊட்டரக் குண்ட போலு நயனத்தான்''

திற்றப் பெற்ற அரக்கு படியப் பெற்றன போன்ற சிவந்த கண்களை உடையவன் அக்ககுமாரன்.

[சுந்தர - அக்க - 1 : 3]

179. ''ஊட்டிய வல்விட முற்று முற்றுவார்க்கு
ஊட்டிய நல்மருந் தொத்த தாமரோ''

இராமன் வரவில்லையே என்னும் கலக்கத்தினுல் நஞ்சை உண்டவர் போல் இறக்கும் நிலையிலிருந்த பரதன் போன்றோர், அனுமன் காட்டிய மோதிரத்தைக் கண்டவுடன் விடத்தை நீக்கிய மருந்தைப் பெற்றாற்போல உயிரைப் பெற்று மகிழ்ந்தனர். [யுத்த - மீட்சி - 246 : 2-3]

180. ''ஊட்டு நஞ்ச முண்டானெத் துயங்கினுன்''

தான் நெருப்பில் விழுந்து இறந்தபின் தம்பி ஆட்சிப் பொறுப்பினை எற்க வேண்டுமென்று பரதன் கூறிய மொழியினைச் செவிமடுத்த சத்துருக்கனன் நஞ்சை உண்டவன் போன்று மனம் நொந்தான்.

[யுத்த - மீட்சி - 221 : 3]

181. ''ஊது வன்றுருத்தி போலு யிர்த்து யிர்த்து
யங்கினுன்''

விரகதாபத் தீயினுல் வெந்து உலைந்து வருந்தும்

இராவணன் உலைக்களத்துத் துருத்திபோலப் பெருமூச்சு விட்டான். [ஆரணி - மாரீ - 91 : 4]

182. '' ஊதை யெறிய வொசிபூங் கொடி யொப்பார் ''

பெருங்காற்றால் நலிவுறும் பூங்கொடிபோல அயோத்தி மகளிர நடுங்கினர். [அயோ - நகர் - 98 : 4]

183. '' ஊமரின் மனத்திடை யுன்னி விம்முவாள் ''

தான்கொண்ட காம நோயினை, ஊமை போல மனத்தில் அடக்கிச் சீதை வேதனையடைந்தாள்.
[பால - மிதிலை - 42 : 2]

184 ' ஊரோடு மடுத்தொளி யோனையுறுங்
காரோடு நிறக்கத நாகமனான் ''

சூரியனைப் பற்றச் சென்ற மேகமும், இராகு கேதுக்களும் போன்று அங்கதன் மகாபாரிசுவானின் தேரைப் பற்றச் சென்றான். [யுத்த - படைத் தலைவர் - 75 : 1-2]

185. '' ஊழிக்கடை முடிவுற் றிரியுமை கேள்வனை யொப்ப ''

பரசுராமனின் சிற்றமிகு தோற்றம், ஊழிக் காலத்துத் திரியும உமையொரு பாகனை ஒத்திருந்தது.
[பால - பரசு - 11 : 4]

186. '' ஊழிக் கிளர்காரிடி யொத்தது குத்து மோதை ''

வாலியும் சுக்கிரீவனும் ஒருவரையொருவர் குத்துமோசை, ஊழிக்காலத்துப் பேரிடியோசையை நிகர்த்தது. [கிட்கி - வாலி - 43 : 4]

187. '' ஊழித் தீயென வுண்ணுவோ ''

ஆழிக் கையவன் அம்பு உலகை ஊழித்தீயென அழிக்கும். [சுந்தர - சூளா - 50 : 3-4]

188. '' ஊழி நாயகன் றிருவயி றெுத்துள திவ்வூர் ''

மன்னுயிரெல்லாம் ஒருவழி வாழ இடம் தரும்

ஊழிநாயகனின் திருவயிறுபோல இலங்கை எல்லாவற்றையும் தன்னுள் அடக்கித் தோன்றியது [சுந்தர - ஊர் - 9 : 2]

189. "ஊழி நெருப்பி னுருத்தனை யொப்பாள்"

சிவந்த மயிருடைய அயோமுகி ஊழித்தீ போன்றவள். [ஆரணி - அயோ - 45 : 4]

190. "ஊழியி னிறுதிக் காலத் துருத்திர மூர்த்தி யொத்தான்"

பொழிலை இறுத்த அனுமன் ஊழிக்காலத்து உருத்திரமூர்த்திபோல நின்முன்.
[சுந்தர - பொழில் - 46 : 4]

191. "ஊழ்கொண்ட சமயத் தன்று னுருவுகண் டாரை யொத்தார்"

வெவ்வேறு முறையினை உடைய பல மதங்களில் குறிப்பிடும் இறைவனின் வடிவங்கள் பலவற்றினுள் ஒவ்வொரு மதத்தினரைப் போல, இராமனுடைய அங்கங்களில் ஒவ்வொன்றினையே கண்டு பெண்கள் மகிழ்ந்து நின்றனர்.
[பால - உலா - 19 : 4]

192. "ஊன முற்றிட மண்ணி னுதித்தவர்
ஞான முற்றுபு நண்ணினர் வீடென"

பாவத்தினுல் மண்ணை அடைந்த தேவர், ஞானத்தினுல் விண்ணை அடைந்தாற்போல, இராவணனுல் கொணரப்பட்ட கற்பக மரங்கள் அனுமனுல் எறியப்பட்டு விண்ணுலகை அடைந்தன. [சுந்தர-பொழில் - 23:1-2]

193. "எட்கு லாமல ரேசிய நாசியர்"

எள்ளின் மலரை எள்ளும் நாசியர்.
[அயோ - பள்ளி - 21 : 1]

194. "எந்திரத் திடுகரும் பாமென நெரிவார்"

அனுமனால் பற்றப்பட்ட அரக்கர் ஆலையிலிட்ட கரும்பென நைந்தனர். [சுந்தர - கிங்க - 40 : 3]

195. "எந்திரப் பொறியி னிற்ப"

எந்திரத்தால் இயக்கும் பாவை போன்று, முதல்நாள் போரில் தோற்று வந்த இராவணனைக் கண்டவர் அசைவற்று நின்றனர். [யுத்த - கும்ப - 5 : 3]

196. "எந்திர மனைய வாழ்க்கை யினிச்சில ருகந்தெ னென்றார்"

எந்திரம் போன்று இன்னபோது அழியுமென்று அறியப்படாது இந்த உயிரோடு கூடி வாழும் வாழ்க்கையினை உவந்து என்ன பயன்? [யுத்த - இந்திர - 46 4]

197. "எந்திர மெனக்கடி தெடுத்தவ னெறிந்தான்"

இராவணன் எந்திரம் போன்று விரைவில் சுக்கிரீவனை எடுத்து எறிந்தான். [யுத்த - மகுட - 23 : 3]

198. "எரிகின்ற, கிச்சி னுருக்கிட் டுய்ந்தனன்"

எரிகின்ற நெருப்பில் இரும்பைக் காய்ச்சிச் செவியில் செருகினாற் போல இராவணனின் சொற்கள் மாரீசனுக்குத் துன்பம் தந்தன. [ஆரணி - மாரீ - 176 : 1-2]

199. "எரிபோற் குஞ்சி"

நெருப்பைப் போன்ற செந்நிற மயிருடைய அரக்கர். [சுந்த - அக்க - 41 : 4]

200. "எரி முளிபுற் கானிற் கலந்தென"

புல்லுடைக் காட்டை அழிக்கும் நெருப்பென அரக்கரை அனுமன் அழித்தான்.

[சுந்தர - அக்க - 26 : 1]

201. ''எரியிடை வீழ்ந்த விட்டி லல்லரோ''

இராமனைத் தவிரப் பிறர் தன்னருகில் வரின் எரியிடை வீழ்ந்த விட்டில் போல அழிவர் என்று மாயாசனகனைச் சீதை வெகுண்டு உரைத்தனள்.

[யுத்த - மாயாசனக - 68 : 2]

202. ''எரியுந் தீயை நெய்யினு லவிக்கின் ருமால்''

தீவினையினுல் உழல்பவர் மதுவருந்துதலையும் மேற்கொள்வது நெருப்பினை நெய்கொண்டு அணைக்க முயற்சி செய்வது போல துன்பமிகுதிக்கே காரணமாகும்.

[கிட்கி - கிட்கி - 91 : 4]

203. ''எரியுறு மெழுகானுர்''

இராமனைப் பிரியும் முனிவர், அனலில் உருகும் மெழுகென மனம் உருகினர். [அயோ - கங்கை-65 : 4]

204. ''எரியெனற்குரியா ரென்றே யெண்ணுதி''

மன்னர் என்போர் நெருப்பெனச் சொல்லத் தக்கவர். [கிட்கி - வாலி - 137 : 3]

205. ''எரியொப்பாள்''

நெருப்பெனச் சினங்கொண்ட இலங்கை மாதேவி. [சுந்தர - ஊர் - 89 : 1]

206. ''எலி யெலா மிப்படை யரவம் யானென''

பரதன் படை எலி ; குகன் பாம்பு

[அயோ - குக-10 : 1]

207. ''எல்லியும் பகலும் போலத் தழுவன ரெழுவிற் ருேளார்''

இரும்புத் தூண்களைப் போன்ற தோள்களையுடைய வீடணனும், சுக்கிரீவனும் இரவும் பகலும் போல் ஒருவரையொருவர் தழுவினர்.

[யுத்த - வீடண-123 : 4]

208. ''எல்லிவான் மதியி னுற்ற கறை''

இரவில் விளங்கும் மதிக்குற்ற கறையினைப் போலத் தனக்குற்ற பழியுண்டு என்று வருந்தியிருந்தான் இராமன். [யுத்த - இந்திர - 61 : 1]

209. ''எழுது பாவை யன்னாள்''

மரவுரிக் கோலத்தில் தாயர் முதலானவரோடு வரும் இராமனைக் கண்ணுற்ற சீதை சித்திரப் பாவை போன்று திகைத்து நின்றனள்.

[அயோ - நகர் - 220 : 4]

210. ''எழுபது வெள்ளம் யாக்கைக் கோருயி ரெய்திற் றன்றே''

இராவணனின் மகுட மணிகளைப் பறித்துப் பறந்து வந்து, இராமனின் திருவடிகளில் வணங்கும் சுக்கிரீவனைக் கண்டு இருவரோடும், எழுபது வெள்ள வானரப் படைக்கும் உயிர் வந்தாற் போன்ற உணர்வு ஏற்பட்டது.

[யுத்த - மகுட - 33 : 4]

211. ''எழுவென மலையென வியைந்த தோளினாய்''

இலக்குவனின் தோள் இரும்புத் தூணையும் மலையையும் போல் விளங்கியது.

[ஆரணி - அயோமுகி - 85 : 4]

212. ''எறிதிரைக் கடலென விரங்கி ஏங்கினார்''

தயரதனின் அறுபதினாயிரம் தேவியர் அரற்றுமொலி கடலொலி போல எழுந்தது.

[அயோ - நகர் - 180 : 4]

213. ''ஏசில்போ ரரக்கன் மார்பி னிடைபறித் தெருவை வேந்தன்
விசிய வடக மீக்கோ ளிதென''

சடாயு எறிந்த இராவணனின் இரத்தினமாலை

யைப் போலக் கோதாவரியாறு தோன்றியது.

[கிட்கி - ஆறு - 29 : 3-4]

214. "ஏய்ந்த தம்முடம், பிட்ட உயிர்க்கிடம்
ஆய்ந்து கொள்ளும் அறிஞர்"

கூடுவிட்டுக் கூடு பாயும் ஆற்றலுள்ள யோகியர் போல, வானரங்கள் எடுத்தெறிந்த மலைகளோடு கடலில் விழ்ந்த பாம்புகள் மீளவும் தம் வாழிடமான மலைக் குகைக் கண் சார்ந்தன. [யுத்த - சேது - 36 : 1-2]

215. "ஏற்றனகம் மாற்ரு னென்ஞ
வறியவ ஞெருவன் வண்மை பூண்டவன் மேற்சென்
றென்ன"

இரப்பவர்க்குக் கரவாமல் உவந்தளிக்கும் தன்மையுடைய வள்ளலிடம் இரவலர் செல்வதுபோல, வீரனுன இலக்குவனை நாடி அரக்கர் அவனுடன் போர்புரிய வந்தனர். வள்ளலைப் போல அவனும் அவர் மனம் சலிக்கும் வண்ணம் அம்பு மழை பொழிந்தான்.

[யுத்த - முதற் - 147 : 3-4]

216. "ஏற்றினங் கன்றினைப் பிரிவுற் றெங்கணும்
ஆற்றலி ஞற்றுவ தரிதி னெய்திய
பாற்றுறும் பனிமுலை யாவின் பான்மையான்"

கன்றினைப் பிரிந்து தவிக்கும் பசு, தன் கன்று எதிரே வரப் பால் சொரிந்து மகிழ்வதுபோல, இலக்குவனைப் பிரிந்த இராமன் வருநதி நிற்கும் நிலையில், தம்பி தன்முன் வரக்கண்டு துன்பம் நீங்கி இன்புற்ருன்.

[ஆரணி - அயோமுகி - 84 : 2-4]

217. "ஐயன் வைகு மாலென நின்ற தன்றே"

சீதை தங்கியிருந்த மரம் மட்டும் அனுமனுல் அழியாது ஊழிக் காலத்துத் திருமால் தங்கிய ஆலமரமென நிலைத்து நின்றது. [சுந்தர - பொழில் - 44 : 4]

218. " ஒருமணி, நெடும்பற் ப∴றலை யரவி னுழைதொறு
முழைதொறு முலாவ "

மணியினை இழந்த நாகம் அலைந்து திரிவது போலப் பெருமூச்செறிந்து இராவணன் சீதையைத் தேடி வந்தான் [சுந்தர - நிந்தனை - 19 : 4]

219. " ஒன்றிய போகமும் யோகமு மொத்தார் "

மணத்தவிசில் இராமனும் சீதையும் ஒன்றிய போகமும் யோகமும் என ஒத்திருந்தனர்.

[பால - கடிமண - 86 : 4]

220. " ஓங்க லொப்பான் "

வாலி மலையை ஒப்பான்.

[சுந்தர - உருக் - 92 : 2]

221. " ஓங்கல்க டலைக டோன்ற வொளித்தவ னுயர்ந்த
கும்பம்
பூங்குழற் கங்கை நங்கை முலையெனப் பொலிந்த
மாதோ "

நீரில் நீந்திச் சென்ற யானைகளின் மத்தகங்கள் கங்கை நங்கையின் மார்பகங்கள் போன்றன.

[அயோ - குக - 54 : 3-4]

222. " ஓங்கல்போற் புயத்தினன் "

நீலன் மலை போன்ற புயத்தை உடையவன்.

[யுத்த - அதிகா - 224 : 4]

223. " ஓதத்தின் மேவுமது கைடவரை யொத்தாள் "

திருமாலை எதிர்ப்பதற்குப் பிரளயக் கடலில் சென்ற மதுகைடவரை, அனுமனை எதிர்க்கச் சென்ற அங்கார தாரை ஒத்து விளங்கினள். [சுந்தர - கடறுவு - 76 : 4]

224. "ஒதியர், 'தொண்டையங் கனியிதழ்த் தோன்றல் சான்றது"

மகளிரின் கொவ்வைக் கனி போன்ற அதர பானம் போன்று பொய்கை நீர் சுவையுடையது. [கிட்கி - பம்பை - 12 : 3-4]

225. "ஓராழித் தேர்"

சூரியனின் தேர்த்தட்டைப் போன்றது சீதையின் அல்குல். [கிட்கி - நாட - 37 : 4]

226. "ஓர்ந்துணர் வில்லவ ருள்ள மொப்பது"

ஆய்ந்துணரும் அறிவில்லாதவர் மனத்தைப் போன்று, பொய்கை நீர் தனக்கொரு நிறமின்றிச் சார்ந்த மணிகளின் நிறத்தைக் கொண்டது. [கிட்கி - பம்பை - 2 : 4]

227. "ஓவியப் பாவை போன்றனள்"

கன்னிமாடத்தின் அருகில், இராமனைக் கண்டு அசைவற்றிருந்த சீதை சித்திரப் பதுமைபோல விளங்கினாள். [பால - மிதிலை - 39 : 2]

228. "ஓவியம் முயிர்பெற் றென்ன வுவந்தர சிருந்தகாலை"

சித்திரப் பாவையர் உயிர் பெற்றனர் போலத் தேவியர் பலர் சூழ இந்திரன் ஆசனத்தில் அமர்வது போலத் தயரதன் அமர்ந்தான். [பால-கோல - 1:2]

229. "கங்கசாலந் தொடரக் கடற்செலூஉம்
வங்க மாமென வந்தெதிர் தாக்கினான்"

கடலிற் செல்லும் மரக்கலம் போல், பருந்துகள் தொடரத் தேரினை வச்சிரமுட்டி என்னும் அரக்கன் செலுத்தி வானரரைத் தாக்கினான். [யுத்த-முதற்-53 : 3-4]

230. "கஞ்சத்தி னளவிற் றேனும் கடலினும் பெரிய கண்கள்'

சீதையின் முகம் தாமரை மலரின் அளவை

உடையது என்ருலும் அவளுடைய கண்களோ கடலைக் காட்டிலும் பெரியன. [ஆரணி - மாரீ - 70 : 4]

231. " கடக்க வொண்ணு வினையென வந்து நின்ற மான்"

எவராலும் விலக்கமுடியாத ஊழ்வினை போல மாயமான் வந்தது. [ஆரணி - மாரீ - 226 : 3-4]

232. " கடம்திறந் தெழுகளி றனைய கார்முகில் "

மதம் ஒழுகும் களிறெனக் காளமேகம் விளங்கியது. [கிட்கி - கார - 109:1]

233. " கடலி னார்ப்பான் "

அகம்பன் என்னும் அரக்கன் கடலைப் போல ஆரவாரஞ் செய்தான். ]யுத்த - பிரமா - 133:4]

234. " கடலினைப் புரையுறு மருவிக் கண்ணினன் "

கடலைப் போலக் கண்ணீர் பெருக்கும் சம்பாதி. [கிட்கி - சம்பாதி - 24 :4]

235. " கடலி னோடும், வங்கமென லாயதொரு தேரின்மிசை வந்தான் "

கடலில் ஓடும் மரக்கலம் போன்ற தேரில் கரன் வந்தான். [ஆரணி - கரன் - 170 : 3 - 4]

236. " கடலொன்றினொ டொன்று மலைக்கவும் காவன்மேருத்
திடலொன்றினொ டொன்றமர் செய்யவும் "

கடலும் கடலும், மேருவும் மேருவும் பொருவது போன்று வாலியும், சுக்கிரீவனும் மோதினர். [கிட்கி - வாலி - 40 : 1-2]

237. " கடல்க டைந்தமால் வரையினைச் சுற்றிய கயிற்றின் "

மந்தர மலையைச் சுற்றிய வாசுகி என்ற கடை கயிறு போல இராவணனின் தோள்களில் போர்வலயங்கள் விளங்கின. [இராவ - தேர் - 10 : 1-2]

238. ''கடல் போன்றது''

ஆயிரம் குதிரைகள் பூட்டிய இராவணன் தேர் கடலைப் போன்றது. [யுத்த - முதற் - 95 : 2]

239. ''கடற்றுணை நெடியதன் கண்ணி னீர்ப்பெருந்
தடத்திடை யிருந்ததோ ரன்னத் தன்மையாள்''

தடாகத்தின் நடுவில் அன்னம் இருந்தாற் போலக் கடலினும் பெரியவாய கண்களிலிருந்து பெருகும் கண்ணீர் வெள்ளத்தினிடையில் சிதை இருந்தனள்.
[சுந்தர - காட்சி - 64 : 3 - 4]

240. ''கடனஞ் சனையாள்''

கைகேயி பாற்கடல் விடம் போன்றவள்.
[அயோ-நகர் - 39 : 3]

241. ''கடித்தகதிர் வாளெயிறு மின்கனல''

இராவணனின் பற்களின் ஒளி மின்னலொளி என விளங்கியது. [ஆரணி - மாரி - 49 : 3]

242. ''கடிய மாசுணங் கற்றறிந் தவரென வடங்கி''

கொடிய மலைப் பாம்புகள் கற்றறிந்தவர் போல் அடங்கி முனிவர்கள் ஏறிச் செல்லும் படிகளெனக் கிடந்தன.
[அயோ - சித்திர - 35 : 2]

243. ''கடுவுண் டுயிரின் னிலைகா ணுதியோ''

கொடிய விடத்தை உண்டவர் மாள்வதுபோல், பிறன் மனையை நயந்ததால் இராவணனும் மாள்வான்.
[ஆரணி - சடாயு உயிர் - 97 : 4]

244. ''கடைசியர் முகமென மலர்வன கமலம்''

உழத்தியரின் முகமெனத் தாமரைகள் மலர்ந்தன. [பால - நாட்டு - 43 : 4]

245. " கடைநாள், தண்ணென் மாமதி கோளொடுஞ்
சாய்ந்தெனச் சாய்ந்தான் "

கற்பாந்த காலத்தில் இராகுவுடன் தண்மதி விண்ணிலிருந்து வீழ்வதுபோல நாகவடிவினதான படைக் கலன் பிணிக்க மண்ணில் அனுமன் சாய்ந்தான்.

[சுந்தர - பாச - 58 : 3 : 4]

246. " கடைந்தநா ளமிழ்தி னோடும் கடலிடை வந்து
தோன்றும்
மடைந்தையர் சூழ நின்ற மந்தரம் போல மாதோ"

பாற்கடலில் தெய்வ மகளிர் சூழநின்ற மந்தர மலை போன்று, புனலில் மகளிர் சூழ அரசனொருவன் விளங்கினன்.

[பால - புனல் - 12 : 3 - 4]

247. " கடையுக முடிவெனும் காலம் பார்த்தயல்
புடைபெய ராநெடுங் கடலும் போலவே "

ஊழிக்காலம் வரை ஒடுங்கி நிற்கும் கடல் போலக் கும்பகர்ணன் உறக்கத்தில் ஆழ்ந்திருந்தான்.

[சுந்தர - ஊர் - 129 : 3-4]

248. " கடையூறுறு கணமாமழை கால் வீழ்ந்தென "

ஊழிககாலத்து மழைபோல, இராவணன் எண்ணிறந்த அம்புகளைத் தொடுத்துவிட்டான்.

[யுத்த - இராவ-வதை - 49 : 4]

249. " கணமயிற் குழுவி னம்மைக் காண்கின்றார் "

இராவணனால் பிடிக்கப்பட்ட தேவ மாதர்கள், கார்கால மேகத்தை நோக்கும் மயிற கூட்டமெனத் தம்மைக் காண்பதாக இராமன் இலக்குவனிடம் கூறினான்.

[யுத்த - இலங் - காண் - 46 : 4]

250. "கண்ணன்மெய் வடிவெனக் கருகிக் கார்விசும்பு"

திருமாலின் மேனி போலக் காளமேகங்கள் தோன்றின. [கிட்கி - கார் - 11 : 3]

251. "கண்ணிலான் பெற்றிழந்தா லென வுழந்தான்"

'கரிய செம்மல் ஒருவனைத் தந்திதி' என்ற கௌசிகன் மொழி கேட்ட தயரதன், கண்ணில்லாதவன் கண்ணைப்பெற்று இழந்தவன் போலத் துயருற்றான்.
[பால - கையடை - 11 : 4]

252. "கண்ணுள் மணிபோன் மகவை யிழந்தும்"

கண்ணிலுள்ள கருமணியினைப் போன்ற மகவை இழந்த பெற்றோர். [அயோ - நகர் - 88 : 1]

253. "கண்ணொடு மனஞ்சுழல் கறங்கு போல்வாய்
மண்ணிடை விழுந்தனன்"

தந்தையின் மரணங் கேட்ட இராமன், மனமும் கண்களும் காற்றாடியெனச் சுழல விழுந்தான்.
[அயோ - திருவடி - 58 : 3-4]

254. "கதலியின் கனியினைக் கழியச்
சேரும் சூசியிற் சென்றது"

வாழைப் பழத்தைத் துளைத்துச் செல்லும் ஊசி போல இராமனின் அம்பு வாலியின் மார்பைத் துளைத்துக் கொண்டு சென்றது. [கிட்கி - வாலி - 57 : 1-2]

255. "கதிரவன் முளைக்கு முந்துவந்து
உற்றெழு மருணன துதயம்"

இராமனின் கணைகள் நெற்றியில் தாக்கக் குருதி யொழுகும் நிலையிலிருந்த கும்பகர்ணன், சூரியன் தோன்றுவதன் முன் வந்து பொருந்தி எழும் அருணனது உதயம் போன்றான். [யுத்த - கும்ப - 288 : 3-4]

256. "கதிரிலாப் பகலும்"

அரசனில்லாத நாடு ஆதவனில்லாப் பகல் போன்றது. [அயோ - ஆறு - 7 : 2]

257. "கந்தமல ரிற்கடவுள் தன்வரவு காணும்
இந்திரனெ னக்கடிதெ ழுந்தடிப்ப ணிந்தான்"

பிரமனின் வரவு காணும் இந்திரன் போலத் தயரதன் கௌசிக முனிவனை எதிர்கண்டு அடிபணிந்தான்.
[பால - கையடை - 4 : 3-4]

258. "கந்தனை யனையவர்"

முருகப் பெருமானை ஒத்தவர் இளையோர்.
[பால - நாட்டு - 48 : 2]

259. "கந்துக மெனக்கடி தெழுந்தெதிர் கலந்தான்"

இராவணனால் எறியப்பட்ட சுக்கிரீவன், பந்து போல விரைந்து எழுந்து போரிட வந்தனன்.
[யுத்த - மகுட - 23 :4]

260. "கமலக் கால்கள் நெய்யெரி மிதித்தாலென்ன
நிலத்திடைப் பதைத்தாள்"

மகோதரனால் பிணிக்கப்பட்ட மாயாசனகனைக் கண்ட சீதை, தாமரைப் பாதங்கள், நெய்பெய்து எரியும் நெருப்பை மிதித்தாற் போலப் பூமியில் துடித்தாள்.
[யுத்த - மாயா-சனக - 32 : 1-2]

261. "கமலங்களி னுள்ளுறை, திண்க ளிச்சிறு தும்பியென"

பெண்களின் கண்கள் தாமரை மலரில் உள்ள வண்டுகள் போல் தோன்றின.
[பால - எழுச்சி-49 : 2-3]

262. "கமலத்தின் காடுபூத்த காளமா மேக மொத்தான்"

வலிய கையும், காலும், கண்ணுமாகிய

தாமரைக்காடு பூத்த காளமேகத்தை இராமன் ஒத்திருந்தான். [யுத்த - இலங்-காண் - 28 : 4]

263. ''கமுகும் வாரிச், சங்கமும் நிகர்தி''

சீதையின் கழுத்திற்குக் கமுகும், சங்கும் உவமையாவன. [கிட்கி-நாட - 48 : 3-4]

264. ''கயங்குடைந் தாடும் வீரக்களி றொத்தான் கவயன்''

நீர்நிலையில் மூழ்கிக் கலக்கி விளையாடுகிற வீரத் தன்மையுடைய களிறு போன்றான் கவயன் என்னும் வானரன். [யுத்த - நாக - 59 : 3]

265. ''கயற்கடல்சூ ழுலகெல்லாங் கைந்நெல்லிக் கனியாக்கி''

அரசன் ஒருவன் உலகமெல்லாவற்றையும் உள்ளங்கை நெல்லிக்கனி போலத் தன்வசப்படுத்தினன்.

[பால - குலமுறை - 10 : 1]

266. ''கயிலை யொத்தலால்''

பாண்டு மலை கயிலை மலையை ஒத்தது

[கிட்கி - ஆறு - 25 : 4]

267. ''கரியவாய் வெளிய வாகும் வாள்தடங் கண்க ளம்மா',

சீதையின் கண்களின் கருவிழிகள் திருமால் போலவும், கருவிழிகளைச் சுற்றிலுமுள்ளவை பாற்கடல் போலவும் தோன்றின. [கிட்கி - நாட - 54 : 4]

268. ''கருங்கடல் கலக்குமது கைடவரை யொத்த''

கடலைக் கலக்கும் மதுகைடவர் என்னும் இரு அசுரர்கள் போல, வெள்ளநீரை யானைகள் கலக்கின.

[பால - வரை - 25 : 4]

269. ''கருமலை செம்மலை யனைய காட்சியர்''

நீலமலையும் சிவந்த மலையும் போல இராமனும்

இலக்குவனும் தோன்றினர்.

[ஆரணி - சடாயு-காண் - 15 : 1]

270. "கரும்பனைய செஞ்சொனவில் கன்னியர்"

கரும்பைப் போன்றது கன்னியரின் மொழி.

[அயோ - தைல - 11 : 4]

271. "கரும்பையுங் கடந்த சொல்லாள்"

சீதை கரும்பும் கைக்கும் இனிய சொல்லினுள்.

[கிட்கி - நாட - 36 : 3-4]

272. "கரும்பை யுஞ்சுவை கைப்பித்த சொல்லியர்"

கருப்பஞ்சாற்றையும் கைப்புச் சுவையுள்ளது என்று சொல்லும்படியான இனிய சொற்களையுடைய தேவ மாதர்.

[சுந்தர - ஊர் - 197 : 3]

273. "கலிங்கக் கம்மியர். நூலென"

ஆடை நெய்வோரின் நூல்போல, இலக்குவன் அரக்கர் படையினைத் துணித்து வீழ்த்தினன்.

[யுத்த – நிகும் - 52 : 1-2]

274. "கலுழ னண்ணப் படங்குறை யரவ மெத்தா யுற்றது"

கருடன் நெருங்கப் படமொடுங்கும் நாகமென இந்திரசித்து தளர்வது ஏனென்று இராவணன் வினவினுன்.

[யுத்த - இந்திர - 2 : 3-4]

275. "கலுழன், உலங்கின் மேலெழுந் தென்ன"

கருடன் கொசுவுடன் போர்புரிய எழுந்தாற் போலாகும், இராவணன் குரங்குடன் போர் செய்யப் புறப் படுதல் எனப் பஞ்சசேனுபதிகள் கூறினர்.

[சுந்தர - பஞ்ச - 2 : 1-2]

276. "கல்லனை மனத்தினை யுடைக்கை கேசி"

கல்லைப் போன்ற வன்மனம் உடையவள் கைகேயி.

[கிட்கி - கிட்கி-108 : 1]

277. '' கல்லாப், புல்லர்க்கு நல்லோர் சொன்ன
பொருளெனப் போயிற் றன்றே ''

கல்லாத மூடர்க்கு நல்லறிவாளர் சொன்ன பொருள்போலத் தங்காமல் இராமன் எறிந்த அம்பு தாடகையின் மார்பினை ஊடுருவிச் சென்றது
[பால - தாட - 71 : 3 - 4]

278. '' கல்லொக்கும் நெஞ்சில் ''

தாடகையின் நெஞ்சு வயிரக் கல் போன்றது.
[பால - தாட - 71 : 3]

279. '' கவடுகப் பொருத காய்களி றன்னான் ''

தன்னைப் பிணித்த மரக்கிளை முறியும் வண்ணம் ஊனங்கொள்ளும் களிறு போன்றவன் இராவணன்.
[யுத்த - வானர - 1 : 1]

280. '' கவரிப் பானிற வால்புடை பெயர்வன கடிதில்
பவள மால்வரை யருவியைப் பொருவின பாராய் ''

பவள வரையில் அசையும் கவரிமான்களின் வால்கள் பவளவரை அருவியை நிகர்க்கும்
[அயோ - சித்திர - 5 : 3-4]

281. '' கவிஞர் நாவருஞ். சொல்லெனத் தொலைவில்
தூணி ''

குற்றமற்ற கவிஞரின் நாவில் தோன்றும் சொல் லென அழிவில்லாத தூணிரத்தை இராமன் தோளில் தாங்கினான்.
[யுத்த - முதற் - 114 : 3-4]

282. '' கவிஞனோ ரங்கத முரைப்பப்
போற்ற ரும்புக ழிழந்த பேரொருவனும் போன்றான் ''

ஆற்றலுடைய கவிஞன் பாடிய வசைப் பாட்டால் புகழிழந்த ஒருவன் போல, இராமனின் கணையால்

இராவணன் மகுடமிழந்து நாணி நின்ருன்.
[யுத்த - முதற் - 219 : 3 - 4]

283. "கழற் கண்ண பேயும்"

பசிய கழற்சிக்காய் போன்ற கண்ணையுடைய பேய். [யுத்த - அதி - 234 : 3]

284. "கழுத்தெனக் கமுக மார்ந்தன"

பாக்கு மரங்கள் மகளிர் கழுத்தை ஒத்தன.
[அயோ - மந்தரை - 30 : 2]

285. "கழை தொடர் வனமெரி யுண்டா லெனவெறி
படைஞர் கலந்தார்"

மூங்கிற்காடு எரியுற்ருலென அரக்கர் சூழ்ந்தனர். [சுந்த - கிங்க - 23 : 4]

286. "கறங்கெனத் திரிதல்"

திரிசிரா காற்ருடி போலச் சுழன்று போர்த் தொழில் புரிந்தான். [ஆரணி - கரன் - 133 : 4]

287. "கறவையும் கன்று மொப்பார்"

பேரருளாளர் தம்மைச் சார்ந்தார் இடருறுவாராயின், கன்றைக் கண்டு கசியும் தாய்ப்பசு போல, மனம் கசிந்துருகி இடர் களைவர். [யுத்த - வேலே - 49 : 4]

288. "கற்பகக் கொம்பினைக் கரிய மாசுணம்
பொற்புறத் தழுவிய தன்மை போன்றதால்."

கற்பக மரக் கிளையைச் சுற்றிய கரும்பாம்பு போல, தோலுறையைத் தாமரைக் கையில் பொருந்த இராமன் அணிந்தான். [யுத்த - முதற் - 112 : 3 - 4]

289. "கற்பக மனையவக் கவிஞர் நாட்டிய
சொற்பொரு ளாமெனத் தோன்றல் சான்றது"

கற்பக மரம் போன்ற கவிஞரின் சொற்பொருள்

போலப் பொய்கை நீரும் ஆழமுடைத்தாய் தெளிந்திருந்தது.
[கிட்கி - பம்பை - 5 : 3 - 4]

290. "கற்றவர் மான நோக்கிற் கவரிமா வனைய நீரார்"

மானத்தை நோக்குமிடத்து அரிய நூல்களைக் கற்றவர் கவரிமானைப் போன்றவர்களாவர்.
[அயோ - மந்திர - 9 : 4]

291. "கற்றிர டோளினுன்"

மலை போலத் திரண்ட தோள்களை உடைய குகன்.
[அயோ - கங் - 28 : 4]

292. "கனக மேனி"

பொன்னிற மேனியன், இலக்குவன்.
[ஆரணி – அயோமுகி - 85 : 2]

293. "கனற் பொறி சிந்து செங்கணுர்"

வானரரின் சினம் கனற்பொறி போன்று வெளிப்பட்டது.
[கிட்கி - பிலம் - 16 : 4]

294. "கனைகட லமரர் நாட்டிய
மந்தர கிரியென வயங்கு வான்றனை"

பாற்கடலில் தேவர்கள் நாட்டிய மந்தர மலை போன்று சடாயு விளங்கினுன்.
[ஆரணி - சடாயு காண் - 3 : 3 - 4]

295. "கன்மருங்கெழுந் தென்றுமோர் துளிவரக் காணு
நன்மருந்து"

கல்லினிடையே எழுந்து மழைத்துளியினைக் காணுத நல்ல மருந்துச் செடிபோல அரக்கியர் நடுவே இருந்த சீதை இராமனின் அருளைப் பெருது வாடினுள்.
[சுந்தர - காட்சி - 3 : 2 - 3]

296. "கன்றுதனி தாவிவரல் கண்டாங்கு
அன்புருகு சிந்தையொடு மாவுருகு மாபோல்"

தன்னை நோக்கிக் குதித்துவரும் கன்றினைக் கண்டு உருகும் ஆவினைப் போலத் தேரில் வரும் இராமனைக் கண்ட பெண்கள் உருகி நின்றனர்.

[அயோ-கைகேயி - 94 : 2 - 3]

297. "கன்று தாங்கிய தாயென மாருதி களித்தான்"

ஈன்ற கன்றைத் தாங்கிய தாய் போல, இராமனைத் தோளில் தாங்கிய அனுமன் மனங்களித்தான.

[யுத்த - முதற் - 219 : 4]

298. "கன்று படப் பிழைத்த தாய்போற் கவல்வாளை"

கன்று இறக்க உயிர் பிழைத்த தாய்ப்பசு போலத் தானியமாலை, மகன் அதியகாயன் இறந்தமை கண்டு பெருந் துன்பமுற்றாள். [யுத்த - அதிகா - 274 : 2]

299. "கன்று பிடியுறத் தீங்குறுந், தாயைப் போலத் தளர்ந்து
மயர்ந்தனள்"

அரக்கரால் அனுமன் பிணிக்கப்பட்டதை அறிந்த தேவி, கன்றினைப் பிறர் பற்றத் துடிக்கும் தாய்ப்பசு போலத் துவண்டாள். [சுந்த - பிணி - 36 : 3-4]

300. "கன்று பிரிந்துழிக், கறவை யொப்பக் கரைந்து
கலங்கினள்"

கன்றைப் பிரிந்தகாலையில் கலங்கும் தாய்ப்பசு போல், காடு நோக்கிச் செல்லும் இராமனை எண்ணிக் கோசலை பெருந்துயர் அடைந்தனள்.

[அயோ - நகர் - 14 : 3-4]

301. "கன்னிய ரல்குற் றடமென"

கன்னியரின் அல்குலினிடம் போன்று அகழி

யாராலும் சாரவொண்ணாதது. [பால - நகர - 14 : 3]

302. "கன்னெடு மனத்தி"

கல்மனம் கொண்ட சூர்ப்பணகை.
[ஆரணி - சூர்ப்ப - 69 : 2]

303. "காயெரி யனையான்"

சுழன்று எரியும் நெருப்புப் போன்று இராவணன் சினங் கொண்டான்.
[யுத்த - மாயாசனக - 31 : 3]

304. "காய்சின உழுவை தின்னிய வந்த கலையிளம்
பிணையெனக் கரைந்தாள்"

தன்னை நோக்கி வரும் இராவணனைக் கண்ட சீதை, புலியைக் கண்ட மான் போல நடுக்கமடைந்தாள்.
[சுந்தர - நிந்தனை - 21 ; 4]

305. "காய்ந்தி ரும்பைக் கருமகக் கம்மியன்
தோய்த்த தண்புன லொத்ததத் தோயமே"

காய்ச்சிய இரும்பு தோய்ந்த நீர்போல, விரக வேதனை அடைந்த இராமன் நீராடிய நீர் வெம்மையுற்றது.
[கிட்கி - பம்பை - 36 ; 3-4]

306. "காய்ந்தபே ரிரும்பின்வன் கட்டி காலுறத்
தோய்ந்தநீ ராமெனச் சுருங்கிற் றாழியே"

இராவணன், இராமன் தேரிலுள்ள இடிக் கொடியை அறுத்து எறிய, அது கடலில் வீழ்ந்ததால், காய்ந்த இரும்பின் கட்டி தோய்ந்த நீர்போலக் கடல் நீர் வற்றியது. [யுத்த - இராவ-வதை : 75 : 3-4]

307. "காரிடை யுருமின்மாரி கனலொடு பிறக்கு மாபோல்"

மேகத்திலே மழை இடிவடிவ நெருப்புடன் தோன்றுவதுபோல இராவணனின் கண்கள் நெருப்பையும் கண்ணீரையும் சொரிந்தன. [ஆரணி - மாரீ - 65 : 3]

308. ''காரிழிந் தாலெனக் கணைகள் சிந்தினன்''

காளமேகம் இறங்கினாற் போலக் கணைகளைத் திரிசிரன் சிந்தினன் [ஆரணி - கரன் - 131 : 4]

309. ''காரின்வரவு கண்டுவக்கு நாடக மயிலென நடப்ப''

மேகத்தின் வரவு கண்டு ஆடும மயிலென, இராவணனுடன் மகளிர் மகிழ்வுடன் நடந்து வந்தனர் [சுந்தர - நிந்தனை - 12 : 4]

310. ''காரெனக் கடிது சென்றான்''

இராமனை தங்கியிருந்த இடத்தைக் காணப் பரதன் குகனுடன் மேகம் போல விரைந்து சென்றான்.

[அயோ - குக - 39 : 1]

311. ''காரெனும் பெயர்க் கரியவன் மார்பினிற் கதிர்முத்து
ஆர மென்னவும் பொலிந்தன''

திருமாலின் மார்பில் திகழும் முத்துமாலை போலக் கொக்குகள் மேகத்தினிடையே பறந்து சென்றன.

[கிட்கி - கார் - 41 : 1-2]

312. ''கார்க்கடல் கமலம் பூத்தெனப் பொலிவானைக்
கண்டான்''

கமலம் பூத்த கரிய கடல்போலத் தோன்றிய இராமனை வீடணன் கண்டான்

[யுத்த - வீடண - 132 : 4]

313. ''கார்முழங் கரவம்வெங் கரிமுழங் கரவமே''

இடியோசை போல் களிற்றின் பிளிறலொலி எங்கும் ஒலித்தது. [பால - எதிர் - 9 : 4]

314. ''கார்வர வலர்பயிர் பொருவுவர் களியால்''

முனிவர்களிடம் கற்றுத் திரும்பும் தயரதன் மக்கள் நால்வரையும், காரின் வரவு கண்டு செழிக்கும்

பயிரென அயோத்தி மக்கள் எதிர்நோக்கி மகிழ்ந்தனர்.
[பால - திருவவதார - 131:4]

315. '' கால பாசம்போல் ''

வானரர்களின் வால்கள் காலபாசம் போன்று அரக்கரின் உயிரைக் குடித்தன. [யுத்த - அதி - 95 : 2]

316 '' காலம்பார்த் திறைவேலை கடவாத கடலொத்தான் ''

ஊழிக்காலத்தின் வரவை நோக்கி அடங்கி நிற்கும் கடல்போலத் தேவியைத் தேடி வந்த அனுமன் சினமடங்கி நின்றான். [சுந்தர - ஊர் - 222 : 4]

317. '' கால னேயனான் ''

தூமிரன் என்னும் அசுரன் காலனைப் போன்றவன். [கிட்கி - ஆறு - 6 : 4]

318. '' காலுயர் வரையிற் செங்கே ழருவிபோல் ''

ஓங்கிய தாழ்வரையில் இழியும் செந்நிற அருவி போலக் குருதி நீர் ஒழுக அங்கதன் நின்றான்.
[யுத்த - அதி - 201 : 2]

319. '' காலெனக் கடுவென ''

காற்றைப் போலவும் கடுநஞ்சைப் போலவும் இலக்குவன் அரக்கரை வீழ்த்தினான்.
[யுத்த - நிகும்பலை - 52 : 1]

320. '' காலை மாலைக், குண்டலம் ''

அங்கதனின் இருகுண்டலங்கள் சூரிய சந்திரர் போன்றன. [கிட்கி - வாலி - 141 : 1-2]

321. '' கால் ஒன்றினொன்று குலமெனப் பிரிந்த தன்றே ''

குலம் பல கிளைகளாகப் பிரிவது போலக், கால்வாய் பல கிளைகளாக நீர் பெருகி ஓடியது.
[பால - ஆற்று - 18 : 4]

322. '' கால்விரிந் தெழுகுடை கணக்கி லோதிமம் ''

வெண்கொற்றக் குடைகள் விண்ணில் பறக்கும் எண்ணிறந்த அன்னப் பறவைகளைப் போல் விளங்கின.

[பால - எழுச்சி - 12 : 1]

323. '' காவலிற் கலையூர் கன்னியை யொக்கும் ''

காத்தல் தொழிலால் கலைமானை ஊர்தியாக உடைய துர்க்கையை மதில் ஒத்தது.

[பால - நகர - 9 : 3]

324. '' காவி யுங்கருங் குவளையு நெய்தலும் காயாம்
பூவை யும்பொரு வானவன் ''

நீலோற்பல மலர், கருங்குவளை, நெய்தல், காயாம் பூ போன்ற மலர்களை நிறத்தால் இராமன் ஒத்திருந்தான். [கிட்கி - கார் - 51 : 1-2]

325. '' காவிரி நாடன்ன கழனி நாடு ''

கோசல நாடு காவிரி நாட்டினைப் போன்ற கழனிகளை உடையது. [அயோ - குக - 1 : 2]

326. '' காளி போன்றன னிராவணன் ''

நடுஇரவில் வந்த இராவணன் காளி போன்றனன். [யுத்த - வேலே - 17 : 3]

327. '' காற்றுக் கோடிய பஞ்சென ''

இராவணன் எறிந்த அம்புகளைக் காற்றுக்கு முன் ஓடின பஞ்சு போலாகுமாறு இலக்குவன் தன் கணைகளால் சிதைத்தான். [யுத்த - வேலே - 19 : 3]

328. '' கானகக் கரியெனக் கலங்கினர் கடல்
மீனெனக் கலங்கினர் வீரர் வேறுளார் ''

களிற்றுருத்தலைக் காணாத யானைக் கூட்டம் போலப் போர்க்களத்தில் இராமனைக் காணாத சுக்கிரீவனும்,

இலக்குவனும் கலங்கினர். ஏனையோர் அணை கட்டிய காலத்தில் கடல்மீன்கள் எனக் கலங்கினர்.

[யுத்த - இராவ-வதை - 82 : 3-4]

329 ''கானுயர் வரைநிகர் கார்த்தவீரியன்''

காட்டில் உயர்ந்து நிற்கும் மலையெனக் கார்த்தவீரியார்ச்சுனன் தோன்றினன்.

[சுந்தர - நிந்தனை - 50 : 2]

330. ''கிளைத்துணை மழலை வண்டு கின்னர நிகர்த்த''

வண்டின் ரீங்காரம் கைக்கிளை என்னும் இசையொடு பொருந்தியது. [கிட்கி - கார் - 32 : 1]

331. ''கீழ்ப்பால், தொல்லைக் கிரியின் தலைதோற்றிய ஞாயிறென்ன''

கிழக்கில் தோன்றும் ஞாயிறுபோல வாலி வந்தனன். [கிட்கி - வாலி - 28 : 3-4]

332. ''குகனெனப் பெயரிய கூற்றி னாற்றலான்''

குகன் எமனைப் போன்ற ஆற்றல் உடையவன்.

[அயோ - குக - 7 : 1]

333. ''குத்துக்கொடு நெடுங்கோல்படு களிறுமெனக் கொதித்தான்''

அங்குசத்தால் தாக்கப்பட்ட களிறு போல இராமபாணத்தால் தாக்குண்ட இராவணன் கொதித்தனன்.

[யுத்த - இராவ-வதை - 56 : 4]

334. ''குமிழேர் மூக்கின்''

குமிழ மலரையொக்கும் மகளிர் மூக்கு.

[கிட்கி - கிட்கி - 77 : 3]

335. ''குயவன் திண்மட்கலத் தாழி''

குயவனின் மட்கலத் திகிரிபோல் வாலியும்

சுக்கிரீவனும் சுழன்று போருடற்றினர்.

[கிட்கி - வாலி - 37 - 4]

336. ''குரக்கு நாயகன், முகமே யொத்தது முரிமண்டிலம்''

மறையும் சூரியன் வாலியின் முகம் போன்றது.

[கிட்கி - தாரை - 19 : 3-4]

337. ''குராவரும் பணைய கூர்வா ளெயிற்றுவெங்குருளை நாகம்
விராவுவெங் கடுவிற் கொல்லு மெல்லிணர் முல்லை''

சராமரத்தின் அரும்பைப் போன்ற பற்களை யுடைய நாகத்தின் நஞ்சு போன்று முல்லைக்கொடி இராம னுக்கு விரகதாபத்தைத் தோற்றுவித்தது.

[கிட்கி - கார் - 59 : 1-2]

338 ''குவளை நாண்மலர், கள்ளுகு வனமெனக் கலுழுங் கண்ணினர்''

அமளியில் இருந்த கணவர் சென்றதால் வருந் திய மகளிர் குவளை மலர் தேனைப் பிலிற்றுவது போலக் கண்ணீர் உகுத்தனர். [ஆரணி - மாரீ - 120 : 4]

339. ''குழந்தையை யுயிர்த்தமல டிக்குவமை கொண்டாள்''

அனுமன் காட்டிய மோதிரத்தைக் கண்ட சீதை, குழந்தையைப் பெற்ற மலடி போன்று பெரு மகிழ்ச்சி அடைந்தாள். [சுந்தர - உருக் - 65 : 3]

340. ''குழலின், புயல்புடை பெயர்வன''

மகளிரின் கூந்தல்போல் சோலைகளில் மேகங்கள் திரிந்தன. [பால - நாட்டு - 42 : 2-3]

341. ''குழலின் வண்டு ஏர்முழங் கரவமே''

கூந்தலின் மொய்க்கும் வண்டுகளின் ரீங்காரம் இன்னிசை போன்றது. [பால - நாட்டு - 42 : 2-3]

342. " குழம்பு ஆக்கினுர் கவிசுடங் குழுவை "

அதிகாயன் தலைமையில் வந்த அரக்கர் வானரரைக் குழம்பு போலாகும்படி அழித்தனர்

[யுத்த - அதிகா - 127 : 3-4]

343. " குழைப டிந்ததொரு குன்றின் முழங்கா
மழைப டிந்தனைய தொங்கல் வயங்க "

குண்டலங்களை அணிந்த குன்றில் முழங்காத மேகம் படிந்தாற்போல, இராவணனின் தோள்களில் கருங் குவளைத் தொங்கல்கள் விளங்கின.

[யுத்த - இராவ-வானர - 8 : 3-4]

344. " குறியவன புனலெலாம் வயிற்றிற் கொண்டநாள்
மறிகட லொத்த வயோத்தி மாநகர் "

மக்கள் நீங்கிய அயோத்தி, அகத்தியர் குடித்த கடல்போல் ஆனது. [அயோ - ஆறு - 45 : 3-4]

345. " குன்றிடைத் தொடுத்து விட்ட பூங்கணை கொல்ல தென்றுன் "

இராமன் தன்மேல் தொடுக்கும் அம்பு, குன்றின்மேல் எய்யும் மலர் போலாகும் என்று இராவணன் சீதையிடம் கூறினுன். [ஆரணி - சடாயு உயிர் - 71 : 4]

346. " குன்றினடி வந்துபடி கொண்டாலென "

மலையடியில் படியும் மேகமென இராவணனின் கால்களில் சூர்ப்பணகை விழுந்தாள்.

[ஆரணி - மாரீ - 45 : 3]

347. " குன்றினு முயர்ந்த தோளான் "

குன்றைவிட உயர்ந்த தோள்களை உடைய கும்பகர்ணன். [யுத்த - கும்ப - 43 : 4]

348. " குன்றின் மேலிவர் கோளரி யேறென "

குன்றின்மேல் பொருந்திய சிங்கம்போல, அனுமன் தோளில் இராமன் ஏறி நின்றான்.

[யுத்த - முதற் - 219 : 2]

349. " குன்றின்விழ் குரீஇக்கு ழாத்திற் குழாங் கொள "

குன்றின் மீது மொய்க்கும் குருவிக் கூட்டம் போல வானரர் கும்பகர்ணனைச் சூழ்ந்து போரிட்டனர்.

[யுத்த - கும்ப - 183 : 1]

350. " குன்று சுற்றிய மதகரிக் குலமன்ன குறியார் "

குன்றைச் சுற்றிச் செல்லும் மதங்கொண்ட களிறுகள் போல மகோதரனைச் சூழ்ந்து அரக்கர் சென்றனர்.

[யுத்த - பிரமா - 97 : 4]

351. " குன்றுறழ் வரிசிலைக் குவவுத் தோளினாய் "

குன்று போன்ற திரட்சியுற்ற தோள்களை உடைய தயரதன். [பால - திருவவதார - 80 : 2]

352. " குன்றெழுந்து சென்றதென "

குன்று ஒன்று நடந்ததெனப் பரதன் குகனை நோக்கிச் சென்றான். [அயோ - குக - 28 : 2]

353. " குன்றெனக் குவிந்த தோளாய் "

குன்றெனக் குவிந்த தோளை உடையவன் மாரீசன். [ஆரணி - மாரீ - 203 : 2]

354. " கூடினர் துவரிதழ்க் கோலங் கொண்டனச்
சேடுற நறுமுகை விரிந்த செங்கிடை "

செங்கிடை என்னும் செடிகள் கூடின மகளிரின் சிவந்த வாயிதழை ஒப்பன. [கிட்கி - கார் - 113 : 3-4]

355. ''கூற்றின்வெம் புருவமன்ன சிலைநெடுங் குரல்''

எமனினும் கொடிய புருவம் போன்ற வில்லின் ஒலி எழுந்தது. [யுத்த - முதற் - 143 : 3-4]

356. ' கூற்றுமால், கொண்ட தென்னக் கொல்கின்ருன் ''

எமன் வெறி கொண்டாற்போல, இலக்குவன் பகைவரை அழித்தான். [யுத்த - முதற் - 156 : 3]

357. ''கேட்டுணர் கல்வி யோடு ஞானமும் கிடைத்த தொத்தார் ''

கல்வியும் ஞானமும் கூடிய வழியே தீவினை பொழியும். அவ்வாறே இராமனும் சுக்கிரீவனும் நண்பராய் இணைந்த பிறகு அரக்கரழிவு ஏற்படும்.
[கிட்கி - நட்பு - 22 : 4]

358 ''கைத்துன்று நெல்லியங் கனியிற் காண்டியால்''

தான் கூறும் உண்மைப் பொருளைக் கையி லுள்ள நெல்லிக்கனி போல விளங்கக் காணலாம் என்று பிரகலாதன் இரணியனிடம் கூறினன்.
[யுத்த - இரணி - 58 : 4]

359. ' கைப் போதக நிகர் காவலர் ''

காவலர் யானைகள் போன்றவர்.
[பால - பரசு - 2 : 3]

360. ''கைப்போதக மெனமுந்தவன் கடுந்தேரெதிர் நடந்தான் ''

இராவணனுடைய தேரெதிர் களிறுபோல் அனுமன் நடந்து போரைத் தவிர்க என்றனன்.
[யுத்த - முதற் - 160 : 3-4]

361. ' கையுற நெல்லித் தன்மையி னெல்லாங் கரை கண்டாம் ''

கையிலுள்ள நெல்லிக் கனியின் தன்மை

போலச் சீதையைப் பற்றிய செய்தியை அறிந்தோம்.
[கிட்கி - மயே - 1 . 2]

362. " கையுறு நெல்லிபங் கனியிற் காண்டி "

இராமன் கூறிய சொற்களோடு மோதிரமும் இருப்பதால், ஐயுருமல் கையிலுள்ள நெல்லிக்கனி போல் தன்னை அறியவேண்டுமென அனுமன் சீதையிடம் கூறினன்.
[சுந்த - உருக் - 25 : 3]

363. " கொடுவெங் கரிகொல் லியவந் ததன்மேல்
விடுமுண் டைகடா வவிரும் பினையே "

கொல்ல வந்த களிற்றின் மீது மண்ணுருண்டை எய்வது போல, இராமனுக்கு இராவணன் தீங்கிழைப்பதும் விளைகும். [ஆரணி - சடாயு உயிர் - 97 : 1-2]

364. " கொங்கையி னிரைத்தன கனக கும்பமே "

மகளிர் மார்பகம் போன்ற பொற்கும்பம்.
[அயோ - பந்தரை : 30 : 4]

365. " கொடிப் படிந்ததென "

ஒரு பூங்கொடி தரையில் விழுந்ததுபோலச் சீதை மாயமானின் கூக்குரல் கேட்டு வருந்தி விழுந்தாள்.
[ஆரணி - சடாயு உயிா - 3 : 2]

366 " கொண்டல் போல்பவன் "

கரிய மேகம் போன்றவன் இராமன்.
[அயோ - மந்திர - 53 : 4]

367. " கொண்முகின் மேலெழு கோளின் "

மேகத்தின் மேலே தோன்றும் ஞாயிறுபோல் கூந்தலில் தோன்றும் சூளாமணி விளங்கியது.
[சுந்தர - சூளா - 87 : 1]

368. '' கொலையின்மேற் குறித்த வேடன் கூர்ங்கணை
யுயிரைக் கொள்ள
மலையின்மேன் மயில்வீழ்ந் தென்ன ''

கொலைத் தொழில் வேடனின் கூரிய அம்பு உயிரைக் கொள்ள மலையின்மேல் மயில் மயங்கி வீழ்ந்தாற்போல் இந்திரசித்தின் உடலின்மேல் மண்டோதரி விழுந்து கலங்கினள். [யுத்த - இராவ-சோக - 45 : 3-4]

369. '' கொழுநர்வர, மணித்தே ரோடும் கண்டுமனங்
களிசிறப்ப
வொளிசிறந்து மெலிவகலும் கற்பி னார்போல் ''

வினைமுடித்துத் தேர்மீது திரும்பும் கணவரைக் கண்டு முகமலரும் மனைவியரைப் போல் சூரியனின் வரவு கண்டு பொய்கைத் தாமரைகள் மலர்ந்தன.

[பால - மிதிலை - 152 : 2-3]

370. '' கொள்ளை மாக்களிற் கொண்டன ரேகவே ''

அயோத்தியில் வள்ளை மாக்களும், வயிரியரும் களிறுகளையும், பிடிகளையும் கொள்ளை மாக்கள் போலப் பரிசிலாகப் பெற்றுச் செல்வர்.

[அயோ - பள்ளி - 32 : 3-4]

371. '' கோட லுரிபோல் ஆராயி னேதுமிலையாதி ''

வெண்காந்தள் கிழங்கை உரித்தால் உள்ளே ஒன்றும் விளங்கிக்கொள்ள முடியாத வண்ணம் இருக்கிறு னென இராமனைக் கருடன் புகழ்ந்தான்.

[யுத்த - நாக - 261 : 3-4]

372. '' கோளரா, இடிக்குடைந்த தெனப்புரண் டேங்கினள்''

மாயமாவின் கூக்குரல் கேட்ட சீதை, இடி யோசைக்கு உடைந்த அரவெனப் புரண்டாள்.

[ஆரணி - சடாயு உயிர் : 3 : 3-4]

373. '' கோளரிம்மா, மேல்பான் மலையிற் புகவிங்கிருள்
வேறிருந்த
மால்யானை யீட்டமென வந்து பரந்த தன்றே ''

சிங்கம் அகன்றதும் பதுங்கியிருந்த யானைக் கூட்டம் வெளிப்படுவது போலச் சூரியன் மேற்குத் திக்கில் மறைந்ததும் இருள் பரவியது. [பால - வரை - 70 : 2-4]

374. '' கோளிலா மன்ன னாட்டிற் குடியெனக் குலைவ
கண்டான் ''

செருக்களத்தில் அரக்கர் வீழ நிலைகுலைந்து ஓடிய குதிரைகள் தாங்குதலில்லா மன்னவன் நாட்டில் நிலை குலையும் குடிமக்கள் போன்றன.

[யுத்த - பிரமா - 150 : 4]

375. '' கோளின் மாச்சுடர், மண்டல மிரண்டொடு மாறு
கொண்டவே ''

பேருருவம் கொண்ட அனுமனின் இரண்டு குண்டலங்கள் சூரிய சந்திர மண்டிலங்களோடு மாறுபட்டன.
[சுந்தர - உருக் - 102 : 3-4]

376. '' சகடம் பூண்ட வுடையவ னுய்த்த காரேறு
அருளுடை யொருவனீக்க வப்பிணி யவிழ்ந்த
தொத்தான் ''

அரசுச் சுமையை நீங்கிய இராமனுக்கு வண்டிச் சுமையை நீங்கிய எருது உவமை.
[அயோ - கைகேயி - 109 : 3-4]

377. '' சகரவே லையினீர் தழுவிய கதிரிற் றலைதொறும்
தலைதொறும் தயங்கும். ''

கருநிறமுள்ள இராவணனின் பத்துத்தலை மகுடங்களுக்குக் கடலில் தோன்றும் இளஞ்சூரியன் உவமை யாகும். [சுந்தர - நிந்தனை - 1 : 3]

378- '' சங்கமு நிணைதி ''

'சீதையின் கழுத்திற்குச் சங்கினை உவமையாக எண்ணுவையோ' என்று அனுமனை நோக்கி இராமன் வினவினன். [கிட்கி - நாட - 48 : 4]

379 '' சங்கிற் பொலிந்த தகையாள் ''

சங்கைப் போல விளங்குகின்ற தூயதன்மை யுடையவள் சீதை. [யுத்த - கடருவு — 2 : 2]

380 '' சடையன் வெண்ணெயிற், றஞ்சமென் ரோர்களைத் தாங்குந் தன்மைபோல் ''

குரங்குகள் எறிந்த மலைகளை நளன் தாங்கியது, தஞ்சமென வந்தோர்களைச் சடையப்ப வள்ளல் தாங்கியது போலாகும். [யுத்த - சேது - 9 : 3 - 4]

381 '' சடையன்றன் வெண்ணெ யணுகுந்
தேசங் கலந்த மறைவாணர் செஞ்சொ லறிவாள ரென்றிம் முதலோர்
பாசங் கலந்த பசிபோ லகன்ற ''

கருடன் வருகையால் பிணித்திருந்த நாகபாசம் அகன்றது. இது, சடையப்ப வள்ளல் வாழ்ந்த திருவெண்ணெய் நல்லூரை அடைந்த வேதம் வல்ல அந்தணர்களும், புலவர்களும் கொண்ட பசி நீங்கியதற்கு ஒக்கும்.

[யுத்த - நாக - 263 : 2-4]

382 '' சண்ட மாருத மென்ன ''

கரடிக்குத் தலைவனை இடும்பன், கும்பான் என்னும் அரக்கன் மீது பெருங்காற்றென விரைந்து சென்று போர் புரிந்தான். [யுத்த - முதற் - 63 : 3]

383 '' சந்திரற் குவமைசெய் தரள வெண்குடை ''

திங்கள் போன்றது தயரதனின் வெண்கொற்றக்குடை. [அயோ - மந்திர - 6 : 1]

384 '' சந்திர னனையதோர் சரத்தினுல் ''

சந்திரன் போன்ற தோற்றமுடைய அம்பு.
[யுத்த - இராவ-வதை - 74 : 3]

385 '' சந்திர னிரவிதன்னைச் சார்வதோர் தன்மை தோன்ற ''

சந்திரன் சூரியனைச் சார்ந்தாற் போன்று சனகன் தயரதனை எதிர்கொண்டு வரவேற்றான்.
[பால - எதிர் - 4 : 3]

386 '' சான்றோர் கவியெனக் கிடந்த கோதா வரியினை
வீரர் கண்டார் ''

கோதாவரியாறு சான்றோரின் கவிபோல விளங்கியது
[ஆரணி - சூர்ப்ப - 1 : 3-4]

387 '' சாந்து செய்குவ னுமென ''

வானரப் படையினைக் கும்பகர்ணன் சாந்து போலாகுமாறு தரையில் அரைத்தான்.
[யுத்த - கும்ப - 336 : 4]

388 '' சிகர மால்வரை சென்று திரிந்துழி
மகர வேலையை யொத்தது ''

சிற்றங் கொண்டு இலக்குவன் வந்ததால் அஞ்சிய வானரர் கிட்கிந்தையில் ஆரவாரித்தனர். அவ்வூர், மந்தரமலையின் சுழற்சியால் நிலைமாறிய சுறு மீன்கள் சூழ்ந்த பாற்கடல் போன்றது.
[கிட்கி - கிட்கி - 39 : 3-4]

389 '' சிங்கக் குருளைக்கிடு தீஞ்சுவை யூனைநாயின்
வெங்கட் சிறுகுட்டனை யூட்ட விரும்பினுளால் ''

இராமனுக்குரிய ஆட்சியினைக் கைகேயி பரதனுக்கு அளிக்க விரும்பியது, சிங்கத்திற்குரிய தீஞ்சுவை உணவை இழிந்த நாய்க்குக் கொடுத்தலைப் போன்றதாகும்.
[அயோ - நகர் - 117 : 1-2]

390. '' சிங்கவே றனையான் ''

சுக்கிரீவன் ஆண்சிங்கம் போன்றவன்.

[யுத்த - வீடண - 125 : 1]

391. '' சித்திரங்க ளெனவிருந் தார்சிலர் ''

இயக்கமாதர் இராவணன் வரவு நோக்கிச் சித்திரப் பாவையர் போல இருந்தனர்.

[சுந்தர - ஊர் - 170 : 4]

392. '' சித்திரச் சுவர்நெடுஞ் சேனை தீட்டிய
பத்தியை நிகர்த்தது ''

இராமனை நாடி ஆரவாரமின்றிச் சென்ற பரதன்படை, சித்திரச் சேனையை நிகர்த்தது.

[அயோ - ஆறு - 49 : 3-4]

393. '' சித்திரத்தி னலர்ந்தசெங் தாமரை
ஒத்திருக்கு முகத்தினை யுன்னுவாள் ''

சித்திரத்தில் தீட்டப்பட்ட செந்தாமரை மலரை ஒத்திருந்த இராமனின் முகத்தினைச் சீதை எண்ணினள்.

[சுந்தர - காட்சி - 20 : 3-4]

394. '' சித்திரத்தினே ''

இராவணன் மந்திரச் சுற்றம் சூழ ஆய்ந்து கொண்டிருந்தபொழுது உலகிலுள்ள உயிரினங்கள் அவ்விடம் வர அஞ்சிச் சித்திரத்தில் தீட்டப்பட்ட உருவங்கள் போல அசைவற்று நின்றன.

[யுத்த - இராவ-மந்திர - 10 :4]

395. '' சிந்து நுண்டுளியின் சிகரத்திவலை யுருக்கிய
செம்பெனத் தெரிப்ப ''

தென்றல், மலர்களின் தேனை, உருக்கிய செம்பின் துளி சிந்துவதுபோலச் சிறு துளிகளாகச் சிதறியது.

[சுந்தர - நிந்தனை - 14 : 4]

396. ''சிந்தூரக் களிறு கூடம் புக்கெனக் கோயில் சேர்ந்தான்''

சிந்தூரம் அப்பிய களிறு கொட்டாரத்தைச் சேர்வதுபோல இராவணன் போர்க்களத்திலிருந்து தனியே அரண்மனைக்குள் சென்றான். [யுத்த - கும்ப - 5 : 4]

397. ''சிரமொ ராயிரந் தாங்கிய சேடனும்
உரவு கொற்றத் துவணத் தரசனும்
பொரவு டன்றனர் போல''

ஆதிசேடனும் கருடனும் போரிட்டது போன்று இராமனும் இராவணனும் போர்புரிந்தனர்.
[யுத்த - இராவ-வதை - 25 : 1-3]

398. ''சிலைவாளி யன்ன விசை போய்''

பர்ணசாலை நோக்கி இராமன் வில்லிலிருந்து புறப்பட்ட அம்பென விரைந்தான்.
[ஆரணி - சடாயு உயிர் - 157 : 3]

399. ''சிவந்த நற்கனி''

சிவந்து கனிந்த பழம் போன்று சூரியனின் தோற்றம் அமைந்திருந்தது. [யுத்த - மகுட - 3 : 3]

400. ''சிறையர வக்கலு ழன்கொடு சீறும்
இறையர வக்குல மொத்த திலங்கை''

கருடனின் சிறகுகள் எழுப்பிய ஆரவாரம் கேட்டு நடுக்கமடைந்த அரவங்கள் போல, அனுமனின் போர் ஆரவாரம் கேட்டு இலங்கையர் நடுங்கினர்.
[யுத்த - மாயா சீதை - 28 - 3-4]

401. ''சினவேழக் கன்று புல்லிய கோளரக் குழுவென''

பிரகலாதனைச் சுற்றிய அசுரர், சினமுடைய

யானைக் கன்றினைச் சூழ்ந்த ஆண்சிங்கங்கள் போன்றனர்.
[யுத்த - இரணி - 81 : 4]

402. '' சினையாலின், இலையிற் பிள்ளை யெனப்பொலி கின்றான் ''

ஊழிப் பெருவெள்ளத்தில் ஆலிலையில் பள்ளி கொள்ளும் பரந்தாமனைப் போல் கடலில் வீசப்பட்ட பிரகலாதன், திருமாலை நினைந்து கூப்பிய கைகளுடன் தோன்றினான். [யுத்த - இரணி - 102:3-4]

403. '' சினைவரால் ''

சீதையின் கணைக்கால்களுக்குச் சருக்கொண்ட வரால்மீன் உவமையாகும் என்பர்.
[கிட்கி - நாட. 35:3]

404. '' சீதை சேவல்பிடி யுண்ட சிறையன்ன மனையாள் ''

விராதன் இராமனைத் தூக்கிச் சென்றதைக் கண்ட சீதை, ஆண் அன்னத்தைப் பிடித்துச் சென்றதைக் கண்ட பெண் அன்னமெனத் துடித்தாள்.
[ஆரணி - விராத - 39:4]

405. '' சீதை போகின்றாள் கூந்தல் வழிஇவந்து புவனஞ் சேர்ந்த
கோதைபோற் கிடந்த கோதா வரியினைக் குறுகிச் சென்றார் ''

சீதையின் கோதை போன்று கோதாவரி தோன்றியது. [கிட்கி - ஆறு 27;3 - 4]

406. '' சீதை மேனியைப், புல்லலா மென்பது போலும் ''

இராமன் தோள்களை வெல்லலாம் என்பது, சீதை மேனியைப் புல்லலாம் என்பது போலாகும்.
[யுத்த - கும்ப - 81:3 - 4]

407. '' சீயத்திவ முழக்கம் கேட்டல் போன்றனர் ''

சிங்கத்தின் முழக்கத்தை கேட்டோர் போல, இலக்குவனின் நாணொலி கேட்ட அரக்கர் நடுங்கினர்.

[யுத்த - முதற் - 142:4]

408. '' சீயம் யானையும் புலியும் சுற்ற
அருவரை யிவர்வ தாங்கோ ரரியரசனைய ஞானன் ''

கொடிய சிங்கங்களும், யானைகளும், புலிகளும் சூழ மலையில் ஏறிச் சென்ற அரசச் சிங்கம்போல, இலக்குவன், வீடணன் ஆகியோருடன் வானரக் கூட்டமும் பின்வர இராமன் சுவேல மலைமீது ஏறிச் சென்றான்.

[யுத்த - இலங் - காண் - 26:3 - 4]

409. '' சீரிய பாலின் வேலைச் சிறுபிரை தெறித்த தன்னான் ''

சிறந்த பாற்கடலில் துளிமோர் சிந்தியதைப் போன்று சிறிய வடிவங் கொண்டு அனுமன், இலங்கையினுள் நுழைந்தான். பாலின் தன்மை மோரினால் மாறுவது போல அனுமனின் வரவால் இலங்கை விகாரப் படும்.

[சுந்தர - ஊர்தேடு - 96 : 4]

410. '' சுருதி யன்னவன் ''

அனுமன் சுருதி போன்றுவன்.

[யுதத - மகுட - 3:3]

411. '' சூரிய னுச்சி யுற்று லொத்ததவ் வுலகின் சூழல் ''

இராமன் எறிந்த அனலித தெய்வப் படையால் போர்க்களத்தைச் சூழ்ந்த இருள் விலகியது அவ்விடம் சூரியன் உச்சி வானத்தை அடைந்தாற் போன்று விளங்கியது.

[யுத்த - நாக - 218:4]

412. '' செக்கர்மேல், விரிந்த மேக மெனவிழுந் தாளரோ ''

செவ்வானம் படரப்பெற்ற மேகமெனக்

குருதியொழுகச் சூர்ப்பணகை தலைவிரிகோலத்தோடு கரன் காலில் விழுந்தனள். [ஆரணி - கரன் - 1:3 - 4]

413. "செங்கதி ருச்சி சேர்ந்த, அருவரை"

சூரியனை உச்சியில் கொண்ட மலைபோல இராமனின் திருவடியைத் தலைமீது கொண்ட வீடணன் தோன்றினன். [யுத்த - வீடணன் - 148:1-2]

414. "செங்கதிர்ச் செல்வனைச் சூழ்ந்த, ஊரழிந்து போல்"

சூரியனைச் சூழ்ந்த ஊர்கோள் அழிந்தது போலக் கும்பகருணன் ஏறிவந்த தேரும், தேரைச் செலுத்திய பாகனும் ஒரு சேர அழிந்தனர்.

[யுத்த - கும்ப - 243:1 - 2]

415. "செஞ்சுடர்க் கடவு ளென்னத் தேரிடைச் சென்று சேர்ந்தான்"

மேருமலையைச் சார்கின்ற சூரியன் போல, இராமன் தேரேறி அரண்மனையை வந்தடைந்தான்.

[பால - கடி - 78:4]

416. "செஞ்சொற் கவியின்பம்"

திருத்தமுற்ற சொற்களால் அமைந்த கவிதை தரும் இன்பம் போல் சீதை பொலிவோடு விளங்கினள்.

[பால - மிதிலை- 23:3]

417. "செந்திவினை மறைவாணனுக் கொருவன்சிறு விலைநாள்
முந்தீந்ததொ ருணவின்பய னெனலாயின"

வேதம் வல்ல அந்தணனுக்கு வறுமைக் காலத்தில் ஒருவன் அளித்த உணவின் பயன்போல, இராமன் எறிந்த அம்புகள் பயனைத் தந்தன.

[யுத்த - இராவ - வதை - 52:1 - 2]

418 "செப்பு ருக்கெனத் தெரிந்தது"

உதிரந் தோய்ந்த கடல் செப்பை உருக்கின

உருக்குப் போலச் சிவந்து தோன்றியது.

[யுத்த - படைத்தலைவர் - 53:3]

419 "செப்பெலபெண் கலச மென்பென் செவ்விள நீருந் தேர்வென்"

சீதையின் மார்பகத்திற்குச் செப்பு, பொற் கலசம், செவ்விளநீர் ஆகியவை உவமையாயின.

[கிட்கி - நாட - 43:1]

420. "செம்பு காட்டிய கண்ணிணை பாலெனத் தெளிந்தீர்"

செம்பின் நிறத்தை யொத்த கண்களின் செம்மை நிறம் அச்சத்தால் பாலென வெளுத்தது.

[ஆரணி - கரன் - 145:1]

421. "செம்பொன், உருக்கி யனைய கதிர் பாய"

செம்பொன்னை உருக்கினாற் போன்ற சூரியனின் கதிர்கள்.

[ஆரணி - மாரீ - 117:1 - 2]

422. "செருப்படியிற் பொடி யொவ்வா மானிடரைச் சீறுதியோ"

செருப்படித் துகளுக்கும் ஒவ்வாத மானிடர்.

[ஆரணி - சூர்ப்ப - 105:2]

423 "செல்லிடத் தல்லதொன் றுரைத்தல் செய்கலா
நல்லறி வாளரி னவிந்த நாவெலாம்"

தம் சொற்கள் செல்லுமிடத்தல்லாத இடங்களில் வாயடங்கும் அறிவாளர் போல, மழை பெய்யாக் காலத்துத் தவளைகள் ஆரவாரம் நீங்கிக் கிடந்தன.

[கிட்கி - கார் - 114:3 - 4]

424. "செல்லுறு கதியிற் செல்லும் வினையெனச் சென்ற தன்றே"

உயிர்களைத் தம்வயப்படுத்திச் செலுத்தும்

வினைகள் போல வெள்ளமும் ஒரு நிலத்தை வேறொரு நில மாக மாற்றிச் செல்லும். [பால - ஆற்று - 17 : 4]

425 "செவிப்புல நுகர்வதோர் தெய்வத் தேன்கொலாம்"

இராமன் மீண்டு வந்து முடிசூடுவான் என்னும் செய்தி செவிப்புலன் நுகர்வதொரு தெய்வத் தேன் போன்றது. [அயோ - ஆறு - 23 : 3-4]

426. "சேவகன் சேவடி யென்னக், காந்துகின்றது"

இராமனின் திருவடிகள் போலச் சூளாமணி இருளை நீக்கி ஒளியுடன் திகழ்ந்தது.

[சுந்தர - சூளா - 87 : 3-4]

427. "சொல்லொக்குங் கடியவேகச் சுடுசரம்"

முனிவரின் சாபமொழி போன்று விரைந்து செல்லவல்ல ஆற்றலை அம்பு பெற்றது.

[பால - தாட - 71 : 1]

428. "சொன்னிறை கேள்வியிற் றொடர்ந்த மாந்தரின்
இன்னிறப் பசலை யுற்றிருந்த மாதரின்"

ஓதற் பிரிவினை மேற்கொண்ட தலைவர் பிரிவினால் ஏற்பட்ட மகளிரின் பசலை நிறத்தை முதிர்ந்த பாக்குக் குலைகள் அடைந்தன. [கிட்கி - கார் - 117 : 1-2]

429. சொற்கலை யெனத்தொலைவி றூணிகள் சுமந்தார்"

சொற்களின் வடிவமாக உள்ள சாத்திரங்களைப் போல அம்பறாத்தூணிகள் விளங்கின.

[ஆரணி - மாரீ - 54 : 4]

430. "ஞாளி போன்றுள"

வானரங்கள் நாய்கள் போல இழிவடைந்தன.

[யுத்த - வேலை - 17 : 2]

431. "ஞான முன்னிய நான்மறை யாளர்கைத்
தான மென்னத் தழைத்தது நீத்தமே"

நான்மறையாளர் கையிற் கொடுத்த தானம் போல வெள்ளம் பெருகியது. [பால - ஆற்று - 5 : 3-4]

432. "ஞானம் நல்லறத்தோர் உன்னும் நல்பொருள்"

அறவுணர்வுடையோர் எண்ணும் நற்பொருளெனப் பூக்களையுடைய பொழில் பொலிவுடன் திகழ்ந்தது. [கிட்கி - நாட - 18 : 1-2]

433 "ஞெண்டிற் சென்றது கடிதம்மா"

நண்டு போல் நாவாய் சென்றது.
[அயோ - கங் - 66 : 4]

434. "ஞெண்டு ... போன்றுன்"

கருவினைல் அழியும் நண்டுபோல, மகனைப் பிரிவதால் தயரதன் உயிர் நீங்கினுன்.
[அயோ - தைல - 66 : 3]

435. "தகவிழந் தழிவி னன்பொருள்
போக வாறெழுகலான் செல்வம் போன்றவே"

நல்வினை வரும்பொழுது பெருகிய செல்வம் அவ்வினை நீங்கிய பொழுது குறைவது போல மலைப்பக்கங்களில் மேகங்கள் திரண்டபொழுது பெருகிய ஆற்றுநீர் மேகங்கள் நீங்கிய அளவில் வற்றியது
[கிட்கி - கார் - 108: 3-4]

436. "தங்கணு யகனிற் றெய்வந் தான்பிறி தில்லென் றுன்னும்
மங்கைமார் சிந்தை போலத் தூயது"

தங்கள் கணவரையே தெய்வமென்று எண்ணும் மங்கையரின் தூய சிந்தைபோலச் சோலை தூய்மையுடன் விளங்கியது. [பால - வேள்வி - 16 : 1-2]

437. ''தசும்பு போலுடைந் தொழியு மென்று''

இராவணன் எறிந்த தண்டாயுதம் அண்டத்தை நீர்க்குடம் போல உடைத்துவிடுமோ என்று யாவரும் அஞ்சினர். [யுத்த - இராவ-வதை - 107:3]

438. ''தடித்தா மென்னத் தன்னெதிர் செல்லும் தழல்வேலைக்
கடித்த நாகம் விண்ணின் முரிக்கும் கருளன் போல்''

நாகத்தைக் கவ்வி விண்ணில் துண்டு படுத்துகின்ற கருடன் போல, அனுமன் இலங்கைமாதேவியின் சூலத்தைப் பிடித்து ஒடித்தான்.

[சுந்தர - ஊர் - 88:1-2]

439. ''தடைபுகு மந்திரந் தகைந்த நாகம் போல்''

தடை செய்வதான மந்திரத்தால் கட்டுப்பட்ட நாகம்போல் இடையில் சாபத்தால் விழித்தலில்லாத ஆழ் துயிலைக் கும்பகர்ணன் எய்தினன்.

[சுந்தர - ஊர் - 129:1]

440. ''தட்டுறு குறங்கு போலத் தடந்துயில் கொள்வ தானன்''

இராவணனால் ஏவப்பட்ட குதிரைகள் ஆழ் துயிலில் இருந்த கும்பகர்ணன் உடலில் செல்லவும் அவன் எழுந்திராமல், தொடையைத்தட்டிக் கொடுத்தாற் போன்ற நிலையுற்றான். [யுத்த - கும்ப - 53:4]

441. ''தண்டா மரைப்பூ நெருப்புற்ற தன்மை''

செருக்களத்தில் உயிரொடுங்கிக் கிடந்த இராமனைக் கண்ட சீதை நெருப்பில் வீழ்ந்த தாமரைப் பூவைப் போலானாள். [யுத்த - சீதை களம் - 4:3]

442. ''தப்பின்றிப் பகலின் வந்த சக்கரவாக மென்பன்''

பகலில் தோன்றும் சக்கரவாகப் பறவைகள்

போன்று சீதையின் மார்பகங்கள் விளங்கின.

[சுட்கி - நாட - 43:3]

443. "தமிழெனு மளப்பருஞ் சலதி தந்தவன்"

அளவிட முடியாத கடலைப்போன்ற தமிழைத் தந்தவன் அகத்திய முனிவன். [பால- தாட - 34:1]

444. "தமிழ்த், தலைவனை நிகர்த்தத் தயங்கு தானையே"

ஆற்றல் மிக்க பரதன்படை அகத்திய முனிவரை ஒத்தது. [அயோ- ஆறு -44 : 4]

445. "தமிழ் நிகர் நறவம்"

தமிழ் மொழியை ஒத்த இனிய தேன்

[கிட்கி - பிலம் - 37 : 2]

446. "தயிருறு மத்திற் காம சரம்பட"

தயிரைக் கடையும் மத்துப்போல, மன்மதன் கணைகள் பாய்ந்தன. [பால - மிதிலை - 11 : 1]

447. "தயிருடைக்கு மத்தென வுலகைநலி சம்பரன்"

சம்பரன் உலகைத் தயிரை உடைக்கும் மத்தெனத் துன்புறுத்தினன். [ஆரணி- சடாயுகாண்- 23:1]

448. 'தயிரெனக் கடைந்தவர்க் கமுதம் தந்தது"

பாற்கடலைத் தயிர்போலக் கடைந்து வாலி தேவர்க்கு அமிழ்தம் உண்டாககிக் கொடுத்தான்.

[கிட்கி - வாலி - 18 : 3]

449. "தயிர்நிறத் துறுக ளுள்ளுந் தள்ளுற"

தயிரினது நிறத்தைக் கள் ஒத்தது.

[சுந்தர - ஊர் - 190 : 1]

450. "தவந்தி னெய்துந் துறக்கம் போற் றேன்றிற் றன்றே"

இராவணனின் ஆணையினுல் இருதுக்கள் இயங்க வில்லை. அந்நிலையில் உலகம் தவத்தால் எய்தும் துறக்க வுலகம் போலக் காலநிலை மாறுபடாது தோன்றியது.

[ஆரணி - மாரீ - 103 : 4]

451. "தவப்பயன் உருவுகொண் டெதிர்வரு மாபோல்"

தவத்தின் பயன் ஓருருவம் கொண்டாலெனப் பரத்துவாச முனிவன் வந்தான்.

[யுத்த - மீட்சி - 183 : 3]

452. "தவ்வை யாமெனக் கிடந்தனள் கேகயன் றனயை"

இலக்குமியின் தமக்கை மூதேவி போலக் கைகேயி விழுந்து கிடந்தனள்.

[அயோ - மந்தரை - 88 : 4]

453. "தழலிடு வல்லியே போலச் சாம்பினுள்"

நெருப்பிலிட்ட பூங்கொடி போல விரகதாப வெம்மையால் சிதை வாடினுள்.

[பால - மிதிலை - 43 : 4]

454. "தழலின்மேன் மிதிக்கின் றுள்போல்"

இந்திரசித்து இறந்தமை அறிந்து மண்டோதரி தழலின்மீது அடிவைத்தாற் போன்று நடந்து வந்தாள்.

[யுத்த - இராவ - சோக - 45 : 1]

455. "தளர் வெள்ளிப்பெருங் கிரியாமெல"

இராவணன் குத்தியதால் அனுமன், தளர்ந் திட்ட கைலாய மலை போலச் சலித்தான்.

[யுத்த - முதற் - 185 : 4]

456. "தளிரடி"

தளிர் போன்ற திருவடியை உடைய மண் டோதரி.

[சுந்தர - ஊர் - 197 : 2]

457. ''தளிர்களான் முளரி மேல்விழும் மையலின் மதுகரம் கடியு மாறென''

கானகம் சென்ற இராமனை எண்ணிப் புலம்பிய பெண்கள் கண்களைக் கைகளால் அடித்துக் கொண்டனர். இச்செயல் தாமரையில மொய்த்த வண்டுகளைத் தளிர்களால் ஓட்டியது போன்றது. [அயோ - நகர் - 175:2 - 3]

458. ''தள்ளரிய பெருநீதித் தனியாறு புகமண்டும் பள்ளமெனுந் தகையான்''

ஆன்றோர்களால் போற்றப் பெறும் நீதிகளாகிய பெரும் நீதிகள் புக மண்டும் கடலென்று சொல்லத்தக்க நற்குணங்களை உடையவன் பரதன்.

[பால - குலமுறை - 21:1 - 2]

459. ''தனித் தூங்குவான், விழுதலும் புகல் வேற்றிட மின்மையால்''

அழுத ரற்றுங் கிளையென வானவால்''

கடலில் வீழ்த்துவதற்காக வானவிரர் பறித்தெடுத்த ஆலமரத்தில் உள்ள பறவைகள், காக்கும் குடும்பத் தலைவன் இறந்ததால் புகலிடம் இழந்த சுற்றத்தார் போல அவல நிலை உற்றன. [யுத்த - சேது - 55:3 - 4]

460. ''தனிமந்தர மேரு முந்தை, வேலைத் திரிகின் றதுபோற்றிரி கின்றவேலை''

சினங்கொண்ட இலக்குவன் அயோத்தியில் திரிந்தது பாற்கடலில் மந்தரமலை சுழன்றதற்கு ஒக்கும்.

[அயோ - நகர் - 123 : 3-4]

461. ''தன்றாயைக் கண்ணுற்ற கன்றனைய தன்மையனாய்''

தாயைக் கண்ட கன்று போலக் கவந்தன் இராமனைக் கண்டு களித்தான்.

[ஆரணி - கவந்த-51:3]

462. " தன்னேக்கிய நெஞ்சுடை யோகியர் தம்மைச் சார்ந்த
மென்னேக்கியர் நோக்கமு மாமென மீண்ட
தவ்வேல் "

சடாயு மார்பில் இராவணன் எறிந்த முத்தலை வேல், யோகியரிடம் சென்ற மாதரின் நோக்கு எவ்வாறு தோல்வி அடையுமோ அவ்வாறு உட்புக இயலாது திரும்பியது. [ஆரணி - சடாயுஉயிர் - 119:3 - 4]

463. " தாமரைச் செவ்வியைத் தீபுனல்
கையி னுட்டும் களிற்றர சென்னவே "

நீர் நிலையில் ஒருவன் ஒருத்தியின் தலையில் நீரை அள்ளி வீசினுன். அது செந்தாமரைச் செல்வியைக் களிறு நீராட்டுதலுக்கு ஒக்கும்.

[பால - புனல் - 25:3 - 4]

464. " தாமரைத் தாளினல் "

தாமரை மலர் போன்ற இலக்குவன் திருவடி
[கிட்கி - கிட்கி - 35;3]

465. " தாமரை நாப்பண், ஆம்பல் விரிந்தா லன்ன
சிரிப்பான் "

தாமரை நடுவில் ஆம்பல் விரிந்தது போல் அனுமன் சிரித்தான். [கிட்கி - மயே-20:1 - 2]

466. " தாமரையின் மாமலரின் வாசக்
காவிரி நாண்மலர் முகிழ்த்தனைய கண்ணர் "

தாமரை மலரில் முகிழ்க்கும் காவி மலரெனப் பெண்கள் முகத்தில் கண்கள் விளங்கின.

[அயோ - தைல - 10:1-2]

467. " தாமரை வனத்திடைத் தாவு மன்னம் போல "

தாமரைக் காட்டில் தாவிச்செல்லும் அன்னம்

போல், சீதை எரியிடைப் பாய முற்பட்டனள்.

[ஆரணி - சடாயு உயிர் - 14:1]

468. "தாமரை விளக்கம் தாங்க"

அரங்கில் ஏற்றிய விளக்குப்போலத் தடாகத்தில் தாமரை மலர் தோன்றியது.

[பால - நாட்டு - 4 :1]

469. "தாயருக் கன்று சார்ந்த கன்றெனுந் தகைய னானன்"

இராமன் தாயருக்கு அப்பொழுது சேர்ந்த கன்றென்று சொல்லத்தக்கவனாயினான்.

[யுத்த - மீட்சி - 337:1]

470. "தாயில மன்னுயிர்க் கன்பினன்"

பிரகலாதன் மன்னுயிர்க்குத் தாயினும் சிறந்த அன்பினன். [யுத்த - இரணி - 19:4]

471. "தாயின் முன்னிய கன்றனையான்"

அனுமன், தாய்ப்பசுவிற்கு முன் சென்று நிற்கும் கன்றனையான். [சுந்தர - சூளா - 11:2]

472. "தாயெரி வீழக்கண்ட பார்ப்பெனத் தரிக்கி லாதாள்"

இராவணனின் காலில் விழுந்து எழுந்த மாயா சனகனைக்கண்ட சீதை, தாய்ப்பசுவை நெருப்பில் வீழக்கண்ட பறவைக்குஞ்சு போல மனம் துடித்தாள்.

[யுத்த - மாயாசனக - 31:4]

473. "தாயை முன்னிய கன்றென நின்றுயிர் தளிர்ப்ப"

தாய்ப்பசுவை நினைத்த கன்றென, இராமனை என்னும் ஆடவர் நிலை அமைந்திருந்தது.

[அயோ - மந்திர - 60:2]

474 "தாயே யனைய கருணையான்"

வாயுதேவன் தாயைப்போன்ற கருணையாளன்.
[சுந்தர - பிணி : 127:1]

475. "தாய்தன்னை அறியாத கன்றில்லை தன்கன்றை
ஆயும் மறியும்"

தாய்ப்பசுவை அறியாத கன்றோ, கன்றினை அறியாத தாய்ப்பசுவோ உலகில் இல்லை. அவ்வாறே இராமனும் உலகை அறிவான் என்று விராதன் புகழ்ந்துரைத்தான். [ஆரணி - விராத - 55:1-2]

476. "தாய் முலை யன்னது"

சரயுயாறு சுரத்தலால் தாயின் மார்பகம் போன்றது. [பால - ஆற்று - 12:3]

477. "தாலஞ் சார்ந்தமா சுணமென கங்கணந் தழுவ"

இராவணன் கையில் அணிந்திருந்த கங்கணம் நாக்குச்சேர்ந்த பாம்பு போன்றது.
[யுத்த - இராவ - தேர் - 9:4]

478. "தால பலத்தினேலும், கொத்தொப்பன"

பனம்பழங்களின் கொத்தை ஒப்பன இராவணனின் பத்துத்தலைகள்.
[ஆரணி - சடாயு உயிர் - 106:2-3]

479, "தாழிப் படுதயி ரொத்தார் மாருதி தனிமத்
தென்பதோர் தகையானுன்"

அரக்கர் தாழியிலுள்ள தயிர் எனவும், அனுமன் தயிரைக் கடையும் மத்தெனவும் தோன்றினர்.
[சுந்தர - அக்க - 30:2]

480. "தாளுயர் தடக்கிரி யிழிந்துதரை சேரும்
கோளரியென"

மலையினின்று இறங்கும் சிங்கம் போல, யானை

யினின்று அரசர் இறங்கினர். [பால - வரை- 17:1 - 2]

481. " திங்களும் மீனும்போன் முத்தினந் திகழ "

சந்திரனும் விண் மீன்களும் போல இராவணன் அணிந்திருந்த முத்துவடம் தோன்றியது.

[யுத்த - இராவ - தேர் - 11:3 - 4]

482 " திசையானை யிரண்டென முட்டினுரரோ"

திசை யானைகள் இரண்டு போர் புரிந்தாற் போல, வாலி சுக்கிரீவர் அமர் புரிந்தனர்.

[கிட்கி - வாலி - 36:4]

483. " திட்டியின் விடத்து நாக மணியன சிந்தி யார்த்தான்"

திட்டிவிடம் என்னும் நாகம் போன்ற அம்புகளை அதிகாயன் இலக்குவன் மீது தொடுத்தான்.

[யுத்த - அதிகா - 192 : 4]

484. " திட்டியின் விடமன்ன கற்பின் செல்வி "

சீதை, கண்ணினுல் நஞ்சைக் கக்கும் நாகம் போன்ற கற்பின் செல்வி ஆவாள்.

[யுத்த - கும்ப - 80:3]

485. " திண்கார் வரைவரு வனவென வந்தார் "

வலிய மேகங்கள் மலையை நோக்கி வருவன போல அரக்கர் அனுமனை நோக்கி வந்தனர்.

[சுந்தர- கிங்க -18:4]

486 " திரிநிழலே யெனலானுன் "

பகைவருடன் போரிடும் இராமன் அவருடனே திரிகின்ற நிழலென்று சொல்லத்தக்கவன்.

[யுத்த - மூலபல - 116:4]

487. " திரிபு ரஞ்செற்ற தேவனு மிவனே "

போர்த்திறத்தால் இலக்குவன் திரிபுரத்தை

எரித்தவன் என்று புகழத்தக்கான் ஆவான்.

[யுத்த - கும்ப - 228:3]

488. "திருவி னுயக னிவனெனத் தேமறை தெரிக்கும்
ஒருவன் மார்பினி னுத்திரி யத்தையு மொத்த"

திருவின் நாயகனின் மார்பில் அணிந்த உத்தரி யத்தைப் போன்று மின்னலோடு கூடிய காளமேகத்தின் அருகில் நாரைகள் வரிசையாகப் பறந்தன.

[கிட்கி - கார்-42:3 - 4]

489. "திரைக்கு மாசுணம் வாசுகி யொத்தது தேவர்
அரக்க ரொத்தனர் மந்திர மொத்தன னனுமன்"

அனுமனைப் பிணித்திருந்த பிரமன படை வாசுகியையும், அரக்கா தேவரையும், அனுமன் மந்திர மலையையும் ஒத்தனர். [சுந்தர - பாச - 61:3 - 4]

490. "திசையாளு மதகரியைச் சிந்தூர மப்பியபோற்
சிவந்த மாதோ"

கிழக்கில் தோன்றும் செஞ்ஞாயிறு மதகரியின் மீது அப்பிய சிந்தூர திலகம் போன்றது.

[பால - மிதிலை - 151:4]

491. "தினையின் மாத்திரைத் துணிபட"

கும்பகர்ணன் எறிந்த சூலத்தினை இராமன் தினைப்பொழுதில் அம்பினுல் துணித்தான்.

[யுத்த - கும்ப - 333:4]

492. "தீட்டிய படிவ மென்ன"

செருக்களத்து அரக்கர் இறந்தனர் என்ற செய்தி கேட்ட இராவணன் தீட்டிய சித்திரம் போன்று திகைத்து நின்றவன். [யுத்த-இராவ-களம் - 12:4]

493. "தீண்டருங் பாவ மாமெனப் பற்றழிந் திற்றவால்"

தெய்வத்தன்மை உடைய திருவடி பட்டவுடன்

விலகும் தீவினைகள் போல இலக்குவனின் திருவடிபட்டவுடன் கிட்கிந்தையில் அடைத்த வாயில்கள் அழிந்தன.
[கிட்கி . கிட்கி - 36:3-4]

494. தீநிகர் தொழிலாடைத் திரைபொரு வதுபாராய்''
செடி, கொடி, மான், மயில் குழுவுடன் தோன்றிய காடு ஓவியன் தீட்டிய வண்ணச் சித்திரம போன்றிருந்தது.
[அயோ - வனம்-18.4]

495. ''தீநிறத்து, அந்திவந் திறுத்தது''
தீபபோன்ற நிறமுடைய அந்திக்காலம் வந்தது.
[யுத்த-இலங்- கேள்வி - 1:4]

496. ''தீபத்தி னெரிந்தெழு செங்கணினர்''
தீபம் போன்று எரிந்து எழுகின்ற சிவந்த கண்ணை உடையவர்.
[யுத்த - படைத்தலைவர்-73:2]

497. ''தீயவரொ டொன்றிய திறத்தரு நல்லோர்
ஆயவரை யங்கிலை யறிந்தனர் துறந்தாங்கு''
குதிரைகள், தீயவரை விட்டு நீங்கும் நல்லோர் போல், தம்மீது படிந்த மணலை உதறி எழுந்து சென்றன.
[பால - வரை- 20:1 - 2]

498. ''தீயிடை யுகுக்கு நெய்யிற் சீற்றத்திற் கூற்றம் செய்ய''
எரியிடைப் பெய்யும் நெய்போல. இராவணனின் சினத்தில் அடங்கிய சோகம் அச்சினத்தை மிகுவிக்கும்.
[ஆரணி - மாரி - 66:3]

499. ''தீயினை நயப்புறுதல் செய்வினை தெரிந்தாய்''
சீதையின் அழகினைக் கண்டு அவளைக் கவர்ந்து கொண்டு வைத்திருப்பது தீயினை அதன் செந்நிறத்தால

கவர்ச்சியுற்று விரும்புதல் போலும் என்று கும்பகர்ணன் இராவணனிடம் கூறினன்.

[யுத்த - இராவ - மந்திர - 48 : 3]

500. '' தீயின் மூழ்கின ரொத்தனர் ''

சீதையை மரவுரிக் கோலத்தில் கண்ட மாதர் நெருப்பில் வீழ்ந்தவர் போன்று துயருற்றனர்.

[அயோ - நகர் - 232:3]

501. '' தீவரு வனத்திடை யிட்டுத் தீர்ந்ததோர்
தாய்வர நோக்கிய கன்றின் தன்மையார் ''

முனிவர்கள், எரிவனத்தை நீங்கிய தாய்ப் பசுவைக் கண்ட கன்றுகள் போல, இராமனைக் கண்டு களித்தார்கள். [ஆரணி - அகத்தி - 5:3 - 4]

502. '' தீவிடத் தரவந்தானே, உறுகெழு சீற்றம் பொங்கிப்
பணம்விரித் துயர்ந்த தொத்தான் ''

விடங்கொண்ட நாகம் படம் விரித்து எழுந்தாற்போலத் துறவி வேடத்தைக் களைந்து இராவணன் சீதை முன் தோன்றினன். [ஆரணி - சடாயு உயிர் - 65 : 3-4]

503. '' தீவீழ் விறகென வெந்து வீவாள் ''

இராவணன் காலடியில் வீழ்ந்த மாயாசனகனைக் கண்டு, சீதை கொடிய துயரம் மிகுந்து தீயினால் விழுங்கப் பட்டு விழும் விறகு போல மனம் சோர்ந்து விழுந்தனள்.

[யுத்த – மாயாசனக - 34 : 4]

504. '' தீவினை யெனவிருள் செறிந்த தெங்குமே ''

இராவணனின் தீவினையென இருள் எங்கும் செறிந்தது. [சுந்தர - ஊர் - 43 : 4]

505. '' துணைபிரிந் தயரு மன்றிற் சேவலிற் றுளங்கு
கின்றான் ''

பேடையைப் பிரிந்து வருந்திய ஆண் அன்றிற்

பறவை போலச் சீதையைப் பிரிந்த இராமன் அல்லலுற்றான்.
[யுத்த - இலங் காண் - 30 : 3]

506. " துணையிழந்த வன்றிற் பெடையென வரற்ற லுற்றாள்"

தசரதனை இழந்த கோசலை, துணையிழந்த அன்றிற் பேடை போன்று வருந்தினாள்.
[அயோ - தைல - 63 : 4]

507. " துப்பிற் செய்தது போன்றது "

பவளத்தால செய்த மலை போன்று, குருதி நீர் தோயப் பெற்ற இலங்கை மதில் தோன்றியது.
[யுத்த - முதற் - 27 : 2]

508. " துப்புறழ் துவர்வாயின் "

சீதை, பவளம் போன்ற செவ்வாயினை உடையவள்.
[அயோ - வனம் - 26 : 1]

509. " துப்பொன்று திரள்சூ தென்பென் சொல்லுவென் தும்பிக் கொம்பை "

இராமன், பவளத்தால் இயன்ற சூதாடு கருவிகளையும் யானைத் தந்தங்களையும் சீதையின் மார்பகங்களுக்கு உவமையாகக் கூறினான்.
[கிட்கி - நாட - 43 : 2]

510. " தும்பி யீட்டம் புரைகிளை சுற்றத்தார் "

குகன் சுற்றத்தார் யானைக் கூட்டம் போன்றவர்.
[அயோ - கங் - 30 : 4]

511. " தும்பியை யரிதொலைத் தென்ன "

யானையைச் சிங்கம் அழிப்பதுபோல், சுக்கிரீவனை வாலி நிலைகுலையச் செய்தான்.
[கிட்கி - வாலி - 51 : 3]

512. " துயில்கெடக் கனவு மாய்ந்தா லொத்தது சூழ்ந்தது மாயை "

இராமனுடைய கணையால் குருதி கொப்பளிக்க

மண்ணில் மகோதரன் சாய்ந்தான். அவ்வேளையில் சூழ்ந்த மாயை, துயில் கெடக் கனவு மாய்ந்தாற் போல ஒழிந்தது.
[யுத்த - மகர - 30 : 4]

513. "துவரித ழலர்வன குமுதம்"

செவ்வாம்பல் மலர்கள் மகளிரின் செவ்விதழ் போல மலர்ந்தன. [பால - நாட்டு - 43 : 2]

514. "துளிக்குரன் மேகம் வள்வார்த் தூரிய துவைப்ப போன்ற"

இடியொலி மத்தளவொலி போல ஒலித்தது.
[கிட்கி - கார் - 32 : 2]

51ı. "துறக்கமுற்ருர் மனமென்ன"

துறக்கம் அடைந்தோர் தூய மனம் போலத் தூய நீரையுடைய சோழநாடு விளங்கியது.
[கிட்கி - நாட - 30 : 1]

516. "துன்றிளங் கொடிமுதற் றூறு நீங்கிய
குன்றெனப் பொலிந்தன குவவுத் தோள்களே"

மகளிர் தழுவா ஆடவர் தோள்கள், புதர்கள் நீங்கிய குன்றுகள் போன்றன.
[அயோ - ஆறு - 38 : 3-4]

5ı7. "துன்னருந் தவத்தி னெய்துந் துறக்கம்போற் ஞேன்றிற் றன்றே",

இராவணன் ஆணையிட, இருதுகள் செயல் நீங்கியதால், உலகம் தவத்தால் எய்தும் துறக்கம் போலத் தோன்றியது. [ஆரணி - மாரி - 103 : 4]

518. "துன்னல ெருவன் பெற்ற புகழெனச் சுட்ட தன்றே"

பகைவரின் புகழ் ஒருவனுக்கு வருத்தம் தருவது போல வெண்ணிலவு இராவணனுக்கு விரகதாப துன்பத்தைத் தந்தது. [ஆரணி - மாரி - 110 : 4]

519. " தூங்குதேன், ஈட்ட மென்னச்சென் றீயின மொய்ப்பன "

மலர்களில் மொய்க்கும் வண்டுகள் போலப் பலாச்சுளையில் ஈயினம் மொய்த்தன. [கிட்கி - ஆறு - 45 : 3-4]

520 " தூண்டலில் விளக்கனள் "

தூண்டா விளக்குப் போன்றவள் சீதை [சுந்தர - உருக் - 108 : 4]

521. " தூபத்தி னுயிர்ப்பர் "

தூபம்போற் புகை வெளிப்படும் பெருமூச்சை உடையவர் ஆயினர் [யுத்த - படைத்தலைவர் - 73 : 4]

522. " தெண்டிரை யெழினி காட்ட "

தெளிந்த நீரலைகள் திரைச்சீலை போல் தோன்றின. [பால - நாட்டு - 4 : 3]

523. " தெய்வ மேனி படைத்த சேயொளி போன்ம ழுங்கின தீபமே "

தயரதனின் ஒளி குன்றிய மேனிபோல விளக்குகளும் ஒளி குறைந்தன. [அயோ - கைகேயி - 59 : 4]

524. " தென்னுண் டேனிற் றிஞ்சுவை "

வண்டு மாந்தும் தேன்சுவை போன்றவள் சீதை. [பால - மிதிலை - 23 : 2]

525. " தேசுண்ட திங்கள் "

சீதை, ஒளி குன்றிய திங்கள் போன்று அழகிழந்து தோன்றினள். [சுந்தர - காட்சி - 68 : 2]

526. " தேடிய தவமே யன்ன "

முற்பிறவியில் சீதை தேடி வைத்த தவம்போல்

திரிசடை இருந்தாள். [யுத்த - சீதை களம் - 22 : 4]

527 "தேம்பிழி மகர யாழின் வண்டுகள் இனிது பாட"

மகர யாழின் இசை தேன் போன்றிருந்தது.
[பால - நாட்டு - 4 : 3]

528. "தேரி னன்னெடுந் திசைசெலச் செருக்கழிந் தொடுங்கும்
கூரயிற்றருங் கண்ணெனக் குவிந்தன குவளை"

தேரேறிச் சென்ற தலைவரைப் பிரிந்த மகளிரின் பொலிவிழந்த வேற்கண்களைப் போல் குவளை மலர்கள் குவிந்தன. [கிட்கி - கார் - 36 : 3-4]

529. "தேரைக் கொண்டபே ரல்குலாள் திருமுகங் காணான்"

தேரைப் போன்ற அல்குலையுடைய சீதா தேவியின் திருமுகம் காணாமல் இராமன் வருந்தினன்.
[கிட்கி - கார் - 49 : 1]

530. "தேரை வென்றுயர் தெங்கு"

தேர் போன்று உயர்ந்து தென்னை மரம் தோன்றியது. [கிட்கி - ஆறு - 43 : 1]

531. "தேவரு மொக்கும்"

மதில் விண்ணுலகை அணைவதால் தேவரை ஒக்கும். [பால - நகர - 9 : 2]

532. "தேவரைத் தேய அரைத்த அம்மியாம்"

அரக்கரின் தோள் தேவரை அம்மி போலத் தேய அரைத்தது. [ஆரணி - கரன் - 74 : 2-3]

53 . "தேறிய மனத்தான் செய்த நல்வினைப் பயன்க ளெல்லாம்
மாறிய பிறப்பிற் றேடி வருவபோல்"

முற்பிறப்பில் செய்த நல்வினைப் பயன்கள் தேடி

வருவன போல் விசுவாமித்திரன் கூறியவளவில் தெய்வப் படைக்கலன்கள் வந்தன. [பால-வேள்வி - 2 : 3-4]

534. "தைய லார்நெடு விழியென சரங்கள்"

இராமபாணம் மகளிர் விழியென்று சொல்லு மாப் போலச் சென்று துன்புறுத்தியது.
[ஆரணி - கரன் - 82 : 4]

535. "தொடுத்தகடன் மீதுநிமிர காலத்து
உரத்தொடு கடுத்தகத ழோதையத ஞேதை"

ஊழிக்காலத்துக் கடலொலி போல மாதலி கொணர்ந்த தேரொலி எங்கும் கேட்டது
[யுத்த - இராம-தேர் - 11 : 3-4]

536 "தொண்டையங் கனிவாய்ச் சீதை"

சொவ்வைக் கனி போன்ற செவ்வாயினை உடையவள் சிதை. [சுந்தர - பொழில் - 40 : 1]

537. "தொண்டை வாய்"

கொவ்வைக் கனி போன்று கைகேயியின் செவ் விதழ் இருந்தது. [அயோ - மந்தரை - 41 : 1]

538. "தோன்றகை ளரங்கின் மாடே, விளக்கின மொத்த"

செங்காந்தள் மலர்கள் அரங்கின் விளக்கினைப் போன்றன. [கிட்கி - கார் - 32 : 3-4]

539. "நங்கையர் நடையி லன்னம் நாணுறு செலவி
ஞவாய்"

நங்கை அன்னம் நடந்தாற் போன்று மரக் கலம் சென்றது. [அயோ - குக - 46 : ι]

540. "நஞ்ச நக்கினுள் போல நடுங்குவாள்"

நஞ்சை அருந்தியவள் போலக் காம நோயினுல்

சூர்ப்பணகை நடுங்கினுள். [ஆரணி சூர்ப்ப - 86 : 4]

541. ''நஞ்ச நுங்கிய, கண்ணுதல் கண்டத்தின் காட்சி''

சிவனின் நஞ்சுண்ட கண்டம் போல வானம் கருத்தது. [கிட்கி - கார் - 3 : 2]

542. ''நஞ்ச மன்னவரை''

கொடியவர் நஞ்சனையர்.

[கிட்கி - கிட்கி - 5 : 1]

543 ''நஞ்சமென வஞ்சமகள்''

நஞ்சு உருவெடுத்தாற் போன்ற வஞ்சகி சூர்ப்பணகை. [ஆரணி - சூர்ப்ப - 31 : 4]

544. ''நஞ்சனையான்''

நஞ்சைப் போன்றவன் இராவணன்.

[சுந்தர - உருக். - 17 : 3]

545. ''நஞ்சினை நுகரென நடுங்கு வாரினும்''

'உலகு நீ தாங்குவாய்' என்னும் வசிட்டரின் மொழி 'நஞ்சினை நுகர்' எனக் கூறக் கேட்டவரின் நடுக்கத்தைக் காட்டிலும் துன்பம் தரப் பரதன் துயருற்று வீழ்ந்தான்.

[அயோ - ஆறு - 12 : 3]

546. ''நஞ்சுதின் றனர்கடாம்''

இலங்கையில் சீதையைக் கொண்டு வைத்திருக்கும் அரக்கர்கள் நஞ்சை உட்கொண்டவர்கள் போன்று அழிவர். [யுத்த - இராவ-மந்தர - 92 : 3]

547. ''நஞ்சுதோ யமுத முண்பான்''

நஞ்சு தோய்ந்த அமுதத்தை விரும்பி உண்பது போல இராவணன் சீதையை விரும்பியதாகக் கூறினுன்.

[யுத்த - மாயாசனக - 10 : 2]

548 ''நஞ்சு வெற்புருவு பெற்றிடை நடந்த தெனமா''

நஞ்சு மலையுரு வெடுத்து நடந்தாற் போல விராதன் வந்தான் [ஆரணி - விராத - 7 : 2]

549. ''நஞ்சுற் றுழிமீ னிலடுக் குறுவான்''

நஞ்சு தோய்ந்த நீரில் அகப்பட்ட மீனென மாரீசன் உள்ளம் உழன்றது. [ஆரணி - மாரீ - 211 : 3]

550. ''நஞ்செனக் கனன்று நக்கான்''

திலோத்தமையுடன் காதல் கொண்டு வாழ்ந்த விசுவாமித்திரன் நஞ்சைப் போல வெறுப்புக் கொண்டு சிரித்தான். [பால - மிதிலை - 106 : 4]

551. ''நஞ்சென நிறுத்து''

நஞ்சு போன்ற பாணங்களை இந்திரசித்து சுக்கிரீவன் மீது எறிந்தான். [யுத்த - நாக - 71 : 3]

552. ''நந்தா விளக்கி னடுங்குகின்ற நங்கைமார்''

காற்று வீச நடுங்குறும் நந்தா விளக்குப் போல நங்கையர் நடுங்கினர். [அயோ - நகர் - 114 : 2]

553. ''நரகையு நகும்வ யிற்றினன்''

நரகையும் வெல்லும் ஆற்றலுடையது கவந்தனின் வயிறு. [ஆரணி - கவந்த - 17 :4]

554. ''நரம்பையு மமிழ்த நாறு நறவையு நன்னீர்ப் பண்ணைக்
கரும்பையுங் கடந்த சொல்லாள்''

யாழையும், அமிழ்தையும், கரும்பையும் வென்ற மொழியாள் சீதை. [கிட்கி - நாட - 36 : 3-4]

555 ''நல்லவாறு சொல்லும்வேத நான்குமன்ன வாயிலே''

நன்நெறியினை நல்கும் நான்மறையென்ன

நான்கு கோபுர வாயில்கள் அமைந்தன.

[பால - நகர - 22 : 4]

556. "நவ்வி நோக்கிய ரிதழ்நிகர் குமுதத்தி னருந்தேன்
வவ்வி மாந்தரிற் களிமயக் குறுவன மகரம்"

மானின் விழிபோன்ற மாதரின் அதரபானத்தை ஒத்த செவ்வாம்பல் மதுவையுண்டு, கட்குடித்தவரைப் போல முதலைகள் மயங்கின. [கிட்கி - பம்பை - 16 : 1]

557. "நவ்வி வீழ்ந்தென நாடக மயிறுயின் றென்ன"

மான் வீழ்ந்தது போலக் கைகேயி பூமியில் வீழ்ந்தாள். [அயோ - மந்தரை - 88 : 1]

558. "நள்ளிரு ளடைந்த காளி போன்றன னிராவணன்"

நடு இரவில் வந்தடைந்த காளிபோன்று போர்க்களத்தில் இராவணன் தோன்றினன்.

[யுத்த - வேலே - 17 : 1]

559. "நன்னெறி விலக்கும் பொறியென வெறியும்"

நன்னெறியில் செல்லவொட்டாமல் தடுக்கும் ஐம்பொறிகள் போல அகழியில் முதலைகள் உள்ளன.

[பால - நகர - 14 : 4]

560. "நாகமது நாகமுறு நாகமென நின்றான்"

அகத்தியன் விந்தியமலை மண்ணுற யானைபோல நின்றான். [ஆரணி - அகத்தி - 39 : 4]

561. "நாக வுயிர்ப்பினன்"

தூதர் மொழி கேட்ட இராவணன் நாகமெனப் பெருமூச்சு விட்டான். [யுத்த - மகர - 1 : 3]

562. "நாகத்தின் வன்றெளை வாளெயிற்று
இழிந்த கார்விட மேறுவ தென்னவே"

நாகத்தின் நஞ்சு ஏறுவதுபோலச் சூர்ப்பணை கையின் காமக்கனல் கனன்று எழுந்தது.
[ஆரணி - சூர்ப்ப - 72 : 3 - 4]

563. "நாயினை நோக்குவேனோ"

இராமனுக்குப் பணிவிடை செய்யும் சீதை, நாய் போன்ற இராவணனை நோக்காத மனவுறுதியை வெளிப்படுத்தினாள். [யுத்த - மாயாசனக - 67 : 4]

564. "நாயுண்ட எச்சிலே"

இராமன் உண்டு எஞ்சிய உணவைத்தவிரப் பிற உணவு சீதைக்கு நாயுண்ட எச்சிலைப் போன்றதாகும்.
[கிட்கி - கிட்கி - 114 : 4]

565. "நாய்க்குகன்"

'நாய்க்குகன் என்று உலகோர் தன்னை ஏசாரோ' என்றனன் குகன். [அயோ - குக - 14 : 4]

566. "நாய்தரக் கொள்ளுஞ் சீய நல்லர சென்று நக்கான்"

இராவணன் தருவதாகக் கூறும் அரசைப் பெற்றுக்கொள்வது நாய்தரச் சிங்கம் அரசைப் பெற்றுக் கொள்வது போலாகும் என்று அங்கதன் ஏளனமாக மொழிந்தான். [யுத்த - அங்க - 29 : 4]

567. "நாற்கடற் படுமணி நளினம் பூத்ததோர்
பாற்கடற் படுதிரைப் பவள வல்லி"

தாமரை மலரைப் பெற்ற பாற்கடலில் படர்ந்த பவளக்கொடி போன்று பேரணைமீது கைகேயி துயின்றாள்.
[அயோ - மந்தரை - 42 : 1 - 2]

568. '' நிதிவழியே நேயநீட்டும்
மன்றலங் கோதை மாதர் மனமெனப் போயிற்றம்மா''

பொருட்பெண்டிர் மனம்போல மாயமான் ஒரு நிலை நில்லாது ஓடியது. [ஆரணி - மாரீ - 243 : 3 - 4]

569. ''நிருத ரெனும் துய்யுடைக் கனலியன்ன தோளினன் ''

அங்கதன், அரக்கரென்னும் பஞ்சுப் பொதியை எரிக்கும் நெருப்புப் போன்ற தோளை உடையவன்.
[கிட்கி - வாலி - 151 : 2]

570. '' நிலத்திடைக் கிடந்த தூமதியை ''

மண்ணில் புரண்ட சீதை, நிலத்தில் கிடந்த தூய திங்கள் போன்றுள். [சுந்தர - காட்சி - 10 : 2]

571. '' நிலந்தாவிய காலி னென்ன ''

வாலியின் ஆரவாரவொலி திருமாலின் நிலமளந்த அடிகள் போல உலகெங்கும் சென்று பரவியது.
[கிட்கி - வாலி - 30 : 4]

572. '' நிலவினு முறுவன் முற்றினுள் ''

சீதை, நிலவைக் காட்டிலும் ஒளிமிக்க பற்களை உடையவள். [சுந்தர - உருக் - 98 . 4]

573. '' நிற்கு நெடுநீத்த நீரின் முளைத்தெழுந்த
மொக்குளே போல முளைத்தெழுந்த வண்டங்கள் ''

நீர்க்குமிழி போன்று அண்டங்கள் தோன்றி, நின்று மறைந்தன. [ஆரணி - கவந்த - 48 : 1-2]

574. '' நினைக்குவாா பிறப்பென நீங்கும் ''

இராவணன் எறிந்த மாயப்படை இராமன் தொடுத்த அம்பினுல், அவனை நினைப்பவரின் பிறப்பு அகல்வது போல நீங்குமென மாதலி கூறினுன்.

[யுத்த - இராவ - வதை - 122 : 4]

575 " நின்ற குன்றொன்று நீணெடுங் காலொடுஞ்
சென்ற குன்றைத் தழீஇயன்ன செய்கையான் "

நின்ற குன்று, தன்னை நோக்கி வந்த குன்றைத் தழுவிக்கொண்டதுபோல இராவணன், தன்னை நோக்கி வந்து வணங்கிய தம்பி கும்பகர்ணனைத் தழுவினான்.

[யுத்த - கும்ப - 72 : 3-4]

576 " நின்றேனு நின்றே னெடுமரம்போ னின்றேனே "

சடாயுவைக் கொன்ற இராவணனை அழிக்காமல் படைக்கலம் பூண்டு நெடுமரம் போன்று பயனின்றி நின்றதாக இராமன் புலம்பி வருந்தினான்.

[ஆரணி - சடாயு உயிர் - 185 : 4]

577. நீடு நெஞ்சுறு நேயத்தா னெடிதுறப் பிரிந்து
வாடுகின்றன மருளுறு காதலின் மயங்கி "

பொய்கையில் நீரற்றபோது பிரிந்த அன்னப் பறவைகள், நீர் வந்த காலையில் ஆசையுடன் வந்து துளைந்து விளையாடியதை, நீண்ட காலம் பிரிந்திருந்த தலைவன் வினை முடித்துத் திரும்பி தலைவியுடன் மருவியதற்கு உவமித்துள்ளார்.

[கிட்கி - கார் - 40 : 1-2]

578. நீத்தநீ ருடைகல நீர தாகுமால் "

பரதன் ஆட்சிப் பொறுப்பை ஏற்கா விட்டால் நாடு கடலில் உடையும் மரக்கலம் போலாகும்.

[அயோ - ஆறு - 10 : 4]

579. " நீரரும் பரவையி னெடிய சேனையான் "

கடலைப்போன்ற பெரும் படையுடன் அனுமன் வருவான்.

[கிட்கி - கிட்கி - 134 : 4]

580 " நீருளதனையு முள்ள மீனென "

நீர் இருக்குமளவும் உயிருடன் வாழும் மீன்

போல, அரக்கர் இறுதிவரை பொருது இராவணனுடனே இறப்பர். [யுத்த - நிகும்ப - 166 : 1]

581. '' நீருள வெனினுமுள மீனு நீலமும் ''

நீருள்ளவிடத்து மீனும் நீலமும் இருப்பன போல, இராமன் உள்ளவிடத்து இலக்குவனும் சீதையும் இருப்பர். [அயோ - நகர் - 157 : 1]

582. '' நீரைக்கொடு நீரெதிர் நிற்சொணுமே ''

நீரைக்கொண்டு நீரை எதிர்க்க முடியுமோ? அதிகாயனை அழிக்க இலக்குவன் போனறோரால் முடியுமே யன்றி எளியோரால் முடியாது என இராமன் வீடணனிடம் கூறினன். [யுத்த - அதி - 83 : 1]

583. '' நீர்மேற் பாசியி னொதுங்க ''

நராந்தகன் வர, உடைந்த வானரப்படை, நீர் மேற் பாசி ஒதுங்குவது போல ஒதுங்கி வழிவிட்டது. [யுத்த - அதிகா - 211 : 4]

584. '' நீர்மொக்குளின் விளியும் யாக்கை ''

நீர்க்குமிழி போன்றது நிலையற்ற உடப்பு. [அயோ - திருவடி - 79 : 1]

585. '' நீர்க்கோல வாழ்வு ''

நீால் எழுதிய கோலம் போன்ற அழியும் வாழ்வு. [யுத்த - குபப - 155 : 1]

586. '' நீர்மேற் பாசிபோன் மிடைந்து துன்ன ''

சுற்றிய படை நீர்மேற் பாசிபோல் நெருங்கிவர மாருதி வந்தான். [யுத்த - பிரமா - 143 : 4]

587. '' நீலக்கிரி மேனிமிர் பொற்கிரி நேர்வான ''

நிகும்பனை எதிர்த்த அங்கதன் நீலமலைமேல்

பொன்மலை நிமிர்ந்து சென்றாற் போலத் தோன்றினான்
[யுத்த - அதிகா - 249 : 4]

588. '' நீலமலை முன்கயிலை நின்றதென நின்றான் ''

நீலமலை முன் கயிலை மலை நின்றது போலச் சுக்கிரீவன் இராவணன் முன் எதிர்த்து நின்றான்.
[யுத்த - மகுட - 7 : 3]

589 '' நீலமா னேமியிற் றலையை நீக்கிய
காலநே மியிற்பெருங் கவந்தக் காட்சியான் ''

நீலநிறமுடைய திருமாலின் சக்கரப் படையினால் தலையிழந்த காலநேமி என்னும் அசுரனைப் போலக் கவந்தன் தோன்றினான். [ஆரணி - கவந்த - 19 : 3-4]

590. '' நீள்வரை மீதில்
தத்தி வீழருவி யின்றிரள் சால ''

மலைமீது பாய்ந்து இழியும் அருவிநீர் போல. இராவணன் மார்பில் உத்தரீயம் விளங்கியது.
[யுத்த - இராவ - வானர - 5 : 2-3]

591. '' நுங்கிற் றுளையுறு மூக்கினை ''

சூர்ப்பணகையின் அறுபட்ட மூக்கு, துளைபட்ட நுங்கு போன்றது. [ஆரணி - கரன் - 8 : 2]

592. '' நுடங்கு மாளிகைத் துகிற்கொடி நிகர்ப்பன ''

அயோத்தி நகரின் கொடிகள் போல, மூங்கிலில் அசைந்தாடிய பாம்பின் தோல்கள் தோன்றின.
[அயோ - சித்திர - 4 : 4]

593. '' நெஞ்சுபறை போதுமது ''

இராவணனின் செயல் கண்டு மாரீசன் மனம் பறை கொட்டுவது போலத் துடித்தது.
[ஆரணி - மாரீ - 193 : 2]

594. "நெடிது நாளுண்ட, எச்சிலை நுகருவ தின்ப மாவதோ"

நீண்ட காலம் ஆண்ட ஆட்சியினை மேலும் விரும்புவது நெடிது நாளுண்ட எச்சிலை நுகர்வதற்கு ஒக்கும்.
[அயோ - மந்திர - 28 : 3-4]

595. "நெடுவரைக் கதலிக் கானம் போல்"

அயோத்தி நகரக் கொடிகள் மலையில் வளர்ந் துள்ள வாழைமரக் காடு போன்றன.
[பால - நகர - 38 : 1]

596. "நெய்குழ லுறுமிழை யெனநிலை திரிவார்"

நெய்கின்ற குழலுடன் விடாது பொருந்திய நூலிழை போல இராமனும் இலக்குவனும் இணைபிரியாமல் சென்றனர். [பால - திருவவதார - 129 : 4]

597. "நெய்யுறு நெருப்பின் வீங்கி நிமிர்தர"

நெய் சொரியப்பட்ட நெருப்புப்போல இராம னும் இலக்குவனும் பெருமூச்சு விட்டனர்.
[ஆரணி - அயோமுகி - 3 : 3]

598. "நெய்த்தலைப் பால்கலந் தனைய நேயத்தான்"

இனிய நட்பு நிலையுடைய சுக்கிரீவன் நெய் யோடு பால் சேர்ந்தாற் போல விளங்கினான்.
[கிட்கி - கலன் - 3 : 4]

599. "நெய்யா ரழலுற்ற துற்றூரங் கீணகரார்"

நெய்யுறப் பெருகும் நெருப்புப் போல மக்கள் துயரக்கனல் மூண்டெழுந்தது. [அயோ - நகர் - 108 : 4]

600. "நெய்யுறு விளக்கனாய்"

சீதை நெய் பெய்த விளக்குப் போன்றவள்.
[சுந்தர - உருக் - 25 : 4]

601. "நெய்யெரி யுற்றென நெஞ்ச ழிந்து சோரும்"

கைகேயினுடைய கடுமொழி கேட்ட தசரதன், நெய் எரியுற்றாற் போன்று துன்பம் மிக மனமுடைந்தான்.

[அயோ - கைகே - 23 : 4]

602. "நெருப்பிடை யுயிர்ப்பான்"

இராமபிரான் விரகதாபத்தால் நெருப்புப் போலப் பெருமூச்சு விட்டான்.

[கிட்கி - கார் - 84 : 3]

603. "நெருப்பி னீர்மையான்"

நிசாசரன் என்னும் அரக்கன் நெருப்பின் உருவம் போன்று தோன்றினன்.

[யுத்த - இராவ - மந்திர - 42 : 4]

604. "நெருப்பை மீளத், தின்றுதின் றுமிழ்கின்றாரில்"

அயோத்தியில் உள்ளவரை அழிப்பதற்குப் படை அனுப்பியிருப்பதாக வெகுண்டு கூறிய இராவணன் மொழி கேட்ட சிதை நெருப்பை மீளத் தின்று வெளிப் படுத்துபவர் போல வெப்பப் பெருமூச்சு விட்டாள்.

[யுத்த - மாயாசனக - 29 : 3 - 4]

605. "நெருப்பை யுற்றதொ ரிரும்பு கூடமுற நீறுபட்டது நிகர்த்ததால்"

உலைக்களத்தில் சம்மட்டியால் தாக்கப் பட்ட காய்ச்சிய இரும்பு, பொடியாய்ச் சிதறுவது போல் அனுமன் எறிந்த மலை இந்திரசித்தின் மார்பில்பட்டுப் பொடியானது.

[யுத்த - நாக - 80 : 4]

606. "நெல்வா லுமரு தநிறம்"

நெல்லின் வாலினளவும் மாறு நிறமுடைய கூரியவாள்.

[ஆரணி - சரபங்கன் - 13 : 2]

607 "நெற்சினை யென்னும் செப்பம்"

சூல்கொண்ட நெற்பயிர் எனச் சீதையின் கணைக்கால்கள் விளங்கின எனலாம்.

[கிட்கி - நாட - 35 : 3]

608. பகல வன்சுடர் பாய்பனி மால்வரை
தகும லர்ந்து"

சூரியவொளி படர்ந்த இமயமலை போலச் சுக்கிரீவன் விளங்கினான். [கிட்கி - கிட்கி - 22 : 3 - 4]

609. "பகலிடை மலர்ந்ததோர் பழனம் போன்றதே"

அரண்மனையில் தேவியர் வாய்திறந்து அரற்றிய பொழுது, அவ்விடம் பகலில் மலர்ந்துள்ள ஆம்பல் நிறைந்த கழனி போன்றது. [அயோ - நகர் - 183 : 4]

610. "பஞ்சு பட்டது படப்படி யின்மேல் முடுகியே"

விராதன் நடந்து வந்த பொழுது மலைகள் காற்றின் விசையில் பஞ்செனப் பறந்தன.

[ஆரணி - விராத - 7 : 4]

611. "பஞ்சொக்கு மடிகள் பவளத்தின் விரல்கள்"

சீதையின் திருவடிகள் செம்பஞ்சினையும், விரல்கள் பவளத்தையும் ஒத்தன. [ஆரணி - மாரீ - 70 : 2]

612 "பணைகளைத் தழுவிய பவளவல்லி"

ஆடவரைத் தழுவிய மகளிர், மரக்கிளைகளைத் தழுவிய பவளக்கொடியினை ஒத்தனர்.

[ஆரணி - மாரீ - 121 : 2]

613. "பதங்கொள் பாகனு மந்திரி யொத்தனன்"

மதங்கொண்ட களிறைத் தன்வசப்படுத்திய பாகன், நெறிகடந்து செல்லும் அரசனைத் தன்வழிக்குக்

கோணரும் மந்திரி போல விளங்கினன்

[பால - வரை - 4 : 2]

614. ''பந்த ஞாட்புறு பாசறைப் பொருள்வயிற் பருவம்
தந்த கேள்வரை யுயிருறத் தழுவினர் பிரிந்த
கந்த வோதியர் சிந்தையிற் கொதிப்பதக் கழலோர்
வந்த போதவர் மனமெனக் குளிர்ந்தநவ் வனமே''

பகை, பொருள் காரணமாகப் பிரிந்த தலைவரை விட்டுத் தனித்திருக்கும் மடந்தையரின் உள்ளம் போல வனம் கொதித்தது. அன்னவர் திரும்பிய காலையில் மகளிரின் மனம் போல அவ்வனம் குளிர்ந்தது. [அயோ - வனம் - 46]

615. ''பரவைமேல், ஆறுபாய் கின்றதோ ரமலைபோ லானதே''

தசரதன் சேனை அருகில் சென்ற சனகன் படை கடலின்மீது ஆறு பாய்வதொரு தன்மையுடையது.

[பால - எதிர் - 15 : 3-4]

616. ''பருந்தொடு நிழல்சென் றென்ன''

பருந்து பறக்கும் பொழுது அதனுடன் செல்லும் நிழலைப் போலப் பாடலையொட்டி அதனிசையும் பொருந்தி அமைந்தது. [பால - நாட்டு - 15 : 2]

617. ''பருவ மேகம் படிந்தது போற்படிந்து''

இராமன் வசிட்ட முனிவனை வணங்கியது பருவ மேகம் பூமியில் படிந்தாற் போன்றதாகும்.

[பால - உலா - 49 : 3]

618 ''பல்பெருஞ் சமயஞ் சொல்லும் பொருளும்போற்
பரந்ததன்றே''

பலசமயப் பேரறிஞர் பரம்பொருளைப் பற்றிச் சொல்லும் பொருள் பலவாறுக இருப்பது போல, ஒன்றாய் இருந்த சரயு வெள்ளம் ஏரி, தடாகம் முதலிய இடங்களில்

படிந்து பல பெயர்களைப் பெற்றது.

[பால - ஆற்ற - 19 : 4]

619. "பல்லிய நெறியிற் பார்க்கும் பரம்பொரு ளென்ன"

பல்வகைச் சமயங்களால் காணும் கடவுள் வடிவம், உண்டென்றும் இல்லையென்றும் சொல்லுமாறு போலச், சீதையின் இடையும் உண்டோ இல்லையோ என்று ஐயுறும் அளவிற்கு அமைந்திருந்தது.

[பால - கோல - 12 : 3]

620. "பல்லொக்கும் முத்து பவளத்தை இதழ்"

பல் முத்தையும் இதழ் பவளத்தையும் ஒக்கும் எனலாம். [ஆரணி - மாரீ - 74 : 2]

621. "பழந்தன மிழந்தன படைத்தவரை யொத்தாள்"

இழந்த பழைய செல்வங்களை மீண்டும் பெற்றவரைப் போன்று மோதிரத்தைக் கண்ட சீதை மகிழ்ச்சியுற்றாள். [சுந்தர – உருக் - 65 : 2]

622. "பள்ளம் போய்ப்புகும் புனலெனப் படியிடைப் படிந்து"

பள்ளத்தில் பாயும் வெள்ள நீரென்னுமாறு திரிகூடமலை பூமியில் தாழ்ந்து படியுமாறு சுக்கிரீவன் சென்றான். [யுத்த - மகுட - 5 : 1]

623. "பனையி னீள்கரம் பற்றிய கையினன்"

பனைமரம் போன்று இராமனின் கைகள் நெடிதாய்த் தோன்றின. [அயோ - நகர் - 230 : 4]

624. "பாணரிற் றூங்கிசை முரன்றன தும்பி"

பாடும் பாணர் போன்று வண்டுகள் ஒலித்தன.

[அயோ - வனம் - 43 : 4]

625. "பாம்பறியும் பாம்பின்கா லெனமொழியும்"

அரக்கரின் சூழ்ச்சியினை அரக்கி சூர்ப்பணகை

அறிந்தது பாம்பின் காலைப் பாம்பே அறியும் என்னும் பழமொழி போன்றது. [ஆரணி - சூர்ப்ப - 139 : 4]

626. "பாம்பு நான்றெனப் பாய்பசுந் தேறலே"

பாம்பு தொங்குவது போலத் தேனடையி லிருந்து தேன் ஒழுகியது. [பால - நாட்டு - 35 : 4]

627. "பாயுங் கனலே போல"

எரியும் கனல்போல் இன்னுயிர் உண்பவள் போலக் கைகேயி தோன்றினாள்.

[அயோ - கைகேயி - 43 : 4]

628 'பார்ப்பைப் பார்க்கும் பறவையிற் பார்க்கின்றான்"

சீதை, இராமன், இலக்குவன் ஆகியோரைக் கூட்டிலுள்ள குஞ்சுகளைப் பாதுகாக்கும் தாய்ப்பறவை போலச் சடாயு காத்து வந்தான்.

[ஆரணி - சடாயுகாண் - 48 : 4]

629. "பார்மிசை வணங்கிச் சீயம் விண்மிசை படர்வதென்ன"

சிங்கமொன்று விண்ணில் பறந்து சென்றாற் போல, அங்கதன் விண்ணில் விரைந்தான்.

[யுத்த - அங்க - 13 : 1]

630. "பாலின் பஞ்செனத், தீந்ததவ் வெரியவள் கற்பின் றீயினால்"

கற்பின் கனலியாகிய சீதை, நெருப்பில் குதித்ததும், கற்பின் கனலால் அந்தத்தீ பஞ்சுபோல் எரிந்தது.

[யுத்த - மீட்சி - 85 : 3 - 4]

631. "பாலுடை மொழியாளும் பகலவ னனையானும்"

சீதை பாலினும் இனிய மொழியாள். இராமன் பகலவனை ஒத்தவன் [அயோ - கங்கை - 66 : 1]

632. "பாலுறு பிரையெனக் கலந்து"

பாலினைப் பொருந்திய பிரை போல, இலக்குவன் அரக்கர் படையினை அழித்தான்.

[யுத்த - நிகும்பலை - 52 : 3]

633 "பாலுறு பிரையெனப் பரந்த தெங்குமே"

பாலினைப் பொருந்திய பிரைபோலக் கண்வழியே புகுந்த காமநோய் சீதையின் உடல் முழுவதும் பரவியது.

[பால - மிதிலை - 41 : 4]

634 "பாற்கட லன்னதொர் பாய லணைந்தாள்"

பாற்கடலில் உள்ள ஆதிசேடனைப் போன்று திருப்பள்ளி அமைந்தது. [பால - கடிமண - 99 : 4]

635. "பாற்கட லுற்றொரு, பூசை முற்றவு நக்குபு புக்கென"

இராமகாதையைத் தான் பாடமுனைவது பாற்கடலைப் பூனையொன்று நக்கிப் பருகப் புகுந்தது போலாகும் என்று கவிஞர் கூறுவார். [தற்சிறப்பு - 4 : 1 - 2]

636. "பானுரையி னுடையணை யாக"

பாலின் நுரைபோன்று வெண்ணிற ஆடை தோன்றியது. [அயோ - தைல - 10 : 3]

637. "பிச்சையு மிடுதுமென் றுணர்வு பேணலா
வச்சையர் நெடுமனை வாயி லானவே"

இரப்பவர்க்கு ஈயாத உலோபியரின் அடைத்த வாயில் போலப் பகற்பொழுது வந்த பின்னரும் இலங்கை மக்களின் கண்கள் மூடிக்கிடந்தன.

[ஆரணி - மாரீ - 125 : 3 - 4]

638. "பிரிவரு மொருபெருங் கோலென"

எங்கும் செல்லவல்ல அரசனின் செங்கோல் போல, அனுமன் செருக்களத்தில் தடையின்றித் திரிந்தான்.

[சுந்தர - சம்பு - 35 : 1]

639. "பிரையுறு பாலென மிலெயில்"

பிரையிடப்பட்ட பால்போலச், சூர்ப்பணகை யின அவலநிலே கண்ட இலங்கை மக்கள் உரை தடுமாறி ஓடினர். [ஆரணி - மாரீ - 35 : 3]

640. "பிள்ளைச்சொற் கிளிய ளைப் பிரிவுற"

மழலைச் சொற்களைச் சொல்லும் கிளிப்பிள்ளை போன்றவள் சீதை. [ஆரணி - சடாயு உயிர் - 199 : 1]

641. "பிறப்பினெ டிறப்பெனப் பெயருஞ் சிந்தையாள்"

பிறப்பும் இறப்பும் போலக் கணவன் வருவானென்று மகிழ்ச்சியும், வினைமுடிந்தாலன்றி வாரானென்று வருத்தமும் தலைவி அடைந்தாள்.

[பால - உண்டா - 52 : 2]

642 "பிறர்முன் சொல்லா, உரையுண்ட நல்லோ ரென்ன"

கல்லாத பிறர்முன் ஒன்றும் உரையாடாத நல்லோர் போல், இலக்குவன் கணைபட்டு வீழ்ந்து கிடக்கும் அரக்கர் வாய் திறவாமல் வருந்தினர்.

[யுத்த - நாக - 168 : 3-4]

643 "பிறவி வெந்துயர்ப், பெருஞ்சிறை விடுபெற் றனைய பெற்றியார்"

தவத்தினல் சிறப்படைந்த முனிவர்கள், பிறவிப்பிணி நீங்கி வீடு பெற்றாரனையர் ஆனார்.

[ஆரணி - அகத் - 7 : 3-4]

644 "பிறைமு கத்தலைப் பெட்பி னிரும்பு"

பிறையினைப் போன்று தோன்றிய அரிவாள்.

[பால - நாட்டு - 37 : 1]

645. "பிறையெனு நுதலவள்"

சீதை, பிறைச் சந்திரனைப் போன்ற நெற்றி

யினை உடையவள். [பால - மிதிலை - 40 : 1]

646 "புணையிலா தவற்கு வேலை போக்கரி தன்ன தேபோல்"

கடலைக் கடக்கப் புணைபோலப் பகையினை வெல்லத் துணை வேண்டும் என்றான் கவந்தன்.

[ஆரணி - கவந்த - 54 : 4]

647. "புண்டரி கத்தடங் காடு பூத்தொரு
கொண்டல்வந் திழிந்தன"

செந்தாமரைத் தொகுதியுடன் காளமேகம் இறங்கினாற் போலச் சிவந்த கண், கை, கால், வாய், உந்தி உடைய கரிய திருமேனியான் இராமன் விளங்கினான்.

[ஆரணி - சடாயு உயிர் - 149 : 3-4]

648. "புண்டரீ கக்க ணம்மான்"

செந்தாமரை மலர் போன்ற கண்களை உடைய திருமால். [யுத்த - இரணி - 121 : 4]

649. "புரந்தர னுருவெனப் பொலிந்த தெங்குமே"

இந்திரனின் உருவத்தை விண்மீன்கள் நிகர்த்தன. [அயோ - தைல - 6 : 4]

650. "புல் பசுநிறக் கம்பளம் பரப்பி"

பச்சை நிறக் கம்பளம் போன்ற புற்பரப்பு.

[அயோ - வனம் - 43 : 1]

651. "புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற் றன்றே"

அறிவற்றோர்க்கு அறிவுடையோர் கூறிய நற்சொல் எவ்வாறு தங்காமல் செல்லுமோ அவ்வாறே இராமன் எறிந்த கணை தாடகையின் மார்பினை ஊடுருவிச் சென்றது.

[பால - தாட - 71 : 4]

652. "புல்லிடை யுகுத்தமு தேயும்"

அரசர்க்குரிய குணங்கள் பெற்ற பரதனுக்கு ஆட்சி அமையாததனுல், அவை புல்லில் பெய்த அமிழ்தம் போல் வீணுயின. [அயோ - மந்தரை - 62 : 4]

653. "புல்வாய் புலிகண்டது போல் வரலால்"

இந்திரனும், மும்மூர்த்திகளும் இராமன் முன்னர் புலியைக் கண்டு அஞ்சும் மானினம் போல் ஆற்ற லிழப்பர் என்று இராவணனிடம் சடாயு இராமனின் ஆற்ற லைக் கூறினுன். [ஆரணி - சடாயு உயிர் - 98 : 3]

654. "புவனி மீதினின், முழங்கிவந் திழிவதோர் முகிலும் போல்கின்ருன்"

பூமி மீது இழியும் மேகமென, சம்பாதி பறந்து வந்தான். [கிட்கி - சம்பா - 25 : 3-4]

655. "புழையடைத் தொடுங்கின வச்சை மாக்கள் போல்"

ஆண் வண்டுகள் பெண் வண்டுகளுடன் உலோபிகள் மனையடைத்து இருப்பதுபோல, வளையடைத்து ஒடுங்கின. [கிட்கி - கார் - 121 : 4]

656. "புன்கவியென"

தெளிவற்ற அகழி நீர், கல்லாதவன் பாடிய தெளிவில்லாத பாடல் போன்றது.

[பால - நகர் - 14 : 2]

657. "புன்னுனை நீரி னெய்தாப் போதலே"

புல்லின் நுனியிலுள்ள நீர்போலே விரைந்தழியும் வாழ்க்கை. [ஆரணி - சடாயு உயிர் - 70 : 1]

658. "பூதலந், தீப்பொதிந் தாமென மிதிக்கும் செய்கையான்"

நெருப்பிடை நடப்பவர் போன்று முனிவர்

வேடங் கொண்ட இராவணன் நடந்து வந்தான்.
[ஆரணி - சடாயு உயிர் - 22 : 2]

659. "பூத்த கொம்பனுள்"

பூத்த கொம்பு போன்ற கற்புடையாள்.
[பால - உண்டா - 52 : 4]

660. "பூப்பொதி யவிழ்ந்தன நடையன்"

பூவின் இதழ் விரிவது போல மெத்தென்ற நடையை உடைய முதிய முனிவர் வேடமிட்ட இராவணன் வந்தான். [ஆரணி - சடாயு உயிர் - 22 : 1]

661. "பூரியர் புணர்மாதர் பொதுமன மெனமன்னும்"

கீழ்மக்கள் சேரும் பொதுமகளிர் மனம்போல ஈரமற்ற இளவேனிற் காலம் இருந்தது.
[அயோ - வனம் - 1 : 1]

662 "பூவுதிர் கொம்பென மகளிர் போயினர்"

அணிகளின்றிச் செல்லும் மகளிர், பூக்கள் உதிர்ந்த கொம்பு போன்றனர். [அயோ - ஆறு - 34 : 4]

663. "பூவு திர்ந்ததொர் கொம்பெனப் புவிமிசை புரண்டாள்"

பூக்களற்ற கொம்பு போன்று, அணிகலன்களை எறிந்து கைகேயி மண்ணில் புரண்டாள்.
[அயோ - மந்தரை - 87 : 4]

664. "பூளைவீ புரை பனிப்புயற்கு"

பூளைப் பூவைப் போன்ற பனிமழை.
[பால் - மிதிலை - 47 : 2]

665. "பெண்டிரிற் கூற்ற மன்னுள்"

பெண்களுள் கூற்றுவன் போன்ற கைகேயி
[அயோ - கைகேயி - 79 : 4]

666 "பெருங்கடல், நீரு நீர்நுரை யும்மென நின்றவன்"

கடல்நீரும் நுரையும் போல இராவணனும், அவனைச் சூழ்ந்து வீசிய வெண்சாமரையும் தோன்றினர்.

[யுத்த - முதற் - 98 : 2]

667. "பெரும்பாம் பென்லப் புரண்டனள்"

தானியமாலினி, மகன் அதிகாயன் இறந்ததை அறிந்து துன்பத்தினுல் இராவணனின் காலில் மீது விழுந்து பெரும்பாம்பெனப் புரண்டாள்.

[யுத்த - அதிகா - 268 : 2]

668. "பைக்கொடு விடத்தர வெனப் பலகை பற்றி"

இராவணன் சுக்கிரீவன் உடலேப் பல கைகளால் பற்றியது ஆதிசேடன் படங்களால் மேருமலையைப் பற்றியது போலாகும். [யுத்த - மகுட - 13 : 2]

669. "பொங்கிமுற் றியவுணர்வு புணர்தலும் புகையிஞெடு
பங்கமுற் றனைய வினை பரிவுறும்"

நல்லுணர்வு தோன்றியவுடனே வினைகள் நீங்குதல்போலச் சூரியன் தோன்றியவுடன் இருள் நீங்கும்.

[கிட்கி - பம்பை - 41 : 1 - 2]

670. "பொய்க்கரி கூறிய கொடுஞ்சொல் போன்றவே"

பொய்ச்சாட்சி மொழிகள், கூறியவரை அழிக்கும் இயல்பினைப் போல இராமபாணங்கள் அரக்கரை அழித்தன. [ஆரணி - கரன் - 124 : 4]

671. "பொய்யுறு பிறவிபோலப் போக்கரும் பொங்கு கங்குல்"

பொய்த்தன்மை மிக்க பிறவி போல நீக்க முடியாதபடி இரவுப்பொழுது நீடித்தது.

[ஆரணி - அயோமுகி - 3 : 2]

672. '' பொன்மலர்ச் சதங்கையுஞ் சாத்தி ''

அழகிய மலர்களின் வடிவாக அமைந்த சதங்கை. [யுத்த - இராவ - தேர் 7 : 4]

673. '' பொன்விலைப், பாவையர் மனமும்போற் பசையு மற்றதே ''

ஈரமற்ற பாலைநிலம், பொருட் பெண்டிர் மனம் போன்றது. [பால - தாட - 15 : 3 - 4]

674. '' பொன்விலை மகளிர் மனமெனக் கீழ்போய் ''

பொருட்பெண்டிர் மனமென ஆழமுடையது அகழி. [பால - நகர - 14 - 2]

675. '' பொற்கிழி விரித்தென ''

அரும்புகள் நிறைந்த புன்னை மரங்களின் தோற்றம், விரிந்த பொற்கிழியினை ஒத்திருந்தது [கிட்கி - கார் - 74 : 4]

676. '' பொன்னின் சோதி போதி னாற்றம் பொலிவே போல் ''

பொன்னின் ஒளிபோன்றும், மலரின் மணம் போன்றும் பொலிவுடன் சீதை விளங்கினாள் [பால - மிதிலை - 23 : 1]

677. '' பொன்னின் மலை வருகின்றது போல்வா னனல் கால்வான் ''

பரசுராமன் சீற்றங்கொண்டு இராமனை நோக்கிப் பொன்மலை வந்தாற்போன்று வந்தான். [பால - பரசு - 7 : 3]

678. '' பொன்னுளே தோன்றியதோர் பொற்கலனே போல்கின்றேன் ''

'உன்னிடத்துத் தோன்றிய நான் பொன்னினாலே செய்யப்பட்ட பொன்னணி போலாவேன்', என்று

பிரகலாதன் நரசிங்கமூர்த்தியைத் தொழும் பொழுது கூறினன். [யுத்த - இரணி - 160 : 4]

679. "பொன்னெடுங் குன்றம் வானின் வருவதே போலு மெய்யான்"

சடாயு விண்ணில்பறந்து வந்தது மேருமலை வானில் வந்தது போலத் தோன்றியது.
[ஆரணி - சடாயுஉயிர் - 87 : 4]

680. "பொன்னோக்கியர் தம்புல னோக்கிய புன்க ணோரும்'

பொருட் பெண்டிரை அடைய விரும்பிய வறுமையாளர் போல, இராவணன் எறிந்த வேல் சடாயுவின் உடலைத் துளைக்க இயலாமல் பயனின்றித் திரும்பியது.
[ஆரணி - சடாயுஉயிர் - 119 : 1]

681. "போரில்வந்து சீறுகின்ற போரரக்கர் போலுமே"

செருக்களத்தில் அமர்புரிந்த அரக்கர் போல அகழியில் முதலைகள் போர்புரிந்தன.
[பால - நகர - 18 : 4]

682. "போர்வேட்டு, யானை மேற்செலுங் கோளரி யேறிவ னென்ன"

யானைமேற் செல்லும் சிங்கம் போன்று, இராவணனை நோக்கி இராமன் போர்வேட்டுச் சென்றான்.
[யுத்த - முதற் - 215 : 1 . 2]

683. "போனபே ருயிரினைக் கண்ட பொய்யுடல்
தானது கவர்வுறுந் தன்மைத் தாமென"

தன்னை விட்டு நீங்கிச்சென்ற உயிரை மீளக் கண்ட உடல் அவ்வுயிரைக் கொள்ள முயலும் தன்மை போல, விமானத்தில் இருந்த சீதை தன் முகத்தை இராமபிரானுக்குக் காட்ட நிலத்தில் இறங்கினாள். [யுத்த - மீட்சி - 58 : 2]

684. "மகவு கொண்டுபோய் மரம்புகு மந்தியை நிகர்த்தான்"

போர்க்களத்தில் வீழ்ந்து கிடக்கும் இலக்குவனை அனுமன், குட்டியைச் சுமந்துகொண்டு மரத்தைச் சேரும் பெண் குரங்கு எனச் சுமந்து சென்றான்

[யுத்த - முதற் - 213 : 4]

685. "மங்குல் வல்லுரு மேற்றின்மே லெரிமடுத் தென்ன"

மேகத்திலுள்ள வலிய உருமேற்றின்மீது எரி மடுத்தாற் போன்று, அங்கியம்படையினைத் தொடுத்து இராமன், இராவணனின் ஆசுரம் என்ற படைக்கலனை அழித்தான். [யுத்த - இராவ - வதை - 98 : 3]

686. "மங்கையர் குறங்கென வகுத்த வாழைகள்"

மகளிரின் தொடைகள் வாழைகளைப் போல்வன.

[அயோ - மந்தரை - 30 : 1]

687. "மங்கை மார்தட முலையெனப் பொலிவன வாளம்"

சக்கரவாகப் பறவைகள் மடந்தையரின் மார் பகங்கள் போலத் தோன்றின. [கிட்கி - பம்பை - 20 : 4]

688. "மங்கைய ரீட்டம் மால்வரை தழீஇய மஞ்ஞையங் குழுவென வயங்க"

மலையினைத் தழுவிய மயிற்கூட்டம் போல, இராவணனுடன் மங்கையர் சூழ்ந்து வந்தனர்.

[சுந்தர - நிந்தனை - 10 : 4]

689. "மஞ்சிடை வயங்கித் தோன்றும் பவளத்தின் வல்லியென்ன"

கார்கால மேகத்திடையே தோன்றும் பவளக் கொடிபோன்று இராமனைச் சீதை தழுவி நின்றாள்.

[ஆரணி - சூர்ப்ப - 66 : 4]

690. "மஞ்சி டைப்புக்கு மின்னெனப் புகையிடை மறைந்தார்"

அனுமன் இலங்கையை எரியூட்டிய பொழுது,

எழுந்த புகையினைக் கணவரெனக் கருதிய அரக்கியர் அதனிடைக் கலந்தது மேகத்தில் புகுந்த மின்னலெனத் தோன்றியது. [சுந்தர - இலங் - எரி - 27 : 4]

691. "மஞ்சொக்கு மளகவோதி மழையொக்கும் வடித்த கூந்தல்"

சீதையின் முடித்த கூந்தல் மேகத்தையும், வார்ந்து தாழ விடப்பட்ட கூந்தல் காலிறங்கிய மேகத்தையும் ஒப்பன. [ஆரணி - மாரீ - 70 : 1]

692. "மடங்க லன்னவவ் வானர மாப்படை"

வானரப் படை சிங்கங்களை ஒத்திருந்தது. [யுத்த - முதற் - 4 : 2]

693. "மடங்கலின் முழக்கங் கேட்ட வான்கரி யொத்தார்"

வானர வீரர் எழுப்பிய ஆரவாரவொலி கேட்ட அரக்கர், சிங்கத்தின் கர்ச்சனையைக் கேட்ட களிறுகள் போல நடுங்கினர். [யுத்த - நாக - 284 : 3]

694. "மடங்கல் வீரனன் மாற்றம் விளம்புவான்"

அங்கதன் ஆண் சிங்கம் போன்றவன். [கிட்கி - கிட்கி - 23 : 3]

695. "மணலிற் பலரால் வானரங்கள்"

மணலைப் போல எண்ணிறந்த வானரர். [சுந்தர - உருக் - 114 : 2]

696. "மணியிழையின், வெயில்புடை பெயர்வன"

அணிகலன்களின் ஒளிபோலச் சூரியவொளி பரவியது. [பால - நாட்டு - 42 : 1-2]

697. "மன்னவர் வறுமை நோய்க்கு மருந்தன சடையன் வெண்ணெய்
அண்ணறன் சொல்லே யன்ன"

மன்னுலக மக்களின் வறுமை நோயை நீக்கும் மருந்து போன்ற சடையப்ப வள்ளலின் சொல்லைப் போலப் பயன்தரும் படைக்கலன்களை இராமனுக்கு விசுவாமித்திரன் அளித்தான். [பால - வேள்வி - 1 : 3-4]

698. "மண்ணிடைப் புழுவின் வாழு மானிடர்"

இராவணனை நோக்க மானிடர் மண்ணில் நெளியும் புழுவினைப் போன்றவராவர்.
[ஆரணி - சடாயு உயிர் - 67 : 2]

699. "மண்ணினை யளந்து நின்ற மாலென"

துயில் நீங்கிய கும்பகர்ணன், மண்ணினை அளந்து நின்ற திருவிக்கிரமன் போல் ஓங்கி நின்றான்.
[யுத்த - கும்ப - 57 : 4]

700. "மதப், பூட்கைகள் நிறைந்தபுண் திறப்ப போன்றவே"

வாளால் வெட்டப்பட்ட களிற்றின் புண்களைப் போல் கருத்த வானில் மின்னல்கள் தோன்றின.
[கிட்கி - கார் - 5 : 3-4]

701. "மதியிலா விரவும்"

அரசனில்லாத வையகம் தண்மதி இல்லாத இரவு போன்றது. [அயோ - ஆறு - 7 : 3]

702. "மத்துறு தயிரி னுள்ளம் மறுகினன்"

நாகபாசத்தால் இலக்குவன் தாக்குண்டதை அறிந்த வீடணன் மத்தினால் கடையப்பட்ட தயிர்போல மனம் கலங்கினான். [யுத்த - நாக - 208 : 2]

703. "மத்துறு தயிரென வந்து"

மத்துறு தயிரென இராமனின் மனம் கலங்கியது. [சுந்தர - சூளா - 69 : 1]

704. "மந்தர மொத்தன னனுமன்"

பிரமன் படைக்குக் கட்டுப்பட்ட அனுமன், வாசுகியால் பிணிக்கப்பட்ட மந்தரமலை போலத் தோன்றினன். [சுந்தர - பாச - 61 : 4]

705. "மந்த ரத்தையும் கடுத்தது மற்றவன் மணியணி
வயிரத்தோள்"

கடலில் விழுந்த கும்பகர்ணனின் தோள் மந்தர மலை போலத் தோன்றியது. [யுத்த - கும்ப - 345 : 4]

706. "மந்தரை யுரையெனுங் கடுவின் மட்கிய
சிந்தையி னிருண்டது செம்மை நீங்கியே"

சூரியன் நீங்கியதால் இருண்ட வானம், மந்தரையின் நச்சுத்தன்மை உடைய சொற்களால் இருண்ட கைகேயியின் சிந்தை போலாயிற்று.

[அயோ - தைல – 5 : 3-4]

707. "மயிலென விரியல் போவார்"

களிற்றினைக் கண்ட பெண்கள் அஞ்சி மயிலென ஓடினர். [பால - எழுச்சி - 55 : 4]

708. "மயில்களும் குயிற்க ணங்களும்
அன்னமுஞ் சிறையிழந் தவனி சேர்ந்தன
என்னவீழ்ந் துழந்தனர்"

அறுபதினுயிரம் தேவியரும் சிறகுகள் இழந்த மயில், குயில், அன்னம் போலாயினர்.

[அயோ - நகர் - 181 : 1-3]

709. "மரங்கு டைந்த தும்பிபோல"

மரத்தைக் குடையும் வண்டு போல, மன்மதன் கணை இராவணனின் மார்பைத் துளைத்தது.

[ஆரணி - மாரீ - 93 : 3]

710. "மரந்தா னென்னு நெஞ்சின ளுனள்"

மரம் என்று கூறத்தக்க மனத்தையுடைய நாணமற்ற கைகேயி மன்னன் உளம் வருந்தும் வண்ணம் உரையாடினாள். [அயோ - கைகேயி - 34 : 2]

711. "மரபுளி நிறுத்திலன் புரக்கு மாண்பிலன்
உரனில னொருவனுட் டுயிர்கள் போல்வன"

கொடுங்கோலன் நாட்டிலுள்ள குடிகள்போலக் கவந்தனிடம் அகப்பட்ட உயிரினங்கள் வருந்தின.

[ஆரணி - கவந்த - 4 : 1-2]

712. "மருங்குல்போற் றேய்ததம் மாலைக்கங்குலே"

மாதரின் இடையைப் போல் கங்குற்பொழுது தேய்ந்தது. [பால - உண்டா - 66 : 4]

713. "மருந்தா லழல், வெவ்வி டத்தினை யுண்டவர்
மீண்டென"

கொடிய நஞ்சினை உண்டவர்கள் நன்மருந்தால் பிழைத்து எழுவதுபோல, இந்திரசித்தின் அம்புகளால் தாக்கப்பட்டு மயங்கி வீழ்ந்த வானரப் படையினர் சிறிது நேரம் கழிந்ததும் தாமாகவே மயக்கம் தெளிந்து எழுந்தனர்.

[யுத்த - நாக - 144 : 1]

714. "மருமத்தி னெறிவேல் பாய்ந்த
புண்ணிலாம் பெரும்புழையிற் கனனுழைந்தா
லெனச்செவியிற் புகுதலோடும்"

'கரிய செம்மல் ஒருவனைத் தந்திதி', என்ற கௌசிக முனிவன் கூறிய சொல், மார்பில் வேலால்தோன்றிய

புண்ணில் கனல் நுழைந்தாற் போன்ற வருத்தத்தைத் தயா தனுக்குத் தோற்றுவித்தது.

[பால - கையடை - 11 : 1 - 2]

715. ''மருளுறு பிறவி நோய்க்கு மருந்து''

அறியாமை நிறைந்த பிறவியை உயிரை வருத்தும் நோய் என்றும், அதனைப் போக்கும் மருந்தென இராமனும் உவமிக்கப்படுவதைக் காணலாம்.

[யுத்த - கும்ப - 139 : 3]

716. ''மருளொடு தெருளுறு நிலையர் மங்கையர்
தெருளுற மெய்ப்பொரு டெளிந்தி லாரினே''

மெய்ப்பொருளை நன்குணராதவர் ஓரளவு மயக்கமும், தெளிவும் கொள்பவர்போல மங்கையர் உறக்கமும் விழிப்பும் அடைந்தவாறு அமளியில் வதிந்தனர்.

[ஆரணி - மாரி - 128 : 3 - 4]

717. ''மரைநாள நூலின் வகையென்ப''

கருடனது வருகையால் நாகபாசம் இருந்த இடமும் தெரியாது அழிந்தமையால் அது தாமரைத் தண்டின் உள்ளே மெல்லிய நூலின் தன்மையடைந்தது என்பதில் என்ன சிறப்பு உள்ளது. [யுத்த - நாக - 263 : 1]

718. ''மலரின் மணமு மெள்ளி லெண்ணெயும் போல
வெங்கும்
அலகில்பல் பொருளும் பற்றி முற்றிய வரிகா
ணத்தா''

மலரில் மனமும், எள்ளில் எண்ணெயும் பொருந்தி இருப்பனபோல், எங்குமுள்ள அளவில்லாத பொருள்களில் திருமால் கலந்து நிறைந்துள்ளான் என்று பிரகலாதன் இரணியனுக்கு இறையுண்மையினை எடுத்துரைத்தான். [யுத்த - இரணி - 120 : 3 - 4]

719. " மலர்ப் பாதங்கள் "

வசிட்டரின் திருவடிகள் மலர் போன்றவை. [அயோ - மந்திர - 45 : 2]

720. " மலைமிசைத் தடத்துகு மழைக்க ளுலிபோல் "

மலையில் விழும் மழைத்துளி போலச் சீதையின் மார்பில் கண்ணீர் சிந்தியது. [பால - மிதிலை - 48 : 1]

721. " மலர்மிசை மலர்பூத் தெனமலர்க் கையால் வதனம் தாங்கி'

ஊடல் கொண்ட மாதர் தம் கையொன்றினுல் தம் முகத்தைத் தாங்கிக் கொண்டிருந்தது, செந்தாமரை மலர்மீது தாமரை மலர் பூத்தாற்போலத் தோன்றியது. [சுந்தர - ஊர் - 113 : 3]

722. " மலைகிடந்தது போல வணங்கினுன் "

ஒருமலை கீழே படுத்தாற் போலக் கும்பகர்ணன் இராவணனை வணங்கினுன். [யுத்த - கும்ப - 71 : 4]

723. " மலைமேல்விழு முருமேறெனப் புடைத்தான் "

அனுமன் கையில் கொண்ட மரத்தினுல், ஊழிக் காலத்து மலைமேல் வீழ்கின்ற உருமேறு போலப் புடைத்தான். [யுத்த - அதிகா - 158 : 4]

724. " மலையின்மேல் மலைவீழ்ந் தென்ன "

இறந்து கிடக்கும் இராவணன்மீது வீடணன், மலைமேல் மலை வீழ்ந்தது போல விழுந்தான் [யுத்த - இராவ - வதை - 218 : 4]

725. " மழைகளு மறிகட லும்போய் மறைதர "

முரசொலி இடியொலியையும், கடலொலி யையும் வென்றது. [சுந்தர - இங்க - 23 : 1]

726. '' மழைக்க ணேழை ''

மழை போலக் குளிர்ந்த கண்ணேயுடையவள் சிதை. [ஆரணி - மாரீ - 250 : 4]

727. '' மழைக்குரல் தேரின் ''

மழைக்குரல் போன்று தேரின் சக்கரவொலி எழுந்தது. [யுத்த - படைத்தலேவர் - 30 : 4]

728. '' மழைத்தமுகி லென்னமணி மேனிவரு டாமல் ''

இராமன், மழை பெய்யும் மேகத்தை யொத்த அழகிய திருமேனி உடையவன் [யுத்த - ஒற்று - 11 : 2]

729. '' மழையிற் ருேன்றும், விண்ணின்ற மதியின் ''

மேகத்திடையில் தோன்றும் சந்திரன் போலச் சிதையின் கூந்தலில் சிகழிகை என்னும் மாலேயினேச் சூட்டினர். [பால - கோல - 4 : 3 - 4]

730. '' மழையி ஞர்ப்புற ''

முரசொலி இடியொலியை நிகர்க்கும். [அயோ - மந்திர - 4 : 1]

731. '' மழையின் மேன்மழை வந்தன்ஞர் ''

மேகத்தின் மீது மற்றெரு மேகம் போர் செய்ய வந்தாற் போன்று இலக்குவனும் இந்திரசித்தும் போரிட்டனர். [யுத்த - நாக - 101 : 4]

732. '' மழையென முழங்குகின்ற வாளெயிற் றரக்கர் ''

இடியொலி போல ஆரவாரித்த அரக்கர். [ஆரணி - கரன் - 65 : 3]

733. '' மழைக்குன்ற மனேயான் ''

இராமன் மேகம் தழுவிய மலே போன்றனன். [அயோ - நகர் - 2 : 3]

734. ''மனத்தோர், அருளில் வஞ்சரைத் தஞ்சமென்
றடைந்தவ ரனைய''

அருளில்லாத வஞ்சரைத் தஞ்சமென அடைந்தவர் அழிவது போலக் கடலைத் தஞ்சமென அடைந்த பறவைகளை, மீனினம் கவர்ந்துண்ண அவை அழிந்தன.

[சுந்தர - இலங் - எரி - 37 : 3 - 4]

735. ''மனமென வெழுந்து போன''

சீதை அமர்ந்த புட்பக விமானம் மனோவேகமாகச் சென்றது. [யுத்த - மீட்சி - 179 : 4]

736. ''மன்மதன் திகைக்குஞ் செவ்வியன

இராமன், மன்மதனும் மனம் தடுமாறும் அழகுடையவன். [ஆரணி - சடாயு - உயிர் - 48 : 2]

737. ''மன்றலம் புதுமலர் மழையிற் சூழ்ந்தென''

கூந்தலில் மேல் மலர் தொடுத்திருந்தது, மேகத்தில் மலர் சூழ்ந்திருப்பது போலாகும்.

[பால - எழுச்சி - 19 : 1 - 2]

738. ''மன்றிடை நலிந்துவலி யோர்களெளி யோரைக்
கொன்றனர் நுகர்ந்தபொரு ளிற்கடிது கொன்ற''

எளியோரைத் தாக்கிப் பொருளைக் கவர்ந்த வலியோர்களை, அப்பொருள் விரைவாக எளிதில் அழிப்பது போல இராமன் கணைகள் அரக்கரைக் கடிதாக அழித்தன.

[ஆரணி - சரன் - 168 : 3- 4]

739. ''மாசடை பேதமையிடை மயக்கத்தால்''

முக்குணங்களால் வெளிப்பட்டுத் தோன்றாத நல்லறிவு போலப் பசிய இலை தழைகளால் மறைக்கப்பட்ட முத்துக்கள் தடாகத்தில் வெளிப்பட்டுத் தோன்றவில்லை.

[கிட்கி - பம்பை - 8 : 2]

740. '' மாசிலாக், குலம டந்தைய ரென்னக் கொடிகளே ''

எந்நிலையிலும் கணவரை விட்டிடாத குல மங்கையரைப் போல, வானரங்களால் வேரோடு பறித்தெறியப் பட்ட மரங்களை விடாமல் கொடிகள் தழுவி நின்றன.

[யுத்த - சேது - 59 : 3 - 4]

741. '' மாசுண்ட மணியனாள் ''

சீதை, அழுக்குப் படிந்த இரத்தினம் போன்றவள். [சுந்தர - காட்சி 68 : 1]

742. '' மாடு வென்றியோர் மாதிர யானையின்
சேடு சென்று கெடிலொரு திக்கின்மா
நாடு கின்றது நண்ணிய கால்பிடித்து
ஓடு கின்றது மொத்துள னயினான் ''

வழி தவறிச் சென்ற யானைக் கன்றைச் சுவடு கொண்டு தேடியோடும் யானை போலக் குறித்த காலத்தில் வரத் தவறிய சுக்கிரீவனைக் காண இலக்குவன் விரைந்து சென்றான். [கிட்கி - கிட்கி - 13]

743. '' மாண்வினைப் பயன்படா மாந்தர் வாயில்சேர்
பாணரிற் றளர்ந்தன பாடற் றும்பியே ''

இசைப் பயனை நுகர வொண்ணாத மாந்தர் வாயிலைச் சேர்ந்த பாணரைப் போல, இதழ் விரியாத பூக்களில் தேனுண்ணச் சென்ற வண்டுகள் வறிதே மீண்டன.

[ஆரணி - மாரீ - 127 : 3 - 4]

744. '' மாதர்த மென்செவிப்
பைய ராநுழை கின்ற போன்றன ''

கணவர் பிரிந்துழி வருந்திய பெண்களின் செவிகளில் பண்கனிந்து எழுந்த பாடல்கள், படங்கொண்ட பாம்புகள் நுழைந்தாற் போன்ற துன்பத்தை மிகுவித்தன.

[அயோ - கைகேயி - 54 : 3 - 4]

745. "மாதவர் நெஞ்செனத் தெளிந்தன"

பொய்கை நீர் முனிவர் நெஞ்சு போலத் தெளிந் திருந்தது. [கிட்கி - கார் - 112 : 1- 2]

746. "மாந்தளிர் நறுமேனி"

சீதை, மாந்தளிர் போன்ற மேனியாள்.
[அயோ - வனம் - 5 : 3]

747. "மாமியர் குழுவின் வந்தா னுமென"

வானர மகளிரோடு வந்த தாரையை நோக்காமல் தரையைப் பார்த்து நின்ற இலக்குவன், மாமியர்கூட்டத்திடை வந்தவன் போலத் தோன்றினன்.
[கிட்கி - கிட்கி - 48 : 2]

748. "மாயையிற் பிரிந்தார்க் கெல்லா மனோலயம் வந்த
தொத்தான்"

இராமன், மாயையிலிருந்து நீங்கியவர்களுக்கு எல்லாம் மனம் பற்றுமிடம் நேர்ந்ததை ஒத்தான்.
[யுத்த - மீட்சி - 337 : 2]

749. "மாயையின், பெருங்கடல் கடந்தனர் பெயரும்
பெற்றிபோல்"

ஞானியர் மாயை என்னும் பெருங்கடலைக் கடந்தது போல, அனுமனும் கால்களால் கடலைக் கடந்தனன். [சுந்தர - உருக் - 97 : 2 - 3]

750. "மார னன்னவர் வரவுகண் டுவக்கின்ற மகளிர்
முரன் மென்குறு முறுவலெனத் தரும்பின முல்லை"

மன்மதன் போன்ற தலைவரின் வரவைக் கண்டு உவக்கின்ற மகளிரின் புன்முறுவலை ஒத்து முல்லை அரும்பியது.
[கிட்கி - கார் - 36 : 3 - 4]

751. '' மாரி துளிக்குந் தாரை யிடுக்கும் வரவல்லீர் ''

அனுமன், மழைத்துளி வழியாகச் செல்லவல்ல நுண்ணுருவம் கொள்ள வல்லவன் ஆவான்

[கிட்கி - மயே - 12 : 2]

752. '' மாருத மறைந்த பூளையாயின ''

இராவணனுக்குத் துணை நின்ற படை காற்றினால் மோதப்பட்ட பூளைப்பூண்டுகள் போல அழிந்தது.

[யுத்த - முதற் - 256 : 1-2]

753. '' மாழை பானல்வேல் ''

மாவடு, கருநெய்தல் மலர், வேல் ஆகியவற்றைப் போன்று சீதையின் கண்கள் காட்சியளித்தன.

[ஆரணி - மாரீ - 92 : 2]

754. '' மானிளம் பேடை
அயிலெ யிற்றுவெம் புலிக்குழாத் தகப்பட்ட
தன்னுள் ''

புலிக்கூட்டத்திடையே அகப்பட்ட பெண்மான் போல் சீதை அரக்கியர் கூட்டத்தில் அகப்பட்டுத் துடித்தாள்.

[சுந்தர - காட்சி - 4 : 3-4]

755. '' மானை யெடுக்கு மானை யேபோல் ''

பெண்மானை, யானை துதிக்கையால் தூக்குவது போலக் கைகேயியைத் தயரதன் தழுவி எடுத்தான்.

[அயோ - கைகேயி - 3 : 3]

756. '' மிதிலைநாட் டன்ன மென்னவே ''

மழையற்ற காலத்தில் மயில், மிதிலை நாட்டு அன்னமான சீதை போலக் களிப்பற்று ஒடுங்கியது.

[கிட்கி - கார் - 115 : 4]

757. "மின்னுலயர் வுறும்வாளர வெனவெய்துற லுற்றுன்"

இரக்கங் கொள்ளாது இராமனை எதிர்க்கச் சென்ற பரசுராமனைக் கண்ட தயரதன், மின்னலை நோக்கித் தளர்ச்சியடையும் நாகம் போன்று தளர்ந்தான்.

[பால - பரசு - 24 : 4]

758. "மின்னிடை"

மின்னலைப் போன்ற இடையுடையாள் சீதை.

[கிட்கி - கிட்கி - 77 : 2]

759. "மின்னு யிர்க்கு வேல்"

வேல், மின்னலைப் போல ஒளியினைப் பாய்ச்சியது.

[யுத்த - இரணி - 46 : 4]

760. "மின்னெடு நடந்து செல்லு மேகம்"

மின்னலுடன் நடந்து செல்லும் மேகம் போலச் சீதையுடன் இராமன் நடந்து சென்றுன்.

[ஆரணி - சூர்ப்ப - 69 : 3]

761. "மீனெ லாந்தன பின்வர வெண்மதி
வானி லாவுற வந்தது மானவே"

சுற்றம் சூழ வந்த தயரதன், விண்மீன்கள் சூழ வரும் தண்மதி போலத் தோன்றினுன்.

[பால - உலா - 45 : 3-4]

762. "மீனெ லாமுடன் விசும்பினின் றுதிர்ந்தென வீழ்ந்த"

இலக்குவன் எறிந்த கணைகள் விலக்கியதனுல், அரக்கர் எறிந்த படைக்கலன்கள் தீப்பொறி தோன்றப் பொடியாக விண்மீன்கள் உதிர்வ போல் விழுந்தன.

[யுத்த - கும்ப - 221 : 4]

763. "மீனெடு சுடர்விட விளங்கு மேகத்து
வானிடு வில்லென"

திருமகள் உறையும் இராமனின் திருமார்பில்

அணிந்த இரத்தின மாலை, மேகத்தினிடையே தோன்றும் மின்னல் போல விளங்கியது [பால - கடி - 59 : 3-4]

764. ' முக்கணன், கைத்தலைச் சூலமே யனைய காட்சியான்''

திரிசரன், சிவனின் முத்தலைச் சூலம் போன்று தோன்றினன் [ஆரணி - கரன் - 113 : 3]

765. ''முட்டிய மழையின் றுள்ளி முறையின்றி மொய்க்கு மாபோல''

இலக்குவனின் பகழிகள் மழைநீர் போல அரக்கரின் தேர், களிறு, பரி முதலியவற்றைத் தாக்கி அரக்கரையும் வீழ்த்தின. [யுத்த - முதற் - 144 : 3]

766. ''முத்த வோடையின் முரட்டிசை முழுமத யானை''

திக்கயங்களின் நெற்றியில் அணியப்பட்ட முத்துக்களால் இயன்ற நெற்றிப் பட்டம் போல, இராவணனின் நெற்றிகளில் அணியப்பட்ட வீரப்பட்டம் விளங்கியது.
[யுத்த - இராவ தேர் - 14 : 3]

767. ''முத்தியில், போவது புரிபவர் மனமும்''

முத்தியில் நாட்டங் கொண்ட ஞானியரின் பற்றற்ற உள்ளம் போன்று ஈரப்பசையற்றுப் பாலை நிறம் இருந்தது. [பால - தாட - 15 : 3]

768. ''முத்துக் கலைபோன் முகத்தாலி''

முத்துக்கள் உதிர்வன போலச் சீதையின் முகத்தில் கண்ணீர் வழிந்தோடியது.
[ஆரணி - சடாயு உயிர் - 106 : 1]

769. ''முப்புரஞ்சுடு, மொருவனிற் பொலிவென்''

திரிபுரத்தை எரித்த உருத்திரன் போல, ஓரம்பினால் உலகை இலக்குவன் வெல்வதாகக் கூறினன்.
[அயோ - திருவடி - 41 : 4]

770. "முழவி னேங்க"

மேகங்கள் மத்தளம் போன்று ஒலித்தன.

[பால - நாட்டு - 4 : 2]

771. "முழுவெண் டிங்களை, இரண்டுகூ றிட்டென"

கவந்தனின் கோரப் பற்கள், சந்திரனை இரண்டாகப் பிளந்தாற் போலத் தோன்றின.

[ஆரணி - கவந்த - 15 : 3 - 4]

772. "முழைகளின் வாய்க டிறந்தார்"

குகைகள் போல அரக்கரின் வாய்கள் திறந்திருந்தன. [சுந்தர - கிங்க - 23 : 2]

773. "முழைக்கி டந்தவல் லரியின முழங்குவ போல்வ"

இராவணன் அணிந்திருந்த சதங்கையில் இருந்து எழும் ஒலி, குகைகளிலுள்ள சிங்கங்களின் கர்ச்சனை ஒலியை நிகர்த்தது. [யுத்த - இராவ - தேர் - 7 : 3]

774. "முழைப டிந்தபிறை முள்ளெயிறு"

குகையில் படிந்திருக்கும் பிறைச் சந்திரன் போல, இராவணனின் வாயினுள் பற்கள் விளங்கின.

[யுத்த - -இராவ - வானர - 8 : 1]

775. "முழையினின் றெழுந்து செல்லு மடங்கலின் முனிந்து சென்றான்"

குகையினின்று வெளிப்பட்டுச் செல்லும் சிங்கம் போல இராமன் பர்ணசாலையினின்று போருக்குப் புறப்பட்டான். [ஆரணி - கரன் - 65 : 4]

776. "முறுவலிற் றும னான்றெண"

முத்துமாலையென மகளிரின் பல்வரிசை விளங்கியது. [அயோ - மந்தரை - 30 : 3]

777. "முனிவரு மொக்குத் திண்பொறி யடக்கிய செயலால்"

ஐம்பொறிகளை அடக்கிய ஞானியர் போலத் திண்ணிய பொறிகளை மறைத்து மதில் தோன்றியது.

[பால - நகர - 9 : 2]

778. "மூங்கையான் பேசலுற்ரு னென்னயான் மொழிய லுற்றேன்"

வான்மீகி புகழ்ந்த கோசல நாட்டினைத் தான் விளக்க முற்படுவது, ஊமை பேசத் தொடங்குவது போலாகும் என்று கம்பர் அவையடக்கத்துடன் கூறினர்.

[பால - நாட்டு - 1 : 4]

779. "முட்டாத காலக் கடைத்தீயென மூண்டெழுந்தான்"

இலக்குவன் ஊழித்தீயெனக் கனன்று எழுந்தான். [அயோ - நகர் - 115 : 4]

780. "மூட்டிய தீயென முடுகிப் பொங்கினன்"

மூண்டெழுந்த திப்போல இராவணன் விடணன் மீது சினங்கொண்டான். [யுத்த - வீடண - 1 : 3]

781. "முட்டிய பழியெனு முருங்கு தீயவித்து
ஆட்டினை கங்கைநீ ரரசன் தேவியைக்
காட்டினை யெனினெமைக் கடலி னுரமிழ்து
ஊட்டினை யாற்பிறி துயவு மில்லையால்"

சுக்கிரீவன் தேவியைத் தேடிக் காட்டுவான் என்ருல், அச்செயல் பழியை நீக்குவதோடு, கங்கைநீரினுல் நீராட்டுவதற்கும், பாற்கடல் அமிழ்தத்தை உண்பித்தற்கும் நிகராகும் என்று இலக்குவன் கூறினன்.

[கிட்கி - கிட்கி - 113]

782. "முள்கடைக் கடுந்தீயின் முனிவொழி"

ஊழிக்காலத்துத் தோன்றும் நெருப்புப் போல

மிக்குத் தோன்றும் சினத்தைத் தவிர்க, என்று இராவண னிடம் தேர்ப்பாகன் வேண்டினான்.

[யுத்த - இராவ - வதை - 180 : 3]

783. "மெய்கண்ட பொய்யென வியந்த"

மெய்யைக் கண்ட பொய்போல் இராவணனின் படைக்கலன் இராமனின் படைக்கலன் முன் வலியிழந்து அழிந்தது. [யுத்த - இராவ - வதை - 95 : 1]

784. "மெய்யி னோடருந் துறக்கமுற் றாரென வியந்தார்"

இராமன், தன்னோடு வானரரையும் அழைத்துச் செல்வதாகக் கூறிய சொல்லைக் கேட்ட சுக்கிரீவன் முதலியோர் உடம்புடன் துறக்கம் அடைந்தவர் போல மகிழ்ந்தனர்.

[யுத்த - மீட்சி - 156 : 4]

785. "மெய்யின் மேலொடு கீழுறப் பொருந்தி விரவும்
சைய மாநெடுந் தாழ்வரைத் தனிவழை"

கவந்தனின் தோள்கள் அறுபட்டுப் பெருகிய இரத்த வெள்ளம், மலையின் இரு பக்கங்களின்றும் இழியும் ஆறுகளைப் போலப் பெருக்கெடுத்து ஓடியது.

[ஆரணி - கவந்த - 39 : 3 - 4]

786. "மெய்யுணர் பவன்கழல் கூடிய தொப்ப"

தத்துவ ஞானி இறைவன் திருவடியை அடைந்து ஒளிமயமான உருவம் பெறுவதுபோல, இராமனுடைய திருவடிபட்ட வுடன் கல்லுருவில் நின்ற அகலிகை தன்னுருவம் பெற்றனள் [பால - அகலி - 71 : 3]

787. "மென்ம ருங்குல்போல் வேறுள வங்கமு மெலிந்தாள்",

சீதையினுடைய இடையினைப் போல அவளு டைய பிற அங்கங்களும் மெலிந்தன.

[சுந்தர - காட்சி - 3 : 4]

788 ' மேகத்துட், புக்கலும் புறத்துமா மதியம் போன்றனன்"

கும்பகர்ணனால் கவர்ந்து செல்லப்பட்ட சுக்கிரீவனின் தோற்றம், மேகத்தினுள் தோன்றியும் மறைந்தும் செல்கிற சந்திரனைப் போன்றது

[யுத்த - கும்ப - 272 : 3 - 4]

789 " மேகத்தைத், தழுவிய நிலவென "

மேகத்தைத் தழுவிய நிலவென இராமனின் மேனியில் கலவைச் சாந்து பூசப்பட்டது.

[பால - கடி - 51 : 3 - 4]

790. " மேகமொத்தனர் மாருதி வெய்யவ னொத்தான் "

மேகங்களின் நடுவே சூரியன்போல், அரக்கரின் நடுவே அனுமன் இருந்தான். [சுந்தர - கிங்கர - 46 : 4]

791. " மேருகிரிக்கு மீதுற நிற்கும் பெருமெய்யீர் "

அனுமனின் பேருடம்பிற்கு மேருமலை உவமை.

[கிட்கி - மயே - 12 : 1]

792. " மேருப் புழையென "

இராவணனின் சீற்றத்திற்கு அஞ்சிய சூரியனும் சந்திரனும் அடங்கிய மேருமலையின் குகைபோல, இமைத் தோல் சுருங்கிய கும்பகர்ணனின் கண்கள் விளங்கின.

[யுத்த - கும்ப - 68 : 3]

793. " மேருவினை நாடொறும் வலஞ்செய் துழல்வோர்
இந்து சூரி யரையொத்து "

குருதியிழியும் நிலையில் இருந்த விராதனின் இருதோள்களில் உள்ள இராமனும் இலக்குவனும் மேரு மலையை வலம் வரும் சந்திர சூரியர்களைப் போலத் தோன்றினர். [ஆரணி - விராத - 37 : 3 - 4]

794. " மேருவை யுள்ளுறத் தொளைத்தொரு பிணையாக்கி
வழக்கி ஞூல களந்தவ னமைந்ததோர்
வான்குணில் வலத்தேந்தி
முழக்கி ஞலென முழங்குபே ரார்ப்பினன் வானர
முந்நீரை
உழக்கினன் "

மேருமலையைப் பறையாக்கி, திருவிக்கிரமன் ஒரு குணில் கொண்டு முழக்கினாற் போன்ற ஆரவாரத்தைக், குருதி ஒழுகும் நிலையிலிருந்த கும்பகர்ணன, தன் வலக் காலைக் கொண்டு வானரப் படைக் கடலைக் கலக்கி எழுப்பினான்.

[யுத்த - கும்ப - 347 : 1-4]

795. " மைதவழ் கிரியும் மேருக் குன்றமும் வருவதென்ன "

அஞ்சன மலையும் மேரு மலையும் வருவன போல வீடணனும் சுக்கிரீவனும் இராமனருகில் வந்தனர்.

[யுத்த - வீடண - 131 : 2]

796. " மையோமர கதமோமறி கடலோமழை முகிலோ "

அழியா அழகுடைய இராமனின் திருமேனி நிறத்திற்கு மையினையும், மரகதத்தினையும் கடலினையும், மேகத்தினையும் உவமைப் பொருள்களாகக் கூறலாமோ ?

[அயோ - கங் - 1 : 2]

797. " மொய்கொ டயிடை வெந்து முருங்கிய
வெய்ய பாறையில் வெண்ணெய் நிகர்க்குமால் "

விரகதாப வெம்மையால் சூர்ப்பணகை உடலில் அப்பிய பனிக்கட்டி, வெம்மையுற்ற பாறையில் வைத்த வெண்ணெய் என உருகியோடியது.

[ஆரணி - சூர்ப்ப - 78 : 3-4]

798. " மொழிந்த தேனுடை முகிழ்முலை யாய்ச்சியர் முழவில்
பிழிந்த பால்வழி நுரையினைப் பொருவ பிடவம் "

தேனினும் இனிய சொற்களையும், கோங்கின்

அரும்பு போன்ற மார்பகங்களையும் உடைய ஆய்ச்சியர், குடங்களில் கறந்த பாலினின்று வழிந்த நுரையைப் பிடவ மலர்கள் ஒத்துள்ளன. [கிட்கி - கார் - 47 : 3-4]

799. "யாமயாழ் மழலையாள்"

யாமப் பொழுதில் இசைக்கும் யாழிசை போன்ற மழலை மொழியாள் சீதை.
[கிட்கி - நாட - 34 : 4]

800. "யாளி போல்பவர்"

யாளி போன்றவர் வீரர்.
[ஆரணி - சடாயு உயிர் - 177 : 4]

801. "யாற்றிற் றிண்ணெடுங்
கோல்பிடித் தொழுகுறு குருடர் கூட்டம்போல்"

ஆற்றில், கோலைப் பிடித்துச் செல்லும் குருடர் கூட்டம் போல வானரர் குருதியாற்றில் யானைகளின் வாலைப் பிடித்துச் சென்றனர்.
[யுத்த - அதிகா - 100 : 2-3]

802. "யானைக் காற்பட்ட செல்லென"

யானையின் காலின் கீழகப்பட்ட செல்லுப் புற்றுப்போலச் சேனைக்காவலர் ஐவர் சுற்றத்தாரோடு அனுமனை எதிர்த்து வந்தனர்.
[யுத்த - இலங் - கேள் - 62 : 4]

803. "யானை, தொள்கொடுங் கிடந்த தென்ன"

இராமனுடைய கணை பாயப்பெற்ற வாலி வேடுவரால் அகப்படுத்திப் பள்ளத்தில் கட்டுண்டு உழலும் யானை போன்முன். [கிட்கி - வாலி - 73 : 3 - 4]

804. "யானையி னினத்தை யெல்லா மிளமுயல் கொல்லும் பின்னுங்
கூனுகிர் மடங்க லேற்றைக் குருளைமான் கொல்லு மென்றான்"

அரக்கரை மானிடர் வெல்வர் என்றால், யானைக் கூட்டத்தை முயலும், வளைந்த நகங்களையுடைய சிங்கங்களை ஒரு மானும் வென்று விடும் என்பது போலாகும்.
[ஆரணி - சடாயுஉயிர் - 57 : 3 - 4]

805. "யானையின் கோடுறு கரமென"

ஐராவதத்தின் துதிக்கை போல இராமனின் நீண்ட கைகள் விளங்கின. [சுந்தர - உருக் . 47 : 2]

806. "யோகிபோற் பற்று நீத்த"

இராவணனின் ஆணையால் இருதுகள் தம் கடமைகளை ஆற்றாமல் பற்று நீங்கிய யோகிபோல் உலகத் தொடர்பற்று விலகிச் சென்றன.
[ஆரணி - மாரீ - 103 : 3]

807. "யோகியர் தம்மைச் சார்ந்த
மென்னோக்கியர் நோக்கமு மாமென மீண்ட
தவ்வேல்"

யோகியரைத் தம்வசப்படுத்த எண்ணிய அழகிய மாதரின் ஆசைநோக்குப் போல, இராவணனால் எறியப்பட்ட முத்தலை வேல் சடாயுவின் மார்பைத் துளைக்க முடியாமல் வறிதே மீண்டது.
[ஆரணி - சடாயுஉயிர் - 119 : 3 - 4]

808. "யானை யென்ன மருதஞ்சென் றடைந்த தன்றே"

மதயானை போல மருதநிலத்தில் கரைபுரண்டு வெள்ளம் ஓடியது. [பால - ஆற்று - 16 : 4]

809. வஞ்சி போலியர் மருங்கென நுடங்கின வல்லி"

மகளிரின் நுண்ணிடை போன்று வல்லிக்கொடிகள் நுடங்கின. [கிட்கி - கார் - 45 : 4]

810. "வஞ்சிபோன் மருங்குலாள்"

சீதை வஞ்சிகொடி போன்ற இடையினை உடையாள். [கிட்கி - நாட - 37 : 1]

811. "வஞ்சியென"

வஞ்சிக்கொடி போன்று ஒசிந்து சூர்ப்பணகை வந்தாள். [ஆரணி - சூர்ப்ப - 31 : 4]

812. "வணிக மாக்களை யொத்ததவ் வாரியே"

மணி முதலியவற்றை விற்க எடுத்துச் செல்லும் வாணிக மக்களைப் போல மணி முதலியவற்றைக் கொண்டு வெள்ளம் ஓடியது [பால - ஆற்று - 7 : 4]

813. "வருமுலை விலைக்கென மதித்தனர் வழங்கும்
தெரிவையர் மனமென"

பொருளளவிற்கு ஏற்பத் தம்மை வழங்கும் பொது மகளிரின் திரியும் மனம்போலச் செருக்களத்தில் அனுமன் தடையின்றிச் சென்று போரிட்டான்.

[சுந்தர - சம்பு - 35 : 3 - 4]

814. "வல்வினை தீயன வந்த போதொரு
நல்வினை யொத்தது"

தீப்போல அழிக்க வந்த தீவினையைத் தடுக்க வல்ல நல்வினை வந்தாற் போன்று இராவணன் அனுப்பிய படை கும்பகர்ணனைக் காக்க வந்தது.

[யுத்த - கும்ப - 315 : 3 - 4]

815. "வழங்கிய கடலென வறிய ளாயினள்"

விரகதாபத்தால் சீதை மேகலை முதலிய

வற்றையும், நிறை முதலியவற்றையும் இழந்து, யாவற்றையும் வழங்கி வறிய நிலையில் நின்ற பாற்கடல் போலானாள்.

[பால - மிதிலை - 44 : 4]

816. "வள்ளி யோரின் வழங்கின மேகமே"

தம்மிடத்துள்ள பொருள்களை வழங்கும் வள்ளல் போல் மேகம் தன்னிடத்துள்ள நீரை வழங்கியது.

[பால - ஆற்று - 4 : 4]

817. "வள்ளுறை கழித்த வாள்போல்"

ஒரு பெண்ணின் கண், உறைநீங்கிய கூரிய வாள் போன்றது. [பால - உண்டா - 20 : 2]

818. "வறுத்து வித்திய வனையன வல்லியிற் பரற்கள்"

வறுத்து விதைக்கப்பட்ட வித்துக்கள் போலப் பரற்கற்கள் கிடந்தன. [அயோ - வனம் - 40 : 1]

819. "வன்றூ ணிடைத் தோன்றிய மாநர சிங்க மென்ன"

தூணிடையே தோன்றும் நரசிங்கமென, வாலி மலையில் தோன்றினான். [கிட்கி - வாலி - 29 : 4]

820. "வாங்கிய வரிவி லன்ன"

மாலியவான் வளைந்த வில்லைப் போன்ற வளைந்த உடலோடு தோன்றினான். [யுத்த - கும்ப - 12 : 2]

821. "வாடை, வீறிய பொழுது பூளை வீயென வீவனன்றே"

இராவணனின் இருபது தோள்களினால் காற்று வீசும் பொழுது, எதிர்க்கும் இராமன் பூளைப்பூப்போல அழிவான். [ஆரணி - சடாயுஉயிர் - 61 : 3 - 4]

822. "வாருடை வனமுலை மகளிர் சிந்தை போல்"

குதிரைகள் விலைமகளிரின் மனம் போலத் தாவின. [பால - எழுச்சி - 21 : 2]

823. "வாலி, வால்பிணித் தென்ன"

இந்திரசித்து எய்த நாகபாசம், வாலியின் வால் இராவணனின் தோள்களைக் கட்டியவாறு, அனுமனின் தோள்களைப் பிணித்தது. [யுத்த - நாக - 191 : 3 - 4]

824. "வாலோடு, ஆகாய முற்ற கதலிக்குவமை யானுன்"

அங்காரதாரையின் குடலைக் கைக்கொண்டு விண்ணில் பறந்த அனுமன், வாலுடன் விண்ணில் பறக்கும் காற்றுடிபோலத் தோன்றினுன்.

[சுந்தர - கடறுவு - 84 : 3 - 4]

825. "வாழை மடல்சூழ்
ஈரத் தண்டென விற்றல வெல்லாம்"

பிரகலாதனது மார்பிலே அழுந்திய யானைத் தந்தங்கள் வாழைத் தண்டென இற்றன.

[யுத்த - இரணி - 97 : 3 - 4]

826. "வாழ்நிலக் குலக்கொழுந்தை மௌலி சூட்டி யன்னவே"

மண்ணிடையே தோன்றும் அழகிய கோபுரம், நிலமகளுக்குச் சூட்டிய முடிமணி போலத் தோன்றியது.

[பால - நகர - 26 : 4]

827. "வாழ்மனை புகுந்த தாண்டோர் மாசுணம் வரக்கண் டன்ன"

இராவணனுக்குச் சாளரம் வழியே வந்த தென்றல், வாழும் மனையில் மலைப்பாம்பு வந்தாற்போன்ற துன்பத்தைத் தந்தது. [ஆரணி - மாரி - 164 : 3]

828. "வாளரா நுங்கிய மதியும் போலவே"

மேனி வெப்பத்தால் வாடிய சீதையின் முகம் வாள் போன்ற கொடிய பாம்பினுல் விழுங்கப்பட்ட சந்திரன் போன்றிருந்தது. [பால - மிதிலை - 47 : 4]

829. " வாளிமேல் வாளி தூர்த்தார் மழையின்மேன் மழைவந் தன்னார் "

இந்திரசித்தும் இலக்குவனும் எதிரெதிர் நின்று அம்புகளை எறிந்தது, இருமேகங்கள் எதிரெதிர் நின்று மழையினைப் பொழிவது போல அமைந்தது.

[யுத்த - நாக - 101 : 4]

830. " வாளியின் விசைகொடு "

அனுமனை நோக்கி, அரக்கர் வில்லிலிருந்து பாயும் அம்பென வந்தனர். [சுந்தர - கிங்க - 18 : 4]

831. " வாளுறை யுற்றென மறைந்த மின்னெலாம் "

வாள், உறையினுள் செருகப்பட்டு மறைந்தாற் போல மின்னல்கள் மறைந்தன.

[கிட்கி - கார் - 106 : 4]

832. " வாளென வாளைகள் பாய "

செருக்களத்து வாள்போல வாளை மீன்கள் பொய்கையில் பாய்ந்தன. [கிட்கி - பம்பை : 21 : 1]

833. " வாளொக்கும் வடிக்கணாள் "

சீதை வாள்போற் கூரிய கண்ணையுடையாள்.

[கிடகி - நாட - 55 : 3]

834. " வானக மீனெலாம்
போன பின்பொலி வற்றது போன்றதே "

குரங்குகளில்லாத கிட்கிந்தை, விண்மீன்கள் நீங்கிய வானகம் போலப் பொலிவற்றுத் தோன்றியது.

[கிட்கி - கிட்கி - 40 : 3-4]

835. " வானநீர் சுண்டி மண்ணற வற்றி மறுகுற்ற
மீனே யென்ன மெய்தடு மாறி விழுகின்றாள் "

வான நீரும், மண்ணீரும் அற்றதால் துடிக்கும்

மீனெனக் கணவனை இழந்த கோசலை மெய்தடுமாறி விழுந்தனள். [அயோ - தைல - 64 : 3-4]

836. "வானவில்லை நிகர்த்ததவ் வாரியே"

மலர்கள், பொன் போன்ற பலநிறப் பொருள்களைக் கவர்ந்து வந்த வெள்ளம், பல நிறத்தோடு தோன்றும் வானவில்லை நிகர்த்தது. [பால - ஆற்று - 8 : 4]

837. "விசிறும், எய்த்த மெய்ப்பெரிய கேழலென"

முட்களையுடைய முள்ளம்பன்றி போல மேனியெங்கும் தைத்த அம்புகளை, விராதன் தன் உடம்பைச் சிலிர்த்து உதறினன். [ஆரணி - விராத - 33 : 3-4]

838. "விசைதிறந் துருமு வீழ்ந்த தென்ன"

இடி விழுந்தாற் போல இரணியன் தூணைப் புடைத்தான். [யுத்த - இரணி - 127 : 2]

839. "விடமெ ழுந்தது போனெடு விண்ணினைத்
தொடவு யர்ந்தவன்"

விடம் ஒருருவம் கொண்டு எழுந்தாற்போலக் கும்பகர்ணன் விண்ணளாவ நின்றான்.

[யுத்த - கும்ப - 76 : 1-2]

840. "விரிசுடர் விளக்கங் கண்ட விட்டில்போல் வீழ்வ"

மாயமானின் அழகில் மயங்கி, விளக்கைக் கண்ட விட்டில் போல உயிரினங்கள் வந்து வீழ்ந்தன.

[ஆரணி - மாரீ - 229 : 4]

841. "விரிமழைக் குலங்கிழித் தொளிரு மின்னென"

மேகக் கூட்டத்தைப் பிளந்து வரும் மின்னல் போலக் கருநிறமுடைய அரக்கியர் நடுவே சீதை தோன்றினள். [சுந்தர - காட்சி - 63 : 1]

842. " விலங்கன் மேருவும் வேர்பறித் தாலென வீழ்ந்தான் "

மேருமலை நிலைகுலைந்து விழுந்ததுபோல, வாலி இராமபாணத்தால் தாக்குண்டு விழுந்தான்.

[கிட்கி - வாலி - 58 : 4]

843. " விலைமாதர் கலையல்குற், புக்கவரை யொத்தன "

பாகருக்கும் அடங்காத களிறுகள் நீர்நிலையிலிருந்து வெளியேறாது, நன்னெறிக்கண் செல்லாத காமுகர் பொதுமகளிர் வசப்பட்டுக் கிடப்பது போலத் தங்கின.

[பால - வரை - 26 : 4]

844 " விலைமா தர்கண்யா ரும்விழுந் தெனவே "

பொருட் பெண்டிரிடம் மயங்கும் காமுகர் போல, மாயமானைக் கண்டு பிறமான்கள் மயங்கி வந்தன.

[ஆரணி - மாரீ - 214 : 4]

845. " விலையின் மாதரை யொத்ததவ் வெள்ளமே "

எல்லாப் பொருளையும் கவர்ந்து சென்ற வெள்ளம், பொருட்களைக் கவர்ந்து நீங்கிச் செல்லும் விலைமாதரைப் போன்றது.

[பால - ஆற்று - 6 : 4]

846. " வில்லிடைச் சரமென விசையின் வீழ்ந்தன "

வில்லிலிருந்து செல்லும் அம்புகள்போல, மழைத்துளிகள் சொரிந்தன.

[கிட்கி - கார் - 16 : 2]

847. " வில்லொக்கும் நுதல் "

சீதையின் நெற்றிக்கு வில்லை உவமையாகக் கூறலாம்.

[ஆரணி - மாரீ - 74 : 1]

884. " விழியின், கயல்புடை பெயர்வன "

மகளிரின் கண்களைப் போலக் கயல் மீன்கள் பிறழ்ந்தன.

[பால - நாட்டு - 42 : 3-4]

849. "விழுதுடை யாலன்ன மெய்யன்"

முதல் நாள் போரில் படைக்கலம் இழந்த இராவணன் வெறுங்கையனாய், விழுதுடைய ஆலமரமெனத் தலைசாய்த்து நாணி நின்றான். [யுத்த - முதற் - 250 : 4]

850. "விளக்கின மொத்த காண்போர் விழியொத்த விளையின் மென்பூ"

கூத்தினைக் காண்போர் விழியொத்துக் கருவிள மலர்கள் தோன்றின. [கிட்கி - கார் - 32 : 3-4]

851. "விளக்கின்வீழ் விட்டிலன்ன"

இராவணன் சீதையை விரும்பிக் கவர்ந்ததனால், அவன் விளக்கில் விழும் விட்டிலின் நிலையுறுவான் என்று சுக்கிரீவன் கூறினான். [யுத்த - மாயாசீதை - 72 : 3]

852. விளக்கெதிர் வீழ்ந்த விட்டிற் பான்மைய"

விளக்கின் முன்னர் வீழும் விட்டில் போலத் தனக்கு முன்னே போரிடவரும் குரங்கினம் அழியும் என்று இராவணன் சீதையிடம் நவின்றான்.

[யுத்த - மாயாசனக - 27 : 4]

853. "வீங்கிய வெஞ்சின வீழ்மத வெம்போர் ஓங்க லுரிக்கு முருத்திர னொத்தான்"

அயோமுகியின் கைகளில், மார்பில் அடங்கிய இலக்குவன், கரியினை உரித்துப் போர்த்திய சிவபெருமானை ஒத்தனன். [ஆரணி - அயோமுகி - 61 : 3 - 4]

854. "வீயுமுயிர் மீளும். மருந்தாமென லாகியது"

அனுமன் காட்டிய மணியாழி, அழியும் உயிர்

அறியாமல் சாக்கவல்ல மருந்துபோலத் தேவிக்குத் துன்பத்தை நீக்கி இன்பத்தை அளித்தது. [சுந்தர - உருக் - 69 : 3]

855. "வீரன்வெஞ் சிலையிற் கோத்த அம்பென விசையிற் போனான்"

இராமனின் வில்லிலிருந்து புறப்பட்டுச் சென்ற அம்புபோல அங்கதன் விண்ணில் பறந்து சென்றான்.

[யுத்த - அங்க - 13 : 2]

856. "வெங்கணுரு மேறன"

பேரிடி போன்ற தொழிலினன் விராதன்.

[ஆரணி - விராத - 19 : 4]

857. "வெங்கதிர் கரந்ததொரு மேகமென லானான்"

சூரியனை மறைக்கும் மேகம் போல், தன்னுடன் போரிட்ட சுக்கிரீவனைத் தன்கைகளால் இராவணன் மறைத்தான். [யுத்த - மகுட - 20 : 4]

858. "வெஞ்சிலைப் புருவத்தாள்"

கொடிய வில்லைப் போன்ற புருவத்தாள் சீதை.

[அயோ - தைல - 52 : 3]

859. "வெண்ணிற நறைநிறை வெள்ளம்"

வெண்மையான கள்ளின் வெள்ளம்போல நிலவு பரந்து ஒளிவீசித் திகழ்ந்தது. [பால - உண்டா - 1 : 1]

860. "வெண்ணிற மேக மேன்மேல் விரிகடல் பருகு மாபோல்"

மேகம் நீரைப் பருகுவது போல வறியவர் சனகனின் பொருளை முகந்து சென்றனர்.

[பால - கார்முக - 39 : 3]

861. "வெண்ணெய்ச் சடையன்றன் புகழ்போ லெங்தும்
பரந்துளதால்"

சடையப்ப வள்ளலின் புகழ்போல நிலவொளி
எங்கும் பரவியது. [பால - மிதிலை - 73 : 4]

862. "வெதிரின் காட்டெரி போற்சரம் வித்தினுன்"

மூங்கிற்காட்டை எரிக்கும் தீயைப் போல,
இலக்குவனின் சரங்கள் அரக்கரை அழித்தன.
[யுத்த - நாக - 161 : 4]

863. "வெந்த வல்லிரும் பிடை நெடுங் கூடங்கள் வீழ்ப்பச்
சிந்தி யெங்கணுஞ் சிதறுவ போற்பொறி தெறிப்ப"

நெருப்புப் பொறி சிதறும் வண்ணம் உலைக்களத்
தில் காய்ச்சிய வல்லிரும்பைச் சம்மட்டி கொண்டு அடித்தாற்
போல வாலியும் சுக்கிரிவனும் கைகளால் மார்பிலும்
தோளிலும் ஒருவரையொருவர் தாக்கினர்.
[கிட்கி - வாலி - 45 : 1 - 2]

864. "வெந்தவிரி புண்வீழ், ஆசிலயில் வாளியென"

தேவமாதரின் ஆடையையும், ஊஞ்சலையும்
சார்ந்துவரும் வாடை ஆடவர்மீது பட்டு, வெந்த புண்ணில்
அம்பு நுழைந்தாலெனத் துன்பத்தைத் தந்தது.
[கிட்கி - கார் - 72 : 3 - 4]

865. "வெந்தீப், புண்மே னுழையத் துடிக்கின்றனள்
போற்பு ரண்டாள்"

இராவணனால் சடாயு அழிவடையக் கண்ட
சீதை, புண்மேல் அனல் நுழைந்தாலெனத் துடித்துப்
புரண்டாள். [ஆரணி - சடாயுஉயிர் - 122 : 3 - 4]

866. '' வெந்தீவினைப் பயனொத்தன ''

இராவணன் எறிந்த அம்புகள், அவன் செய்த தீவினைகள் போலப் பயனளிக்கவில்லை.

[யுத்த - இராவ - வதை - 52 : 4]

867 '' வெந்துறு புண்ணின் வேனுழைந் தாங்கு ''

அசோக வனத்தில் சீதையைக் காணவந்த இராவணன் மீது எறிந்த மன்மத பாணம், வெந்த புண்ணில் வேல்நுழைந்தது போலத் துன்புறுத்தியது.

[சுந்தர - நிந்தனை - 14 : 2]

868. '' வெப்பக லாவெரி வெந்தழல் வெந்த
செப்பகல் வெண்ணெயி னேன்மை ''

'எதிர்ப்பவரின் உயிரினை, நெருப்பில் வெந்த செப்பகலில் இட்ட வெண்ணெய் போலாகும்படிச் செய்வோம்', என்று அரக்கர் வீரவுரை ஆற்றினர்.

[யுத்த - படைத்தலைவர் - 18 : 3 - 4]

869. '' வெம்பிணி பற்றினு லென வந்தெ ழுந்தது மாரியே''

நோயின்மீது நோய் தொடர்வதுபோல, முற்பெயல் மாரியை அடுத்துப் பிற்பெயல் மாரிவந்து இராமனை நலிவுறச் செய்தது. [கிட்கி - கார் - 70 : 4]

870. '' வெம்மடங்கல் வெகுண்டனைய சினமடங்க ''

இராவணன் இறக்கும்பொழுது, கொடிய சிங்கம் வெகுண்டாற்போன்றிருந்த அவனுடைய முகம் மாறியதோடு மனமும் அடங்கியது. [யுத்த - இராவ - வதை - 201 : 1]

871. ''வெம்முலை மகளிர் வெள்ள மினென விளங்க விண்ணிற்
சும்மைவான் மதியங் குன்றிற் ரேன்றிய தென ''

வானர மகளிரால் சூழப்பட்ட சுக்கிரீவனுக்கு,

விண்மீன்களால் சூழப்பட்ட சந்திரன் உவமை.

[கிட்கி - கிட்கி - 104 : 1 - 2]

872. "வெயிலிடைத் தந்த விளக்கென வொளியிலா மெய்யாள்"

வெயிலில் வைக்கப்பட்ட விளக்குப் போலச் சீதை அசோகவனத்தில் ஒளியிழந்து காணப்பட்டாள்.

[சுந்தர - காட்சி - 4 : 2]

873. "வெயிலுடை நாளிலுற்ற வெண்ணெய்போல் வெதும்பிற் றன்றே"

இதயமாம் சிறையில் சீதையை வைத்த இராவணனின் மனம், வெயிலிடை உருகும் வெண்ணெய் போலானது.

[ஆரணி - மாரீ - 85 : 4]

874. "வெயிற்சுடு கோடை தன்னி லென்பிலா வுயிரின் வேவாள்"

வெயிலில் துடிக்கும் எலும்பற்ற புழுப்போலத் தயரதன் மறைவால் கோசலை துடித்தாள்.

[அயோ - தைல - 62 : 4]

875. "வெய்யவன் தன்னைச் சேர்ந்த நீனிற மேக மொத்தான்"

போர்க்களத்தில் வீழ்ந்த இலக்குவனைத் தழுவிக் கண்ணீர் சொரிந்த இராமன், மழைத்துளி சிந்த, விண்ணில் சூரியனைச் சார்ந்திருக்கும் மேகமென விளங்கினான்.

[யுத்த - நாக - 221 : 4]

876. "வெவ்வழ லுற்ற மெல்லென் மெழுகென வழியு மெய்யன்"

சீதையை எண்ணி இராமன், நெருப்பில் உருகும்

மெழுகென நைந்துருகினன். [சுந்தர - உருக் - 83 : 3]

877. "வெவ்விடத் தினைமறுகு தேவர் தானவர் வெருவல்
தவ்விடத் தனியருளு தாழ்சடைக் கடவுளென"

பாற்கடலில் எழுந்த நஞ்சு கண்டு அஞ்சிய தேவரையும் அசுரரையும் தேற்றிய சிவபெருமான் போல, இராமனையும் இலக்குவனையும் கண்டஞ்சிய வானரரை அனுமன் தேற்றினன். [கிட்கி - அனும - 5 : 2 - 3]

878. "வெவ்விய புளிஞ ரென்ன"

கொடியவேடர் போன்று இராமன் தன்னைத் தாக்கினன் என்று வாலி குறை கூறினன்.

[கிட்கி - வாலி - 116 : 3]

879. "வெவ்வினை வந்தென வருவர்"

கொடிய வினை வருவது போல அரக்கர் வந்தனர். [கிட்கி - கலன் - 30 : 3]

880. "வெவ்வுலை யுற்ற வேலை வாளினை வென்ற கண்ணாள்"

உலைக்களத்துற்ற வேலை, வாளை வென்ற கண்ணழகு பெற்றவள் சீதை. [ஆரணி - மாரீ - 72 : 3]

881. "வெள்ளம் போற்கண்ணி யழுதலும்"

வெள்ளநீர் பாய்வதுபோலச் சீதை கண்ணீர் உகுத்தாள். [யுத்த - மகுட - 5 : 3]

882. "வெள்ளிக்கும்பத் திளங்கமுகின் பாளை போன்று
விரிந்துளதால்"

கும்பத்தில் நாட்டிய கமுகம்பாளை நிலவின் கற்றை போன்றது. [பால - மிதிலை - 72 : 4]

883. "வெள்ளிடைக் கரந்த பூளை போன்றது"

வெற்றிடத்தில் காற்றின்முன் வைக்கப்பட்ட பூளைப்பூண்டு போன்று அரக்கர் படைமுன் வானரப்படை அழிவுற்றது. [யுத்த - வேலை - 17 : 3 - 4]

884. "வெற்பு மீதுதீ, எரிப்பவு மொத்தன"

மலையுடைத் தீப்போல மின்னல் மின்னியது. [கிட்கி - கார் - 7 : 2 - 3]

885. "வெற்றித் திருவின் குளிர்வெண் ணகையாற்
சுற்றிக் கிளருஞ் சுடர்தோள் வளையான்"

இந்திரனின் வாகுவலயம் திருமகளின் புன்னகை போல் விளங்கியது. [ஆரணி - சரபங்க - 10 : 3 - 4]

886. "வேசையர், உலைவுறு மனமென வுலாய தூதையே"

பொருட்பெண்டிர் மனமென மழைக்காற்று சுழன்றது. [கிட்கி - கார் - 12 : 3 - 4]

887. "வேடன்கைப் பார்ப்புறப் பேதுறுந்
தூவி யன்ன மன்னுள்"

அரக்கரிடம் அனுமன் அகப்பட்டான் என்ற செய்தி கேட்ட சீதை, வேடன் கைப்பட்ட குஞ்சு குறித்து வருந்தும் தாய்ப்பறவையான அன்னம் போன்றுள். [சுந்தர - பிணி - 31 : 3 - 4]

888. "வேதங்கள், பொய்யில் தன்னைப் புலன்தெரி
யாமைபோல்"

திருமாலின் ஐம்படைகள் அருகில் வந்து துணை செய்ய நிற்கவும், வேதங்கள் பொய்யில்லாத தன்னைத்

தம்மறிவால் அறியாதவாறு போல, இராமனும் அவற்றைக் காணுது நின்ருன். [யுத்த - இராவ - வதை - 30 : 3 - 4]

889. "வேதச், சொல்லெனத் தொலேயா வாளித் தூணி'யும்"

வேதச் சொற்கள் போலத் தொலேயாத அம்புகளைக் கொண்டது தூணிரம்.

[யுத்த - மூலபல - 70 : 4]

890. "வேதத், தோட்டியின் 'ஞுடக்கி னிற்குந்
துணைக்கைம்மா லியானே யன்ஞன்"

வேதமாகிய அங்குசத்தின் கட்டிற்கு அடங்கி நிற்கும் இரு துதிக்கைகளே உடைய யானே போன்ற இராமன்.

[யுந்த - நாக - 242 : 3-4]

891. "வேத மொக்கும்"

வேதம்போல அறிவினுல் அளந்து அறிய வொண்ணுத நிலேயில் மதில் விளங்கியது.

[பால - நகர - 9 : 1]

892. "வேத மொத்தனன் மாருதி வேதத்தின் சிரத்தின்
போத மொத்தன னிராமன்"

அனுமனின் தோளில் இராமன் நின்றபோது, அனுமன் வேதம் போலவும், இராமன் வேதம் கூறும் பொருள் போலவும் தோன்றினர்.

[யுத்த - முதற் - 221 : 3-4]

893. "வேதவே தாந்தங் கூறும் பொருளினே விரிக்கின்ருர்
போல்"

வேதவேதாந்தங்கள் கூறும் பொருளே விரித்துரைப்பவர் போலத் தூதுவர், இராவணனுக்குப் படையை

அணி அணியாகப் பிரித்து விரித்துக் கூறினர்.

[யுத்த - படைக் காட்சி - 9 : 3]

894. "வேத்தவை கீழுளோர்கள் கீழ்மையே விளைத்தார் மேலாஞ்
சீர்த்தவர் செய்யத் தக்க கருமமே செய்தா ரென்ன"

அரசவையில் கீழுளோர் செய்யும் சிறுமைச் செயலை மேலுளோர் நற்செயலால் மாற்றுவதுபோல, அரக்கியர் மதுவுண்ட மயக்கத்தினால் அவருடைய மேகலையும் துகிலும் நெகிழ்ந்து கீழே விழ, விரிந்த கூந்தல் தாழ்ந்து அவமானம் நேரிடாதபடிக் காத்தது.

[யுத்த - களியா - 9 : 3-4]

895. "வேந்தன் புகழென"

வேந்தன் புகழ் பெருகுவது போல, வெள்ளம் தழைத்தது. [பால - ஆற்று - 5 : 2]

896. "வேமெரி யதனிடை விறகிட் டென்னவே"

எரியும் நெருப்பில் விறகைப் போட்டது போல மன்மதனின் மலரம்பு சீதையை வாட்டியது.

[பால - மிதிலை - 42 : 4]

897. "வேயிடைத் தோளினள்"

மூங்கிலைப் போன்ற திரண்ட தோளினை உடையவள் தாரை. [கிட்கி - வாலி - 13 : 2]

898. "வேலும் கூற்றமு மென்னு மிவையெல்லாம்
வெல்லும்"

சீதையின் கண்கள் வேலினையும், கூற்றத்தை

யும் வெல்லும். [பால - மிதிலை - 32 : 1-2]

899. "வேலையிற் கூலத்து மணலினும் பலரால்"

அரக்கர் கடல் மணலினும் பலராவர்.

[யுத்த - மூலபல - 41 : 4]

900. "வேலையுந் திரையும்போல் வேறுபாடிலான்"

கடலும் அலையும் போல வேறுபாடில்லாதவன் நாராயணன் என்று இரணியனுக்குப் பிரகலாதன் அறிவுறுத்தினன். [யுத்த - இரணி - 77 : 4]

901. "வேலைவாய் முடுகு மாறுபோல"

கடலில் சென்று சேரும் ஆறுபோல, விசுவாமித்திரன் அருள, அளவில்லாத வித்தைகள் இராமனை வந்தடைந்தன. [பால - கையடை - 15 : 2]

902. "வேலொக்கும் விழி"

சீதையின் கண் வேலை ஒக்கும்.

[ஆரணி - மாரீ - 74 : 1]

903. "வேழத் தரசொன்றைப் பிரிந்தா ரன்பிற்
றாழ்பிடி யென்னப் பிரிவுற்றாள்"

களிற்றொருத்தலைப் பிரிந்த பிடி போலத் தயரதனை இழந்த கோசலை துன்புற்றாள்.

[அயோ - தைல - 68 : 3-4]

904. "வைத்த மாநிதி மண்ணொடு மறைந்தனர் வாரிப்
பொய்த்து ளோர்கொளத் திகைத்துநின் றானையும்
போன்றான்"

பிறர் அறியாவண்ணம் மட்கலத்திட்டு

மறைத்து வைத்த பொற்குவியலைக் கள்வர் கவர உழல் பவனைப் போலப் பர்ணசாலையோடு சீதையைக் காணாத இராமன் பெருந்துன்பமுற்றான்.

[ஆரணி - சடாயு உயிர் - 159 : 3-4]

905. ''வையக முழுவதும் வறிஞ னோம்புமோர்
செய்யெனக் காத்தினி தரசு செய்கின்றான்''

வறியவன் தன் நிலத்தைக் காப்பது போல நாட்டைத் தயரதன் காத்து வந்தான்.

[பால - அரசி - 12 : 3-4]



# உவமைப் பொருள் - அகரவரிசை

| வரிசை எண் | உவமைப் பொருள் | அகரவரிசை எண்கள் |
|---|---|---|
| 1 | அகப்பை | 78 |
| 2 | அங்குசம் | 90, 333 |
| 3 | அசுரர் | 877 |
| 4 | அசுரன் | 589 |
| 5 | அஞ்சனம் | 6, 796 |
| 6 | அணு | 13 |
| 7 | அமிழ்தம் | 9, 17, 18, 19, 20, 21, 22, 49, 50, 246, 448, 455, 548, 554, 652, 781 |
| 8 | அம்பு | 101, 368, 398, 427, 830, 846, 855, 864 |
| 9 | அம்மி | 532 |
| 10 | அரக்கர் | 26, 223, 681 |
| 11 | அரக்கு | 178 |
| 12 | அரசன் | 27, 374, 638, 711, 895 |
| 13 | அருக்கன் | 35, 36, 38, 141, 142, 143, 163, 184, 255, 320, 331, 375, 377, 385, 411, 413, 414, 415, 608, 631, 790, 793, 857, 875 |

# உவமை - படல - அகரவரிசை

| வரிசை என் | படலம் | காண்டம் |
|---|---|---|
| 1. | அகத்தியப் படலம் | ஆரணிய காண்டம் |
| 2. | அகலிகைப் படலம் | பால காண்டம் |
| 3. | அக்ககுமாரன் வதைப் படலம் | சுந்தர காண்டம் |
| 4. | அங்கதன் தூது படலம் | யுத்த காண்டம் |
| 5. | அதிகாயன் வதைப் படலம் | யுத்த காண்டம் |
| 6. | அயோமுகிப் படலம் | ஆரணிய காண்டம் |
| 7. | அரசியற் படலம் | பால காண்டம் |
| 8. | அனுமப் படலம் | கிட்கிந்தா காண்டம் |
| 9. | ஆறுசெல் படலம் | கிட்கிந்தா காண்டம் |
| 10. | ஆறுசெல் படலம் | அயோத்தியா காண்டம் |
| 11. | ஆற்றுப் படலம் | பால காண்டம் |
| 12. | இந்திரசித்து வதைப் படலம் | யுத்த காண்டம் |
| 13. | இரணியன் வதைப் படலம் | யுத்த காண்டம் |
| 14. | இராமன் தேரேறு படலம் | யுத்த காண்டம் |
| 15. | இராவணன் களங்காண் படலம் | யுத்த காண்டம் |
| 16. | இராவணன் சோகப் படலம் | யுத்த காண்டம் |
| 17. | இராவணன் தேரேறு படலம் | யுத்த காண்டம் |
| 18. | இராவணன் மந்திரப் படலம் | யுத்த காண்டம் |
| 19. | இராவணன் வதைப் படலம் | யுத்த காண்டம் |
| 20. | இராவணன் வானரத்தானை காண் படலம் | யுத்த காண்டம் |

| | | |
|---|---|---|
| 21. | இலங்கை எரியூட்டு படலம் | சுந்தர காண்டம் |
| 22. | இலங்கை காண் படலம் | யுத்த காண்டம் |
| 23. | இலங்கை கேள்விப் படலம் | யுத்த காண்டம் |
| 24. | உண்டாட்டுப் படலம் | பால காண்டம் |
| 25. | உருக்காட்டுப் படலம் | சுந்தர காண்டம் |
| 26. | உலாவியற் படலம் | பால காண்டம் |
| 27. | ஊர்தேடு படலம் | சுந்தர காண்டம் |
| 28. | எதிர்கொள் படலம் | பால காண்டம் |
| 29. | எழுச்சிப் படலம் | பால காண்டம் |
| 30. | ஒற்றுக் கேள்விப் படலம் | யுத்த காண்டம் |
| 31. | கங்கைப் படலம் | அயோத்தியா காண்டம் |
| 32. | கடருவு படலம் | சுந்தர காண்டம் |
| 33 | கடிமணப் படலம் | பால காண்டம் |
| 34. | கரன்வதைப் படலம் | ஆரணிய காண்டம் |
| 35. | கலன்காண் படலம் | கிட்கிந்தா காண்டம் |
| 36. | கவந்தப் படலம் | ஆரணிய காண்டம் |
| 37. | களியாட்டு படலம் | யுத்த காண்டம் |
| 38. | காட்சிப் படலம் | சுந்தர காண்டம் |
| 39. | கார்காலப் படலம் | கிட்கிந்தா காண்டம் |
| 40. | கார்முகப் படலம் | பால காண்டம் |

| | | |
|---|---|---|
| 41. | கிங்கரர் வதைப் படலம் | சுந்தர காண்டம் |
| 42. | கிட்கிந்தைப் படலம் | கிட்கிந்தா காண்டம் |
| 43. | குகப் படலம் | அயோத்தியா காண்டம் |
| 44. | கும்பகர்ணன் வதைப்படலம் | யுத்த காண்டம் |
| 45. | குலமுறை கிளத்து படலம் | பால காண்டம் |
| 46. | கைகேயி சூழ்வினைப் படலம் | அயோத்தியா காண்டம் |
| 47. | கையடைப் படலம் | பால காண்டம் |
| 48. | கோலங்காண் படலம் | பால காண்டம் |
| 49. | சடாயுகாண் படலம் | ஆரணிய காண்டம் |
| 50. | சடாயு உயிர் நீத்த படலம் | ஆரணிய காண்டம் |
| 51. | சம்பாதிப் படலம் | கிட்கிந்தா காண்டம் |
| 52. | சம்புமாலிவதைப் படலம் | சுந்தர காண்டம் |
| 53. | சரபங்கன் பிறப்பு நீங்கு படலம் | ஆரணிய காண்டம் |
| 54. | சவரி பிறப்பு நீங்குபடலம் | ஆரணிய காண்டம் |
| 55. | சித்திரகூடப் படலம் | அயோத்தியா காண்டம் |
| 56. | சீதை களங்காண் படலம் | யுத்த காண்டம் |
| 57. | சூர்ப்பணகைப் படலம் | ஆரணிய காண்டம் |
| 58. | சூளாமணிப் படலம் | சுந்தர காண்டம் |
| 59. | சேது பந்தனப் படலம் | யுத்த காண்டம் |
| 60. | தாடகை வதைப் படலம் | பால காண்டம் |

| | | |
|---|---|---|
| 61. | தாரை புலம்புறு படலம் | கிட்கிந்தா காண்டம் |
| 62. | திருவடி தொழுத படலம் | சுந்தர காண்டம் |
| 63. | திருவடி சூட்டு படலம் | அயோத்தியா காண்டம் |
| 64. | திருவவதாரப் படலம் | பால காண்டம் |
| 65. | தைலமாட்டு படலம் | அயோத்தியா காண்டம் |
| 66, | நகரப் படலம் | பால காண்டம் |
| 67. | நகர் நீங்கு படலம் | அயோத்தியா காண்டம் |
| 68. | நட்புக்கோட் படலம் | கிட்கிந்தா காண்டம் |
| 69. | நாகபாசப் படலம் | யுத்த காண்டம் |
| 70. | நாடவிட்ட படலம் | கிட்கிந்தா காண்டம் |
| 71. | நாட்டுப் படலம் | பால காண்டம் |
| 72. | நிகும்பலை யாகப் படலம் | யுத்த காண்டம் |
| 73. | நிந்தனைப் படலம் | சுந்தர காண்டம் |
| 74. | பஞ்ச சேனாபதிகள் வதைப் படலம் | சுந்தர காண்டம் |
| 75. | படைக்காட்சிப் படலம் | யுத்த காண்டம் |
| 76. | படைத்தலைவர் வதைப் படலம் | யுத்த காண்டம் |
| 77. | பம்பைப் படலம் | கிட்கிந்தா காண்டம் |
| 78. | பரசுராமப் படலம் | பால காண்டம் |
| 79. | பள்ளிப்படைப் படலம் | அயோத்தியா காண்டம் |
| 80. | பாசப் படலம் | சுந்தர காண்டம் |

| | | |
|---|---|---|
| 81. | பிணிவீட்டு படலம் | சுந்தர காண்டம் |
| 82, | பிரமாத்திரப் படலம் | யுத்த காண்டம் |
| 83. | பிலம்புக்கு நீங்கு படலம் | கிட்கிந்தா காண்டம் |
| 84. | புனல் விளையாட்டுப் படலம் | பால காண்டம் |
| 85. | பொழிலிறுத்த படலம் | சுந்தர காண்டம் |
| 86. | மகரக் கண்ணன் வதைப் படலம் | யுத்த காண்டம் |
| 87. | மகுட பங்கப் படலம் | யுத்த காண்டம் |
| 88. | மந்தரை சூழ்ச்சிப் படலம் | அயோத்தியா காண்டம் |
| 89. | மந்திரப் படலம் | அயோத்தியா காண்டம் |
| 90. | மயேந்திரப் படலம் | கிட்கிந்தா காண்டம் |
| 91. | மாயாசனக வதைப் படலம் | ஆரணிய காண்டம் |
| 92. | மாயா சீதைப் படலம் | யுத்த காண்டம் |
| 93. | மாரீசன் வதைப் படலம் | ஆரணிய காண்டம் |
| 94. | மிதிலைக் காட்சிப் படலம் | பால காண்டம் |
| 95. | மீட்சிப் படலம் | யுத்த காண்டம் |
| 96. | முதற்போர்புரி படலம் | யுத்த காண்டம் |
| 97. | மூலபல வதைப் படலம் | யுத்த காண்டம் |
| 98. | வருணனை வழிவேண்டு படலம் | யுத்த காண்டம் |
| 99. | வரைக்காட்சிப் படலம் | பால காண்டம் |
| 100. | வனம்புகு படலம் | அயோத்தியா காண்டம் |

| | | |
|---|---|---|
| 101. | வாலிவதைப் படலம் | கிட்கிந்தா காண்டம் |
| 102. | விராதன் வதைப் படலம் | ஆரணிய காண்டம் |
| 103. | வீடணன் அடைக்கலப் படலம் | யுத்த காண்டம் |
| 104. | வேலேற்ற படலம் | யுத்த காண்டம் |
| 105. | வேள்விப் படலம் | பால காண்டம் |





தெ. துரைசாமி M. A.

இவர் திருநெல்வேலி மாவட்டத்தைச்சார்ந்த வண்ணூர்பேட்டை என்னும் சிற்றூரில் 1933-ஆம் ஆண்டு பிறந்தார். இவருடைய பெற்றோர் வ. உ. தெய்வநாயகமும்' வள்ளியம்மாளும் ஆவர். இவர் தனது உயர்நிலைக் கல்வியையும், கல்லூரிக் கல்வியையும் ம. தி. தா. இந்து உயர்நிலைப் பள்ளியிலும், கல்லூரியிலும் பயின்று, பட்டமேற்படிப்பினைச் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் தொடர்ந்து முடித்தார். 1956-ஆம் ஆண்டில் இருந்து திருச்சி தேசியக்கல்லூரியில் தமிழ்த் துறையில் பணியாற்றி வருகிறார். இவருக்குச் சங்க இலக்கியங்களிலும், பிற இலக்கியங்களிலும் நாட்டம் இருப்பினும், குறிப்பாகக் கம்பராமாயணத்தில் ஈடுபாடு அதிகம் எனலாம். கம்பராமாயணத்தை நாடக வடிவில் **கம்ப நாடகம்** என்னும் பெயரில் 1964-ஆம் ஆண்டு எழுதி வெளியிட்டுள்ளார். 1978-ஆம் ஆண்டில் சொல்லின் செல்வன் அனுமனைப்பற்றி **இராமதூதன்** என்னும் பெயரில் ஒரு நூலை எழுதியுள்ளார். **கம்பரின் உவமை விளக்கம்** என்னும் இந்த நூலில் உவமைகளை அகரவரிசைப்படுத்தி, ஆராய்ச்சி முன்னுரையுடன் உவமைப்பொருள் அகராதி, படல அகராதி ஆகியவற்றையும் தந்து 1980-ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளார்.

விஜய் பிரிண்டர்ஸ் & பப்ளிஷர்ஸ், உறையூர், திருச்சி-3.